# காயத்ரியின் அறிவியல் தத்துவம்

## The Great Science and Philosophy of Gayatri




**பண்டித ஸ்ரீராம்சர்மா ஆச்சார்யா**



# காயத்ரியின் அறிவியல் தத்துவம்

## (THE GREAT SCIENCE AND PHILOSOPHY OF GAYATRI)

ஆசிரியர்

வேதமூர்த்தி பண்டித ஸ்ரீராம்சர்மா ஆச்சார்யா

மொழிபெயர்ப்பு

ச. கோபாலகிருஷ்ணன் பி.எ., பி.டி.,

வெளியீடு

சாந்தி குஞ்ச்

ஹரித்துவார், உத்தராஞ்சல் - 249 411.

போன் : (01334) 260602, 260403, 260309, 261328

E-mail : mail@gayatripariwar.com

கிடைக்குமிடம்

யுக சக்தி காயத்ரி கேந்திரா

சென்னை - 600 010. போன் : 044-26454109

E-mail : yugsaktikendra@rediffmail.com

புத்தகபெயர்: காயத்ரியின் அறிவியல் தத்துவம்

ஆசிரியர்:

வேதமூர்த்தி பண்டிதர் ஸ்ரீராம்சர்மா ஆச்சார்யா

மொழிபெயர்ப்பு:

ச. கோபாலகிருஷ்ணன் பி.எ., பி.டி.,

தலைமையகம்:

சாந்தி குஞ்ச்

ஹரித்வார், உத்தராஞ்சல் - 249 411.

போன் : (01334) 260602, 260403, 260309, 261328

E-mail : mail@gayatripariwar.com, web: awgp.org

வெளியீடு & அச்சிடுபவர் :

காயத்ரி தபோபூமி, மதுரா (உ.பி.)

Pin : 281003, Ph : 0565-2530128, 2530399, Fax : 2530200

கிடைக்குமிடம் :

யுக சக்தி காயத்ரி கேந்திரா

சென்னை. ஃபோன் : 044-26454109

E-mail : yugsaktikendra@rediffmail.com

மூன்றாம் பதிப்பு : year - 2006

விலை– ரூ. 28.00

# பொருளடக்கம்

# ஸ்ரீராம் சர்மா ஆசார்யாவின் வாழ்க்கைக் குறிப்புகள்

காயத்ரியின் மகத்தான அறிவியல் தத்துவம் என்னும் இந்த நூல் The Great Science and Philosophy of Gayatri என்ற ஆங்கில நூலின் தமிழாக்கம். இந்த நூலின் ஆசிரியர் பண்டிட் ஸ்ரீராம் சர்மா ஆசார்யா, ஒரு சிறந்த விடுதலைப் போராட்ட வீரர். காந்தி அடிகள், வினோபா பாவே, மதன்மோகன் மாளவியா போன்ற பெரியார்களுடன் நெருங்கிய தொடர்புடையவர். அவர்களுடைய விடுதலைப் போராட்ட இயக்கங்களில் நேரடிப் பங்கு கொண்டதுடன், அவர்களுடைய சீர்திருத்த இயக்கங்களிலும் உயிர்நாடியாக நின்று உழைத்தவர்; அவர்களின் ஆழ்ந்த அன்பையும் அருளாசியையும் பெற்றவர். இவர் இந்திய விடுதலைப் போராட்டத்தில் ஆற்றிய தொண்டுகளையும், அடைந்த துன்பங்களையும் பற்றி உத்தரப் பிரதேச அரசின் செய்தித்துறை வெளியிட்டுள்ள ஆக்ரா பிரிவின் போராட்ட வீரர்கள் என்ற நூலில் விரிவாகக் காணலாம். இவர் இந்திய விடுதலைக்காக ஆற்றிய தொண்டுகளைப் பாராட்டும் வகையில் இந்திய அரசின் தபால்துறை இவருடைய உருவப் படத்தைத் தாங்கிய ஒரு ரூபாய் மதிப்புள்ள அஞ்சல் தலையை வெளியிட்டுள்ளது. இந்த அஞ்சல் தலை கடந்த 27.6.1991 அன்று இந்தியத் தலைநகரான டில்லியில், இந்தியாவின் துணைக் குடியரசுத் தலைவரான சங்கர் தயாள் ஷர்மா அவர்களால் வெளியிடப்பட்டது. அப்பொழுது இந்திய அஞ்சல் துறை அவருடைய வாழ்க்கை வரலாற்றை இந்தி, ஆங்கிலம் ஆகிய இரண்டு மொழிகளிலும் ஒரு துண்டு வெளியீடாக (Brochure) வெளியிட்டது. அதன் தமிழ் வடிவம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீராம் சர்மா ஆசார்யா ஆன்மீக மறுமலர்ச்சியின் முன்னோடி; புத்துயிர் பெற்று எழும் சமூகத்தின் புனரமைப்புத் திட்டத்தின் ஆதார புருஷராயும், வழிகாட்டியாயும் இருந்தவர். அவர் 1911 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 20 ஆம் நாளன்று பிறந்தார். பிறப்பிடம் ஆக்ரா மாவட்டத்திலுள்ள ஆவல்கேடா. இளமை யிலேயே அவருக்கு சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபாடு ஏற்பட்டது. காந்தி அடிகள் ஒத்துழையாமை இயக்கத் திலும், உப்பு சத்தியாகிரகத்திலும் பங்கு கொண்டு, தான் "ஒரு அச்சமற்ற சத்யாக்ரகி" என்ற பெயரை நிலை நாட்டினார். 1933 ஆம் ஆண்டு, அவர் அசன்சால் சிறையில் இருந்த போது புகழ்வாய்ந்த தலைவர்களான மதன்மோகன் மாளவியா, ரஃபி அகமத் கித்வாய், ஸ்வரூப ராணி, நேரு போன்றோருடன் அவருக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. அவர் நாட்டுத் தொண்டில் முழுமனதுடன் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார். அதனால் எல்லோரும் அவரை "மட்டா" என்ற புனைப் பெயரால் அழைத்தனர். 1935-ஆம் ஆண்டு அவர் மகாத்மா காந்தியின் நல்வாழத்துக்களுடன் ஆன்மீக நெறியில் சமூகத்தை முன்னேற்றும் அரும்பணியில் இறங்கினார்.

ஆச்சார்யா ஒரு முனிவர்; ஒரு தீர்க்கதரிசி; ஒரு சீர்திருத்தவாதி. அவர் 21 ஆம் நூற்றாண்டு ஒரு நம்பிக்கை அளிக்கும் ஒளிமிக்க நூற்றாண்டாக இருக்கும் என்று தம் உள்ளுணர்வில் கண்டறிந்துள்ளார். அவர், இந்த நம்பிக்கையும், ஒளிமயமான எதிர்காலமும், கடின உழைப்பு, தெளிந்த அறிவு, தைரியம், நேர்மை இவற்றின் விளைவாகவே அமையும் என்று கூறுகிறார். அவர், தன்னைத் திருத்திக் கொள்வதே சமூகத்தைத் திருத்தும் வழி என்ற கொள்கையை வெளியிட்டுள்ளார். இந்த கொள்கையை அடிப்படையாகக் கொண்டு அவர் தனி மனித சீர்திருத்தம், குடும்ப சீர்திருத்தம் ஆகியவற்றின்

மூலம் சமூகத்தையே புனர்நிர்மாணம் செய்யும் செயல்திட்டம் ஒன்றை வரைந்துள்ளார்.

சமூகத்தை புனர்நிர்மாணம் செய்வதற்கும் முன்னேறச் செய்வதற்கும் தன்னை முழுமையாக அர்ப்பணம் செய்வதற்கு தன்னை ஒரு தகுதி உள்ளவன் ஆக்கிக் கொள்வதற்காக இமாலயம் சென்றார். அங்கு பல கடும் சோதனைகளுடன் கூடிய தவ வாழ்க்கை வாழ்ந்தார்; எல்லாச் சோதனைகளிலும் வெற்றிக் கண்டு சமூகப் புரட்சி, அற நெறிப் புரட்சி, ஆன்மீகப் புரட்சி ஆகிய முப்பெரும் புரட்சிகளின் முன்னோடியாகத் திகழ்ந்தார். “யுக நிர்மாண் யோஜனா”, “விசார் க்ராந்தி அபியான்” ஆகிய அமைப்புகளின் மூலம் தன் சீர்திருத்த இயக்கத்தைத் தொடங்கினார்.

அவருக்கே உரிய தனித்தன்மை வாய்ந்த ஆன்மீக எழுச்சி, ஆர்வத்தை ஊட்டி தலைமை தாங்கி செயல்படுத்தும் ஆற்றல், ஒழுங்கமைக்கும் செயல்திறம் ஆகியவற்றை ஆதாரமாகக் கொண்டு மனித சக்தியை ஆக்கப் பணிக்காக செயல்படுத்தும் ஒரு பெரிய சமூக மறுமலர்ச்சி இயக்கத்தைத் தொடங்கினார்; யாவரும் சமம் என்ற கொள்கையை நடைமுறைப்படுத்தப் போராடிய அறப்போர் வீரர்; பெண்கள் விழிப்புணர்ச்சி பெறுவதற்கும், பெண்கள் முன்னேற்றத்திற்கும் அதிகமான முக்கியத்துவம் கொடுத்தார். வரதட்சிணைக் கொடுமை, ஜாதிமத ஏற்றத்தாழ்வுகள், பிரிவினைக் கொள்கைகள் முதலான எல்லா சமூக சீர்கேடுகளையும் எதிர்த்து போராட்டம் நடத்தினார். “ஆண்களும், பெண்களும்; சமம் அதுபோல எல்லோரும் ஓர் குலம்; எல்லோரும் ஓர் இனம்; என்ற ஸ்லோகத்தை உண்டாக்கி வெளியிட்டார்.

ஆச்சார்யா, தேசிய புனர்வாழ்வுப் பரிசோதனை

களைச் செய்ய ஹறித்வாரில் "சாந்தி குஞ்ச்" என்ற கல்வி, கலை பண்பாட்டுக் கழகத்தை நிறுவினார். சாந்திகுஞ்சில் அளிக்கப்படும் அறநெறிக் கல்வி முறைகள் பல்வேறு வகையான வாழ்க்கை வேறுபாடுகளைக் கொண்ட மக்களுக்கும் மிகவும் பயனளிக்கின்றன. ஹறித்துவாரில் 'ப்ரம்ம வர்ச்சஸ் ஷோத் ஸம்ஸ்தான்' என்று ஒரு ஆராய்ச்சிக் கூடம் அமைக்கப்பட்டுள்ளது. அது சமயமும் அறிவியலும் ஒன்றை ஒன்று சார்ந்துள்ளன என்ற உண்மையை பரிசோதனைகள் மூலம் நிரூபிக்க முயன்று வருகிறது. சாந்திகுஞ்ச் நிறுவனத்துடன் தொடர்பு கொண்ட 3,000-க்கும் மேற்பட்ட சமூக சீர்திருத்த மையங்கள் இந்தியாவிலும் அயல்நாடுகளிலும் செயல் பட்டு வருகின்றன. அவைகள் சக்தி பீடங்கள் என்ற பெயரால் அழைக்கப்படுகின்றன.

உண்மையிலேயே "வசுதேவ குடும்பகம்" (உலகம் முழுவதும் ஒரே குடும்பம்) என்ற கருத்து, ஸ்ரீராம் சர்மா ஆச்சார்யா ஆரம்பித்துள்ள பல்வேறு செயல்திட்டங்கள் மூலம் நடைமுறைப் படுத்தப்பட்டு மக்களுக்கு உணர்த்தப் பட்டு வருகிறது. அவருடைய போதனைகளாலும் எடுத்துக்காட்டன வாழ்க்கையாலும் கவரப்பட்டு 2.5 மில்லியனுக்கும் அதிகமான தொண்டர்கள் தாங்களாகவே முன்வந்து எவ்வித பயனையும் எதிர்பார்க்காமல் அவரது இயக்கங்களில் சேர்ந்து பணிபுரிகிறார்கள். "மனிதனிடமுள்ள தெய்வீக சக்தியை வெளிக்கொணர வேண்டும்; மண்ணுலகத்தையே ஸ்வர்க்க லோகமாக மாற்றியமைக்க வேண்டும்" என்ற குறிக்கோளை அடைய அவர்கள் மிகுந்த ஆர்வத்துடனும் மன உறுதியுடனும் செயல்பட்டு வருகிறார்கள். இந்த மிக உயர்ந்த காயத்ரி பக்தர் 80 ஆண்டுகாலம் லட்சிய வாழ்க்கை வாழ்ந்து 2.6.1990 காயத்ரி ஜயந்தி அன்று தானே விரும்பி பூத உடலை நீத்து இறைநிலையை அடைந்தார்.






# காயத்ரி மந்திரம்

ஓம் பூர் புவஹ ஸ்வஹ
தத்ஸவிதுர்வரேண்யம்
பர்கோ தேவஸ்ய தீமஹி
தியோ யோநஹ ப்ரசோதயாத்

# 1. வேதமாதா காயத்ரி

வேதம் என்ற சொல்லுக்கு "அறிவு" என்பது பொருள். ரிக், யஜுர், சாம, அதர்வணம் என்பவை அறிவின் (வேதத்தின்) நான்கு கிளைகள். நல்வாழ்வு, தெய்வீக உணர்வு, தெய்வக் காட்சி, மன அமைதி, பிரம்ம நிவாரணம், கடமை உணர்வு, அன்பு, தவம், தொண்டு, கருணை போன்றவை ரிக் வேதத்தில் அடங்கும். வீரம், வலிமை, மனோதிடம், படையெடுப்பு, வெற்றி, புகழ், ஆற்றல், கௌரவம் போன்றவை ய்ஜுர் வேதத்தில் அடங்கும். விளையாட்டு, கேளிக்கை, இசை, கலை, இலக்கியம், பொறிவழி இன்பங்கள், இனிய கற்பனை, உதவி செய்தல், நன்றியுடைமை போன்றவை சாம வேதத்தில் அடங்கும். செல்வம், வளம் அடிப்படைத் தேவைகள், மருந்து, உணவு, உலோகங்கள், வாகனங்கள் போன்ற உலகியல் வாழ்க்கை சம்பந்தப்பட்டவையும் அதர்வண வேதத்தில் அடங்கும்.

மனிதனின் எண்ணங்கள், செயல்கள் யாவற்றையும் அறிவியல் அடிப்படையில் ஆராய்ந்தால் அவை யாவுமே இந்த நான்கு வேதங்களுக்குள் அடங்கியுள்ளதை உணர முடியும். எல்லா உயிரினங்களின் அறிவும் (1) ரிக் (நலவாழ்வு), (2) யஜுர் (ஆண்மை), (3) சாமம் (இன்ப உணர்வு), (4) அதர்வணம் (செல்வம்) என்ற நான்குவகை அறிவிற்குள் அடங்கும். ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என்பவை முறையே அறவாழ்வு (சமயநெறி), வீடுபேறு (மோட்சம்), இன்ப வாழ்க்கை, செல்வ வளம் என்றும் கருதப்படும். இந்த நான்கு வேதங்களே பிரம்மதேவனின் நான்கு முகங்கள். பிரம்மனுக்கு உண்மையில் ஒரு முகம்தான் உண்டு. எனினும் அவன் வாயிலிருந்து இந்த நான்கு வேதங்களும் வெளிப்படுவதால் அவன் நான்முகன்

என்று அழைக்கப்படுகிறான். உண்மையில் வேதம் (அறிவு) ஒன்றுதான். எனினும் அது நான்கு பிரிவுகளாக வெளிப்படுகிறது. திருமாலின் கரங்கள் நான்கு என்பதன் ரகசியமும் அவரிடமிருந்து நான்கு வேதங்களும் வெளிப்படுவதே. ஒரு மனிதனின் வளர்ச்சிப் படிகள் நான்கு அவைகளில் விளையாட்டே வாழ்வான குழந்தைப்பருவம்; சாமவேதத்தையும், பொருளும், வளமும் சேர்க்கும் காளைப்பருவம்; அதர்வண வேதத்தையும், இல்லற வாழ்வின் முதிர்ச்சி நிலையான - சமய உணர்வும் ஐம்புலக் கட்டுப்பாடும் நிறைந்த வானப்பிரஸ்தப் பருவம்; யஜுர் வேதத்தையும், கடைசியான துறவு நிலை என்னும் சன்யாசம் ரிக் வேதத்தையும் தம்முள் கொண்டவை. அதே போல் நான்கு வருணங்களில் பிராமணர் ரிக் வேத நெறியையும், க்ஷத்திரியர் (வீர மரபினர்) யஜுர் வேத நெறியையும், வைசியர் (வணிகர்) அதர்வண வேத நெறியையும், சூத்திரர் சாம வேத நெறியையும் பின்பற்றுவோர் ஆவர்.

பிரம்மா முதலில் சைதன்ய ஆற்றலான காயத்ரியைப் படைத்தார். அந்த சைதன்ய ஆற்றலின் நான்கு பிரிவுகளே நான்கு வேதங்கள். இவ்வாறு காயத்ரி தேவி நான்கு வேதங்களின் தாயாக இருப்பதால் அந்த அன்னை "வேத மாதா" என்று அழைக்கப்படுகிறாள். "நீர் தத்துவம்" திடநிலையில் பனிக்கட்டியாகவும், ஆவி நிலையில் மேகம், மூடுபனி ஆகியவையாகவும், வாயு நிலையில் ஆக்ஸிஜன், ஹைட்ரஜன் வாயுக்களாகவும், திரவ நிலையில் தண்ணீராகவும் காணப்படுவதைப் போலவும், நெருப்பு தத்துவம், ஜுவாலை, வெப்பம், ஒளி, இயக்கம் (பரவுதல்) ஆகிய நான்கு நிலைகளில் உணரப்படுவதைப் போலவும் நான்கு வேதங்களாகப் பரிணமிக்கிறாள் காயத்ரி அன்னை. நான்கு வேதங்களும் அவளுடைய பிள்ளைகள். இது வேதமாதா காயத்ரியின் சூட்சும

வடிவம்.

காயத்ரி உருவமெடுத்தும் பரிணமிக்கிறாள். பிரம்மா நான்கு வேதங்களைப் படைக்குமுன் 24 உயிர்மெய் எழுத்துக்களால் ஆன காயத்ரி மந்திரத்தைப் படைத்தார். அவற்றில் ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு ஆதார அடிப்படையாக சூட்சும ஆதாரமாக உள்ளது. அவற்றின் உயிர் ஒளி பெருகப் பெருக அவற்றின் கிளைகளாக நான்கு வேதங்கள் பிரிந்து வளர்ந்தன. ஒரு பெரிய ஆலமரம் ஒரு மிகச் சிறிய விதையினுள் மறைந்துள்ளது. அந்த சிறிய விதை முளைவிட்டு வளர்ந்து மரமாகும் போது அது எண்ணற்ற கிளைகளுக்கும், இலைகளுக்கும், மலர்களுக்கும், கனிகளுக்கும் தாயாகிறது. இவ்வாறு ஆரம்பத்தில் மிகவும் சிறியதாக இருந்த விதை மரமாக வளர்ந்து விரிவடையும்போது பல்லாயிரம் மடங்கு பெரிதாகி விடுகிறது. அதைப்போல காயத்ரி மந்திரத்தில் உள்ள 24 எழுத்துக்களும் ஒளிவிட்டு மலர்ந்து மிகவும் விரிவடைந்து நான்கு வேதங்களாக வெளிப்பட்டன.

கயிலைவாசனின் (தில்லை நடராஜர்) உடுக்கை உண்டாக்கிய 14 சப்தபேதங்களில் இருந்து இலக்கணம் தோன்றியது. இந்த 14 வகை ஒலி தத்துவங்களைக் கொண்டுதான் முதன்முதலில் பாணிணி முனிவர் இலக்கணத்தை வகுத்தார். அதன் திரிபுகளாகவும் விளக்கங்களாகவும் பின்னர் கணக்கற்ற இலக்கண நூல்கள் தோன்றின. அதைப்போல் காயத்ரி மந்திரத்தின் 24 எழுத்துக்களும் நான்கு வேதங்களாகவும் அவற்றின் கிளை நூல்களாகவும் தோன்றிப் பெருகின. காயத்ரி என்பது அடிப்படை சூத்திரம். வேத நூல்கள் அதன் விளக்கங்கள்.

## பிரம்மா சுடர் விளக்கேற்றலும் காயத்ரி வெளிப்பாடும்

பிரம்மா என்பவர் எல்லாவற்றிற்கும் மேலான தெய்வீக ஆற்றல். அவர் எல்லாவற்றையும் படைத்தவர். அவரிடமிருந்து "படைத்தல்" என்ற கருத்து சுடர்விட்ட

மாத்திரத்தில் ஒரு அதிர்வலை தோன்றியது. அதுவே 'சக்தி' அந்த சக்தி ஜடப் பொருள்களையும் (உயிர் இல்லாதவை) சேதனப் பொருள்களையும் (உயிர் உள்ளவை) படைத்தது. உயிரற்ற பொருள்கள் எல்லாம் பிரகிருதியின் (இயற்கை அன்னையின்) ஆட்சிக்கு உட்பட்டவை. உயிருள்ள பொருள்கள் எல்லாம் சாவித்ரியின் (பராசக்தி) ஆட்சிக்கு உட்பட்டவை.

படைப்பு பற்றி வேத நுல்கள் தரும் விளக்கம் : ஆதியில் திருமாலின் தொப்புளில் இருந்து ஒரு தாமரை மலர் வெளிப்பட்டது. அந்தத் தாமரை மலரிலிருந்து பிரம்மா தோன்றினார். பிரம்மா சாவித்ரியை படைத்தார். பிரம்மா, சாவித்ரி சேர்க்கையால் நான்கு வேதங்கள் தோன்றின. நான்கு வேதங்களிலிருந்து எண்ணற்ற துறைகளில் கணக்கற்ற வகைகளில் சுடர்விடும் அறிவு தோன்றியது.பிறகு பிரம்மா பஞ்சபூதங்களால் ஆன இந்த உலகைப் படைத்தார். இந்த விளக்கத்தில் மறைந்துள்ள உண்மைத் தத்துவம், வேதங்களில் "ஏகோஹம் பஹுஸ்யம்" (Ekoham bahusyam) என்று சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. அதாவது கடவுள் தானே பன்மடங்காக விரிவடைய விரும்பினார். அந்த விருப்பம் ஒரு மையத்திலிருந்து அதிர்வலைகளாக விரிந்து தாமரை மலராகியது. அந்த விருப்பம் அந்த தாமரை மலரிலிருந்து எல்லா பொருள்களாகவும் பரிணமித்து வெளிப்பட்டது. (விளக்கம் : ஆதியில் கடவுள் எதிலும் சம்பந்தப்படாத, மாறுபாடு, அசைவு முதலான எதுவுமே இல்லாத பரம்பொருளாக எல்லாவற்றையும் கடந்த பொருளாக இருந்தார். பிறகு அவரே விரும்பி உயிருள்ள, உயிரற்ற எல்லா பொருள்களாகவும் வெளிப்பட்டார்).

தாமரை மலரில் தோன்றியவர் என்று கூறப்படும் பிரம்மா, கடவுளின் ஆக்க சக்தியின் மூன்று அமைப்புகளில் ஒன்று. பிரம்மா, விஷ்ணு, சிவன் என்பவை அந்த மூன்று சக்தி நிலைகள். இவை படைப்பில் அடங்கியுள்ள

முத்தொழில்களின் அடையாளச் சின்னங்கள். படைத்தல், காத்தல், அழித்தல் என்பவை அந்த மூன்று தொழில்கள். முதலில் தாமரை மலரில் பிரம்மா மட்டும் வெளிப்பட்டதன் காரணம், ஆரம்பத்தில் படைப்பாற்றல் தான் தேவைப்பட்டது.

பிரம்மா தன் பணியைத் தொடங்கி இருவேறு இனங்களைப் படைத்தார். அவை : 1. சைத்தன்யம் (உயிர் உள்ளவை) 2. ஜடம் (உயிர் இல்லாதவை) 3. ஆசை நனவுநிலை, தன்முனைப்பு ஆகியவற்றுடன் கூடிய உயிரிகள் யாவும் சைதன்யப் படைப்பில் அடங்கும். இது ஒரு சுதந்திரமான படைப்பு. இதற்கு பிரபஞ்சத்தின் பிராணமய கோசம் என்று பெயர். சைதன்யம் எனப்படும் உயிர் ஆற்றல் பிரபஞ்சம் முழுவதும் பரவியுள்ளது. அதற்கு பிராணன் என்று பெயர். கருத்துக்கள், உறுதிப்பாடு, மன எழுச்சி ஆகியவை பிராண தத்துவத்தின் மூன்று படிகள், சத்வம், ராஜசம், தாமசம் என்பவை அதன் மூன்று வகைகள். ஆன்மாவின் மூன்று உடல்களும் (காரண, சூட்சும, பூத உடல்கள்) பிராண தத்துவத்தால் ஆனவைகளே. எல்லா உயிரினங்களின் ஆன்மாக்களும் மனங்களும் கூட இந்த பிராண தத்துவத்தால் இயங்குபவைகளே.

பிரம்மா, உயிரற்ற ஜடப் பொருள்களைப் படைப்பதற்காக முதலில் நிலம், நீர், காற்று, தீ, ஆகாயம் ஆகிய பஞ்சபூதங்களை உண்டாக்கினார். அணுக்களை திடம், திரவம், வாயு ஆகிய மூன்று நிலைகளில் செயல்படச்செய்தார். ஆறுகள், மலைகள், சமவெளிகள் முதலான எல்லா இயற்கை அமைப்புகளும் இந்த அணுக்களாலும், பஞ்ச பூதங்களாலும் ஆனவைகளே. மனித உடல்களும் இதே பஞ்சபூதங்களால் ஆனவைகளே.

உயிருள்ளவை தன்முனைப்பு, உறுதிப்பாடு, மன

எழுச்சி ஆகிய மூன்றையும் கொண்டவை, உயிரற்றவை உருவம், நிறம் முதலியவற்றால் மாறுபட்டவை. ஆற்றல், இயக்கம், சக்தி ஆகியவைகளால் நிலைகளில் மாறுபாடு அடையக்கூடியவை. உயிரற்றவைகளின் அடிப்படை 'அணு' உயிருள்ளவைகளின் அடிப்படை 'உயிரணு'. உயிரற்ற அணு உயிரணு ஆகிய இரண்டு நிலைகளில் மாறுபடும் தன்மை உள்ளவை; ஆனால் அழிவற்றவை.

பிரம்மா பதார்த்த ஆற்றலைக் (உருவம்) கொண்டு ஜடப்பொருள்களையும் சேதன ஆற்றலைக் (மனோசக்தி) கொண்டு உயிருள்ளவைகளையும் படைத்தார். ஆரம்பத்தில் மனவுறுதி தேவைப்பட்டது. அந்த உயிர்ப்பிலிருந்துதான் உயிர் உள்ளவை வெளிப்பட முடியும். உயிராற்றலால்தான் உருவமுள்ள பொருளை அறிய முடியும். உருவமுள்ள பொருள்கள் உயிர்கள் தோன்றி செயல்படுவதற்கு உதவும் கருவிகளாகவே படைக்கப்பட்டன. இம்முறையில் பிரம்மா முதலில் மனவுறுதியால் அறிவைப் படைத்தார். அறிவின் மூலம் யாவற்றையும் படைத்தார். புராணமொழியில் கூறினால் முதலில் தோன்றியவை அறிவாகிய வேதங்களே. பிரபஞ்சத்தைப் படைக்கும் மாறுபாடற்ற தெய்வீக சக்தியே பிரம்மா. மன உறுதிப்பாடு (சங்கல்பம்), பொருள்சக்தி (பதார்த்தம்) ஆகிய இரண்டும் பிரம்மாவின் இருகரங்கள். அந்த இரு கரங்களாலும் படைப்புத் தொழில் நடைபெறுகிறது.

## சூட்சும சக்திகளின் பிறப்பிடமே காயத்ரி

ஆதிசக்தியான காயத்ரி அருளால் சாத்வீகம், ராஜசம், தாமசம் ஆகிய மூன்று குணங்களையும் வென்றவன் ஆன்ம நிறைவையும், மனமகிழ்ச்சியையும் உலக சுகங்களையும் அடைவான். சரஸ்வதி சக்தி, லட்சுமி, சக்தி, காளி சக்தி ஆகியவை வெவ்வேறானவை.

காளியின் "க்லீம்" என்ற ஒலி ஆற்றலை ஆராய்ச்சி செய்வதில் மேலை நாட்டு விஞ்ஞானிகள் ஈடுபடுகிறார்கள். அறிவாளிகளில் சமயவாதிகள், சமூக சீர்திருத்த வாதிகள், காந்தீயவாதிகள், தொழிலதிபர்கள், வியாபாரிகள், தொழிலாளர்கள், சோஷலிஸ்டுகள், கம்யூனிஸ்டுகள் ஆகிய யாவரும் லட்சுமியின் "ஷ்ரீம்" ஆற்றலில் ஈடுபட்டுள்ளார்கள். தத்துவ ஞானிகளும் பக்தர்களும், தன்னை உணர்ந்த சரஸ்வதியின் "ஹ்ரீம்" சக்தியை வழிபடுகிறார்கள். இவ்வாறு எல்லா மனிதர்களும் ஆதிசக்தி காயத்ரியின் ஏதாவது ஒரு கிளை ஆற்றலை வழிபடுபவர்கள்தான். காயத்ரி வழிபாட்டில் இவ்வாறு மூன்று பாதைகள் இருப்பதால் அதற்கு "த்ரிபத" (முப்பெரும் வழிகள்) என்று பெயர். இந்த மூன்று வழிகளின் இணைப்பு (திரிவேணி) ஆன்மா, மனம், உடல் ஆகிய மூன்றின் நோக்கங்களையும் நிறைவேற்றுகிறது. ஆதி சக்தியுடன் ஆன்மீகத் தொடர்பு கொள்ளத் தெரிந்தவர்கள் தெய்வத்தாயிடமிருந்து அதிகமான நன்மைகளைப் பெறுகிறார்கள்.

துன்பத்திற்கு காரணங்கள் மூன்று. 1. அறியாமை, 2. கோழைத்தனம், 3. பற்றாக்குறை. ஹ்ரீம் அறியாமையும், ஷ்ரீம் பற்றாக்குறையையும், க்லீம் கோழைத் தனத்தையும் நீக்குகின்றன. இந்த மூன்று குறைகளையும் நீக்க இந்திய ஞானிகள் கண்ட நெறி ஆன்மிக சாதனை. ஆன்மிக சாதனை சித்திகளை அடைய உதவுகிறது. காயத்ரி சாதனை ஒருவகை ஆன்மிக சாதனை. அது பல தெய்வீக ஆற்றல்களுக்கு (சித்திகள்) தாயாக உள்ளது.

*  *

# 2. காயத்ரி சாதனை மூலம் உடலில் உள்ள சக்தி மையங்களைத் தூண்டுதல்

வாயிலிருந்து வெளிப்படும் சொற்கள், தொண்டை, நாக்கு, குரல்வளை, இதயம் முதலான பல பாகங்களிலிருந்து வெளிவருகிறது. இந்த உண்மை மந்திர வித்யா ஆய்வாளர்களுக்குத் தெரியும். அதன் விளக்கமாவது உடலின் பல பாகங்களிலும் உள்ள சுரப்பிகளும் வாயும் பல நரம்பிழைகளால் இணைக்கப்பட்டுள்ளன. வாயிலிருந்து ஒரு சொல் வெளிப்படும்போது அந்த சுரப்பிகளில் அழுத்த அதிர்வுகள் ஏற்படுகின்றன. அந்த சுரப்பிகளில் ஏதேனும் ஒன்று நோயுற்றாலோ அல்லது அழிந்துவிட்டாலோ அந்த சுரப்பியுடன் சம்பந்தப்பட்ட ஒலிகளை உச்கரிக்க முடிவதில்லை. அல்லது அந்த ஒலிகளை உச்சரிக்கும் போது நாக்கு தடுமாற்றம் ஏற்படுகிறது. மனித உடலில் பல சுரப்பிகள் உள்ளன. அவற்றில் சில பெரியவை; சில சிறியவை. சில கண்ணுக்குத் தெரிபவை; சில கண்ணுக்குத் தெரியாதவை. இவை யாவும் உயிர் தங்கும் மையங்கள். ஒவ்வொரு மையத்திலும் ஒரு ஆற்றல் மறைந்துள்ளது என்று யோகிகள் அறிவர். அவற்றில் சூட்சும நாடி சம்பந்தப் பட்ட 6 சக்கரங்கள் யாவரும் அறிந்ததே. உடலில் அவைகளைப் போல் எண்ணற்ற சுரப்பிகள் உள்ளன. சில சொற்களை சொல்லும்போது சில சுரப்பிகள் தூண்டப் படுகின்றன. இதன் அடிப்படையில்தான் மந்திரங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. காயத்ரி மந்திரத்தில் 24. எழுத்துக்கள் உள்ளன. 24 எழுத்துக்களும் 24 சுரப்பிகளைத் தூண்டி உண்மையான ஞானம் வளர உதவுகின்றன. இது காயத்ரி சாதனையின் அடிப்படையான நுட்பவிளைவு.

இந்த எழுத்துக்களின் ஒலி அமைப்பு மிகவும் சிறப்பு வாய்ந்தது. ஒலியில் எத்தகைய ஆற்றல் மறைந்துள்ளது? கண்ணுக்கு தெரியாத ஒலியின் அதிர்வலைகளில் இருந்து எவ்வகைப் பயன்களைப் பெறமுடியும்? என்பவைகளை ஒலி அறிவியல் அறிஞர்கள் அறிவார்கள். 'ஒலியே பிரம்மம்' என்று கூறப்படுகிறது. பிரம்மம் எழுச்சியுறும் போது அதிர்வலைகள் உண்டாகின்றன. ஒவ்வொரு அதிர்வலையும் பிரம்மத்தின்மேல் மோதும்போது 'ஓம்' என்ற ஒலி உண்டாகிறது. ஒரு அதிர்வலை கடிகாரத்தில் ஊசல் குண்டு ஆடுவது போல் ஏழு முறை பிரம்மத்தில் மோதித் திரும்புகிறது. இந்த ஓங்கார ஒலி அதிர்வுகள் படைப்புத் தொழிலை முறைப்படுத்துகின்றன. பிறகு சத்வமான ஹ்ரீம், ராஜஸமான ஷ்ரீம், தாமசப் பண்புள்ள க்லீம் என்னும் மூன்று ஒலி அதிர்வுகளும் இந்தப் பிரணவ ஒலி அதிர்வின் ஓட்டத்தில் இருந்து வெளிப்படுகின்றன. அவற்றிலிருந்து எண்ணற்ற ஒலி அதிர்வுகள் பிரிந்து வெளிப்படுகின்றன. அவைகளுக்கு பீஜமந்திரங்கள் என்று பெயர். இந்த பீஜ மந்திரங்கள் படைப்புத் தொழிலின் ஒவ்வொரு செயலையும் முறைப்படுத்துகின்றன. காயத்ரி மந்திரத்தில் பீஜமந்திர எழுத்துகள் தேர்ந்தெடுக்கப்பட்டு முறையாக இணைக்கப்பட்டுள்ளன. அதனால் அதை உச்சரிப்பதால் உண்டாகும் சக்தி ஓட்டம் தனிச்சிறப்பு மிக்கதாக உள்ளது.

தீபக ராகம் அணைந்த விளக்கை எரியச் செய்கிறது. மேக - மல்ஹார் ராகம் மழையைப் பொழியச் செய்கிறது. குழலிசை நாகத்தை படமெடுத்து ஆடச் செய்கிறது; மானை மெய்மறந்து நிற்கச் செய்கிறது; பசுவை தானாகவே பால் சுரக்கச் செய்கிறது. குயிலின் இசை உணர்ச்சிகளைத் தூண்டுகிறது. படைவீரர்கள் முறையாக நடைபோட்டு செல்லும்போது பாலங்கள் இடிந்து விழுகின்றன.

அதனால், படை வீரர்களுக்குப் பாலங்களின் மேல் செல்லும்போது சாதாரணமாக நடந்து செல்ல வேண்டும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. அமெரிக்காவில் டாக்டர் ஹட்சீசன் பல்வேறு இசை ஒலிகளைக் கொண்டு பல தீராத நோய்களைப் போக்குவதில் வெற்றி கண்டுள்ளார். இந்தியாவில் தாந்திரீகர்கள் ஒரு பானை மீது ஒரு உலோகத் தகட்டை வைத்து அதை ஒரு குறிப்பிட்ட வேகத்தில் அசைத்து, குறிப்பிட்ட ஒரு வகை ஓசையை உண்டாக்கி அதன் மூலம் பாம்பு விஷத்தையும், தேள் கடி விஷத்தையும் நீக்குகிறார்கள். காரணம் இதுதான். ஒலி அதிர்வுகள் ஈதரில் பரவுகின்றன. அப்போது அதே வகை அதிர்வு அணுக்களைக் கவர்ந்து கொண்டு புறப்பட்ட இடத்திறகுத் திரும்புகின்றன. அதனால் மின்னோட்டம் உண்டாகி பாம்பு கடித்த அல்லது தேள் கொட்டிய இடத்தில் பாதிப்பை உண்டாக்கி, விஷத்தின் பாதிப்பை நீக்கிவிடுகிறது. இது போல எல்லா மந்திரங்களும் விந்தைகள் புரிகின்றன; காயத்ரி மந்திரத்திலும் சக்தி பிறக்கிறது. காயத்ரி மந்திரத்தை சொல்லும்போது அதன் ஒலிகள் வாயில் உள்ள சில ரத்தக் குழாய்களில் அதிர்வுகளை ஏற்படுத்தி சில குறிப்பிட்ட சுரப்பிகளைத் தூண்டுகின்றன.அந்த சுரப்பிகள் தூண்டப்பட்டவுடன் வேத இசை ஒலி உண்டாகி ஈதர் மூலம் பிரபஞ்சம் முழுவதும் விரிந்துமீண்டும் சுருங்கி கிளம்பிய இடங்களான சுரப்பிகளை வந்தடைகிறது. திரும்பி வரும்பொழுது அந்த மந்திரத்தில் உள்ள ஒவ்வொரு ஒலியும் அதை ஒத்த அணுக்களை ஈர்த்துக் கொண்டு வந்து சாதகனிடம் சேர்க்கிறது. அதன் மூலம் சாதகன் விரும்பிய பலன் கிடைக்கிறது. ஒரு சாதகன் காயத்ரி மந்திரத்தை சொல்லும்போது நன்மை செய்யும் சக்தி வாய்ந்த இசை ஒலி அதிர்வுகளைத் தூண்டிவிடுகிறான். இதற்கு சாதனை என்று பெயர். அதன் மூலம் அவனுடைய ஆன்ம சக்தியின்

## காயத்ரி சாதனை மூலம் உடலில் உள்ள சக்தி மையங்களைத் தூண்டுதல்



நுண்மையான உள் உணர்வுகள் தூண்டப்படுகின்றன. அத்தூண்டலுக்கு ஆராதனை என்று பெயர். இவ்வாறு சாதனையும் ஆராதனையும் (புறத் தூண்டலும் அகத் தூண்டலும்) இணையும் போது காயத்ரி சக்தி வலிமை பெற்று, சாதகனுக்கு பெரும் தெய்வீக அருட் பேறாகக் கிடைக்கிறது.

சாதகன் காயத்ரி மந்திரத்தில் வைக்கும் நம்பிக்கையும், விசுவாசமும் அதன் ஆற்றலை மிகவும் அதிகமாக்குகின்றன. நம்பிக்கை எவ்வளவு சக்தி வாய்ந்தது என்பதை உளநூல் அறிஞர்கள் அறிவர். துளசிதாசர் ராமாயணத்தில் விசுவாசத்தை பவானி தேவிக்கும், நம்பிக்கையை சிவனுக்கும் ஒப்பிட்டிருக்கிறார். நம்பிக்கைக்கு ஒரு புதர் செடியை பேயாகவும், ஒரு கயிற்றை பாம்பாகவும் மாற்றும் சக்தி உண்டு; அதேபோல் அதற்கு ஒரு கற்சிலையை கடவுளாக மாற்றும் ஆற்றலும் உண்டு. சிலர் தங்கள் விசுவாசம், நம்பிக்கை இவற்றின் காரணமாக தங்கள் செல்வத்தையும், வசதிகளையும், உயிரையும் கூட மகிழ்வுடன் தியாகம் செய்கிறார்கள். ஏகலைவன், கபீர் போன்றவர்கள் நேரடியாக குருவிடம் தீட்சை பெற்று ஆற்றலைப் பெற்றவர்களல்ல. அவர்களுடைய விசுவாசமே அவர்களின் சாதனைகளுக்கு ஆதாரமாக இருந்தது. ஹிப்னாடிசம் என்னும் அரி துயிலில் ஆழ்த்தும் கலையின் அடிப்படையே நோயாளியின் இதயத்தில் நம்பிக்கையை ஊட்டுவதுதான். நோயாளிகளின் உறுதியான நம்பிக்கையைக் கொண்டே தாந்திரீகர்கள் மந்திரங்களின் மூலம் ஆச்சரியப்படும் வண்ணம் நோய்களைப் போக்குகிறார்கள். ஒரு சாதகன் தாந்திரீக மந்திரங்களை நம்பிக்கையில்லாமல் 100 முறை கூறினாலும் எவ்வித பயனும் இருக்காது. இது காயத்ரிமந்திரத்திற்கும் பொருந்தும்.

| மந்திர எழுத்துக்கள் | ஒவ்வொரு எழுத்துக்கும் உரிய சக்திகள் | ஒவ்வொரு சக்தியும் அளிக்கும் பலன்கள் |
|---|---|---|
| தத் | தபினி | வெற்றி |
| ச | சாமுண்டி | வீரம், வலிமை |
| வி | விஷ்வா | நற்பலன்கள் |
| துர் | துஷ்டி | நலவாழ்வு |
| வ | வரதாம்பிகை | யோகம் |
| ரே | ரேவதி | பிரிந்தோர் சேரல், திருமணம் கூடல், அன்பு |
| ணி | சூக்ஷ்மா | செல்வம் |
| யம் | ஞானாம்பிகை | தேஜஸ், அறிவொளி |
| பர் | பார்க்கவி | பாதுகாப்பு |
| கோ | கோமதி | அறிவு, ஞானம் |
| தே | தேவிகா | தீயசக்திகளை அழித்து |
| | | நலம் புரிதல் |
| வ | வராகி | நிஷ்டை, தவயோகம் |
| ஸ்ய | சின்ஹனி | தாரணை (இருப்பதை) அழியாமல் காக்கும் திறன் |
| தி | தியானாம்பிகை | நீண்ட ஆயுள், |
| ம | மர்யாதா | கண்டங்கள் வராமல் காத்தல் புலனடக்கம், தவ வைராக்யம் |
| ஹி | ஸ்புட நாயகி | தவம் கூடி வருதல் |
| தி | மேதா | வருங்காலத்தை முன்னரே உணர்தல் |
| யோ | யோக மாயா | விழிப்புணர்ச்சி |
| | | நன்னெறிக்குத்திரும்புதல் |
| யோ | யோகினி | உணவு, தொழில் உற்பத்திப் பெருக்கம் |
| நஹ் | தாரணி | இல்லற இன்பம் |
| ப்ர | ப்ரபவா | உயர்ந்த குறிக்கோள் |
| சோ | ஊஷ்மா | தைரியம் |
| த | த்ரஷ்யா | விவேகம் (நல்லறிவு) |
| யாத் | நிரஞ்சனாதேவி | சேவை (தொண்டு மனம்) |

ஒவ்வொரு எழுத்தின் சக்தி மையங்களும் உடலில் எங்கெங்கு உள்ளன என்று படத்தில் காட்டப்பட்டள்ளன. ஒவ்வொரு எழுத்தின் பிரபஞ்ச சக்திகளும் அவைகளால் கிடைக்கும் பலன்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

'காயத்ரி' பக்தனுக்கு மேற்கண்ட 24 ஆற்றல்களும் கிடைக்க தூண்டுகோளாக அமைகிறது. இந்த ஆற்றல்களுடன் பலவகையான சித்திகளும் வளமான வாழ்க்கையும் கிடைக்கின்றன. பெரும்பாலான மக்கள் இந்த பேறுகளையெல்லாம் தாங்கள் வழிபடும் தெய்வம்தான் அளிக்கிறது என்று எண்ணுகிறார்கள். காரணம் அவர்களால் தங்களுக்குள் ஏற்படும் நுண்மையான மாறுதல்களைப் புரிந்துகொள்ள முடிவதில்லை. தங்கள் ஆன்ம சாதனையின் விளைவாக ஏற்படும் நுட்பமான மாறுதல்களைப் புரிந்து கொண்டால், அடுத்த வினாடியே இவையெல்லாம் எங்கிருந்தோ கிடைத்த எதிர்பாராத பேறுகள் என்று எண்ணமாட்டார்கள். இவைகள் முறையான, அறிவியல் பூர்வமான ஆன்மீகக் கல்வியின் விளைவுகளே என்று உணர்வார்கள். காயத்ரி சாதனை ஒரு குருட்டு நம்பிக்கை அல்ல; அது ஒரு உருப்படியான, நிச்சயமாக நலம் பயக்கக் கூடிய அறிவியல் சாதனை.



# 3. காயத்ரியே காமதேனு

"காமதேனு ஒரு தெய்வீகப் பசு. அது அமுதத்தையே பாலாக சுரக்கிறது. சுவர்க்கத்தில் உள்ள கடவுள்கள் காமதேனுவின் பாலை பருகி, வளமும், மகிழ்ச்சியுமாக வாழ்கிறார்கள். யாராவது ஒருவர் ஏதேனும் ஒரு ஆசையுடன் காமதேனுவை அணுகினால் அவருடைய ஆசை உடனே நிறைவேறி விடுகிறது. இது காமதேனுவுக்கு உரிய தனிச்சிறப்பு. கல்ப விருட்சத்தைப் போல் காமதேனுவும் தன்னை நாடி வந்தவர்களின் ஆசைகளை நிறைவேற்றி வைக்கிறது" என்பது வேதவாக்கு.

உண்மையில் காமதேனு வேறு, காயத்ரி வேறு அல்ல. தேவதை என்ற சொல் 'தெய்வீக இயல்புடையவர்' என்று பொருள்படும். தெய்வீக இயல்புடைய ஒரு மனிதர் காயத்ரி என்னும் மகாசக்தியை வழிபட்டால் அவர் அந்த தெய்வீக அன்னையின் ஆன்மீகப் பாலை அருந்துகிறார். அவர் எல்லா இடையூறுகளிலிருந்தும் காப்பாற்றப் படுகிறார். ஆனந்த மயமாக இருப்பதே ஆன்மாவின் இயல்பு. தெய்வீக ஆனந்தத்தில் ஆழ்ந்திருப்பதே அதன் சிறப்பியல்பு. துன்பங்களிலிருந்து விடுதலை அடையும் போது ஆன்மா தன் உண்மையான நிலையை மீண்டும் அடைகிறது. தேவர்கள் சுவர்க்கத்தில் இன்பமாக வாழ்கிறார்கள். துன்பம் வருவதற்கான காரணங்களை நீக்கிவிட்டால் பூமியில் வாழும் மனிதனும் இன்பமாக வாழலாம். காயத்ரி என்னும் காமதேனு மனிதனுடைய துன்பங்களையெல்லாம் நீக்குகிறது.

## மூவகைத் துன்பங்களிலிருந்து விடுதலை

துன்பங்களுக்கெல்லாம் காரணம் மூன்று.

(1) அறியாமை (2) உறுதியின்மை, (3) பற்றாக்குறை. ஒரு மனிதன் எந்த அளவுக்கு இம்மூன்று குறைகளிலிருந்தும் விடுபடுகிறானோ அந்த அளவுக்கு மகிழ்ச்சி அடைகிறான்.

(1) அறியாமை : அறியாமை ஒரு மனிதனின் மனப்பான்மையையே பாழாக்கிவிடுகிறது. அவன் எண்ணங்களில் தெளிவில்லாது போகிறது. முரண்பாடான எண்ணங்களாலும், செயல்களாலும் தானே சென்று சிக்கல்களில் மாட்டிக்கொண்டு அவதியுறுகிறான். சுயநலம், சிற்றின்ப நாட்டம், பேராசை, தன் முனைப்பு, குறுகிய நோக்கம், கோபம் ஆகிய தன்மைகள் அவனைப் பற்றிக் கொண்டு, அவன் செய்ய வேண்டிய கடமையை மறக்கச் செய்கின்றன. அவன் வருங்காலத்தை எண்ணி திட்டமிட்டு செயல்படுவதில்லை. உடனடியாக கிடைக்கும் அற்ப சுகங்களையே பெரிதாக எண்ணி வாழ்கிறான். அதனால் அவன் எண்ணங்களும் செயல்களும் இழிந்தவை ஆகி விடுகின்றன. அவன் பாபச்செயல்கள் புரிந்து துன்பங்களுக்கு ஆளாகிறான். செயல்களின் அடிப்படை நோக்கத்தை அவன் உணர்வதில்லை. வாழ்க்கையில் ஆசைகளையும், கற்பனைகளையும் அளவு கடந்து வளர்த்துக் கொள்கிறான். எதுவும் நிறைவேறாத நிலையில் மிகவும் சாதாரண விஷயங்கள் கூட அவனுக்கு துன்பம் தருபவைகளாகவே தெரிகின்றன. உறவினர் மரணம், உடன் வாழ்பவர்களின் மாறுபட்ட சுவைகள், வாழ்க்கையில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகள் இவையெல்லாம் இயற்கை யானவை. அறியாமையில் உழல்பவன், எல்லாம் தான் விரும்பியபடியே நடக்கவேண்டும் என்று எண்ணுகிறான். அவன் துன்பமான சூழ்நிலையை சந்திக்க சிறிதும் விரும்புவதில்லை. அவன் எண்ணத்திற்கு மாறாக ஏதாவது துன்பம் நேர்ந்துவிட்டால் அழத் தொடங்கிவிடுகிறான். அவன் அறியாமையால் பல தவறுகளைச் செய்கிறான்.

அதனால் பல வாய்ப்பு வழிகளை இழந்து விடுகிறான். அவற்றை நினைத்தும் வருத்தப்படுகிறான். இவ்வாறு அறியாமை எண்ணற்ற துன்பங்களுக்குக் காரணமாகிறது.

(2) **உறுதியின்மை** : உடல் குறை, மனக்குறை சமூகக் குறைபாடு, திறமைக் குறைவு, ஆன்மீகக் குறை ஆகிய எல்லா குறைகளும் சேர்ந்ததே உறுதியின்மை, நோய்வாய்ப்பட்ட ஒருவனால் சுவையான உணவுகள், அழகிய இளம்பெண், இன்னிசை, அழகிய ஓவியங்கள் போன்ற எதையுமே அனுபவித்து இன்பம் காணமுடியாது. அவனால் செல்வத்தின் சுகத்தையும் அடைய முடியாது. இலக்கியம், கவிதை, தத்துவம் போன்றவற்றையும் அவனால் படித்து அனுபவிக்க முடியாது. ஆன்மீக முயற்சிகளில் உறுதியற்றவனால் அன்பு, பக்தி, சத்சங்கத் தொடர்பு முதலியவற்றின் இன்பத்தை அனுபவிக்க முடியாது. 'தகுதி உள்ளவன்தான் வாழ்வான்' என்பது இயற்கை நியதி. வலிமை குறைந்தவன் வலிமை மிக்கவனால் துன்புறுத்தப்படுகிறான்; தள்ளி வைக்கப் படுகிறான். வலிமை குன்றியவனின் குற்றமற்ற, எளிய, நல்ல பண்புகள் கூட அவனுக்கு பாதகமாக அமைந்து விடுகின்றன. உடல் வலிமை மிக்கவனுக்கு குளிர்காலம் உற்சாகமூட்டுகிறது. உடல் தளர்ச்சியுற்ற வனுக்கு அதே குளிர்காலம், நிமோனியா போன்ற குளிர்ஜுரம் வரக் காரணமாகிறது. வலிமை குன்றியவனுக்கு அழிவைத் தருபவை எல்லாம் வலிமை மிகுந்தவனுக்கு மிகவும் பயனுள்ளவைகளாக இருக்கின்றன. பெரிய அரசர்கள் வலிய சிங்கத்தை அரசுச்சின்னமாக வைத்துக் கொள்வதில் பெருமைப்படுகிறார்கள். எளிய ஆட்டை பவானிதேவிக்கு பலி கொடுக்கப் பயன்படுத்துகிறார்கள். உறுதியற்றவனுக்கு எப்போதும் துன்பம் தான். அவனிடமுள்ள நல்ல பண்புகள் கூட அவனுக்கு நம்பிக்கை அளிப்பதில்லை.

(3) பற்றாக்குறை : உணவு, உடை, குடிநீர், வீடு, ஆடு மாடுகள், நண்பர்கள், பணம், மருந்து, புத்தகம், ஆசிரியர் போன்ற பல தேவைகள் மனிதனுக்கு உள்ளன. அந்த தேவைளில் எது குறைந்தாலும் ஒருவன் தனக்கு நியாயமாக கிடைக்க வேண்டிய தேவைகளைக் குறைத்துக் கொள்ள வேண்டியுள்ளது. அதுவே துன்பமாக அமைகிறது. தேவையான அடிப்படை ஆதாரங்கள் கிடைக்காவிட்டால் திறமை வாய்ந்த மனிதர்களும் தாங்கள் பாதிக்கப்பட்டதாகவே உணர்கிறார்கள். அதனால் துன்ப முறுகிறார்கள்.

காயத்ரி ஒரு காமதேனு, காயத்ரியை உள்ளம் உருகி வழிபடுபவர்கள் அமுதம் உண்ட அளவுக்கு இன்பம் அடைவார்கள். அறியாமை, உறுதியின்மை, பற்றாக்குறை இவற்றால் வரும் துன்பங்களில் இருந்து அவர்கள் விடுதலை பெற்று விடுகிறார்கள். அவர்களுடைய ஆசைகள் எல்லாம் நிறைவேறி விடுகின்றன.

## காயத்ரி ஒரு கற்பக விருட்சம்

"தேவலோகத்தில் ஒரு கற்பக விருட்சம் இருக்கிறது. அதன் அடியில் உட்கார்ந்திருப்பவன் விரும்பியதையெல்லாம் அடைகிறான். அவன் ஆசைகள் யாவும் உடனுக்குடன் நிறைவேறுகின்றன" என்று கூறப்படுகிறது. அப்படி ஒரு கற்பக விருட்சம் ஒருவனுக்கு சொந்தமாக இருந்தால் அவன் எவ்வளவு மகிழ்ச்சியாக இருப்பான்! இந்த பூமியிலும் அப்படி ஒரு கற்பக விருட்சம் இருக்கிறது. அதுதான் காயத்ரி. வெளித் தோற்றத்தில் அது ஒரு 24 எழுத்துக்களின் தொகையாகவோ 9 சொற்களின் கோர்வையாகவோ தோன்றக் கூடும். இந்த மந்திரத்தை ஆழ்ந்து துருவி ஆராய்ந்தால் அதில் உள்ள ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு சொல்லும் மனிதனுடைய ஆசைகள் அனைத்தையும் தன்னுள் அடக்கி வைத்துள்ளதை அறியலாம்.

காயத்ரி ஒரு தனிப்பட்ட மனித தெய்வமல்ல. அது தானாகவே தோன்றிய சர்வ வல்லமையுள்ள கடவுள். பிரம்மம் மாறுபாடு இல்லாதது; அறிவுக்கு அப்பாற்பட்டது. கடவுள், வணக்கத்திற்குரியவர். அவரை வழிபடுவதால் விரும்பிய பலன் கிடைக்கிறது. "காயத்ரி உபாசனை" என்பதும் ஈஸ்வர பக்தி, ஈஸ்வர உபாசனை, பிரம்ம சாதனை, பிரம்ம தரிசனம் என்ற தொடர்களும் ஒரே பொருளைக் குறிப்பவைகளே.

காயத்ரி சாதனை இணை இல்லாதது. எனினும் எளிய வெற்றிகரமான வழிபாடு. காயத்ரி வழியில் செல்பர்வர்களின் வாழ்க்கை ஒரு அழகிய நந்தவனம். அந்த பாதை அவர்களை முடிவில் தெய்வநிலைக்கும் கொண்டு செல்கிறது. பிரம்மா, காயத்ரி என்பவை சொற்களில்தான் வெவ்வேறாக உள்ளது, ஆனால் உண்மையில் அவை இரண்டுமே ஒன்றுதான்.



# 4. காயத்ரி சாதனையும் தெய்வீக ஞானமும்

காயத்ரி உண்மையான ஞானத்தை அளிக்கும் மந்திரம். அது பக்தனுடைய மனதையும், ஆன்மாவையும், எண்ணங்களையும் நேரான பாதையில் செல்லும்படி செய்கிறது. அதன் முக்கிய பணி சத்வ குணத்தை மேலோங்கச் செய்வதுதான். இதன் பொருளை சிந்தித்தால், உண்மை ஞானத்தைப் பெறுவதுதான் வாழ்க்கையில் மிகப் பெரிய வெற்றி என்பது விளங்கும். இதைப் புரிந்துகொண்டால் உண்மை ஞானத்தை அடைய

வேண்டும் என்ற மன உறுதி ஏற்படும். அதன் விளைவாகத் தோன்றும் எண்ணங்களும் உணர்ச்சிகளும் நேர்மையான பாதையிலேயே செல்லும். அந்த எண்ணங்கள் வெளிப் பட்டு ஆகாயமார்க்கமாக பிரபஞ்சம் முழுவதும் பரவும். அப்போது சாதகனின் எண்ணங்களை ஒத்த சூட்சும நிலையில் வாழும் ஞானிகளுடைய எண்ண அலை களுடன் அவனுடைய எண்ண அலைகள் கலக்கும் போது அவனது எண்ண அலைகள் வலிமை பெறுகின்றன.

இவ்வாறு சாதகனின் நேர்மையான எண்ணங்களின் அளவு மிகுதியாக வளர்வதால் அவனது சத்வகுணம் ஆச்சரியப்படும் அளவுக்கு வளர்ந்து விடுகிறது. இதை சாதாரண மனிதர்களால் புரிந்து கொள்ள முடியாது. "மனவுறுதியுடன் நேர்மையான பாதையில் செல்பவன் குணங்களில் தாமச குணமும் ராஜச குணமும் குறைகின்றன. சத்வ குணம் மேலோங்கி வளர்கிறது" என்பதை சூட்சும சரீரிகளாய் உள்ள ஞானிகள் அறிவார்கள். ஒரு சாதகன் தன்னிடம் சத்வகுணம் வளர்ந்துள்ளதை உணர முடியாவிட்டாலும், தன் உடல் நலம் பெருகி வருவதையும், புத்துணர்ச்சி பெற்று வருவதையும் நிச்சயமாக உணர்வான். இவ்வாறு புத்துயிர் பெறுவது கடவுள் அளித்த கொடையா அல்லது மனித முயற்சியின் விளைவா என்ற ஆராய்ச்சி தேவையற்றது. காயத்ரி சாதனையால் தீமை புரியும் சக்திகள் உடலை விட்டு வெளியேறுகின்றன; நன்மை புரியும் சத்வகுணம் சாதகனிடம் வளர்கிறது என்பது மட்டும் உறுதி. காயத்ரி சாதனை உடலிலும் மனதிலும் நல்ல மாறுதல்களை ஏற்படுத்துகிறது என்பதை அறிவியல் ஆய்வுகள் நிரூபித்துள்ளன. இந்த நல்ல மாறுதல்கள் கடவுள் அருளால் கிடைத்தன என்றும் கருதலாம்; சொந்த முயற்சியால் ஏற்பட்ட அறிவியல் மாற்றம் என்றும்

கருதலாம். அது அவரவர் விருப்பத்தைப் பொறுத்தது.

சத்வகுணம் வளரவளர, செயல்களில் குறிப்பிடத் தக்க மாறுதல்கள் தோன்றும். புலன் உணர்ச்சிகள் கட்டுப்பாட்டுக்குள் வரும். குடிப்பழக்கம் போன்ற தீய பழக்கங்களில் உள்ள ஆர்வம் குறையும். மாமிசம் போன்ற தாமச உணவுகளின் மேல் உள்ள ஆசை மாறி அவற்றை வெறுக்கும் நிலை ஏற்படும். காம உணர்ச்சியும் கட்டுப் பாட்டுக்குள் வரும். அதனால் தவறான பெண் வழிச் சேர்க்கையால் அழியும் நிலை வராது. பிரம்மச்சரியத்தை கடைப்பிடிக்கும் பழக்கம் வளரும். அதனால் ஆண்மை பெருகும். காம இச்சை, நாவின் சுவை இரண்டையும் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்துவிடுவதால், உழைப்பு, புறத்தூய்மை, அகத்தூய்மை, வாக்குசுத்தம் இப்படி எல்லாவற்றிலுமே சத்வகுணம் மேலோங்கி சாதகனை நேரான பாதையில் கொண்டு செல்லும்.

மனதில் கோபம், பற்று, பேராசை, கர்வம், சுயநலம் முதலான தீயகுணங்கள் யாவும் மறைந்துவிடும். சுய கட்டுப்பாடு, ஒழுக்கம், எளிமை, தியாக உணர்வு, அன்பு, கடமை உணர்ச்சி போன்ற உயர்ந்த பண்புகள் வளரும். இதனால் துன்பங்கள் குறையும். அன்றாடப் பிரச்சினைகள் எளிதில் தீர்ந்துவிடும். சிக்கல்கள் குறைந்து மன அமைதி பெருகும். இவற்றால் உடல்நலம் பாதிக்கப்படுவதும் தவிர்க்கப்படுகிறது. அறியாமையால் உண்டாகும் ஏற்றத் தாழ்வு மனப்பான்மை, அச்சம், கஷ்டங்கள் ஆகியவை விலகும். நேர்மையான வாழ்க்கையும் கடவுள் மீது நம்பிக்கையும் வளர்வதால் செயல்களும் நல்லவை களாகவே அமையும். அதனால் மனசாட்சி, சமூகம், அரசு, ஆண்டவன் ஆகிய சக்திகளின் தண்டனைகளுக்கு ஆளாக வேண்டுவதில்லை. அதே நேரத்தில் மக்கள் அவனைப் போற்றுபவர்களாகவும், அவனுக்குப் பாதுகாவலர்களாகவும்

மாறிவிடுகிறார்கள். நன்றிக் கடன்பட்ட மக்களிடையே சாதகன் உண்மையான அன்புச் சூழலில் பூமியில் வாழும் போதே பரமானந்த நிலையை அடைகிறான். இத்தனை சிறப்புகளும் சத்வகுணம் மேலோங்குவதால் உண்டாகின்றன.

ஆன்மா கடவுளுடன் இரண்டறக் கலந்துள்ள ஒரு அங்கம். அதனால் கடவுளுடைய எல்லா ஆற்றல்களும் ஆன்மாவினுள் விதை உருவில் மறை பொருளாய் உள்ளன. அந்த ஆற்றல்கள், மன உளைச்சல், புலன் உணர்வுகளால் உண்டான பாதிப்புகள், குறைபாடுகள், தீய பழக்கங்கள் முதலான அறியாமைப் பண்புகளால் மூடப்பட்டு காரிருளில் ஆழ்ந்துள்ளன. அதனால் மக்கள் தங்களைத் தாங்களே ஏழைகள் என்றும் துன்பத்தை அனுபவிக்கவே பிறந்தவர்கள் என்றும் எண்ணி தாழ்த்திக் கொள்கிறார்கள். ஆனால் ஆன்மசாதகன் சாதனையின் விளைவாக தன்னிலுறையும் உள்ளொளியைக்காண்கிறான். அவன், சர்வ வல்லமையுள்ள ஆண்டவன் தன் உள்ளத்தில் இருப்பதை உணர்கிறான். அப்போது அறியாமைத் திரை அவனை விட்டு விலகுகிறது. அந்தக் கணத்திலேயே, அதுவரை அற்பமாக இருந்து வந்த மனிதன் மாமனிதனாகிறான். மனிதனின் ஆன்மாவானது எல்லையற்ற அறிவு அசாதாரண ஆற்றல் ஆகியவற்றின் கருவூலம். அறியாமை இருளில் இருந்து அந்த ஆன்மா வெளிப்படும்போது சாதகன் ஒரு சித்த யோகி ஆகிறான். அவன் சித்திகளை அடைவதற்கு எதையும் வெளியிலிருந்து கொண்டு வர வேண்டுவதும் இல்லை; ஒரு கடவுளின் அருளோ அல்லது ஒரு மந்திரத்திற்குக் கட்டுப்படும் கீழ்நிலை தேவதையின் உதவியோ கூட தேவையில்லை. தேவையானதெல்லாம் உள்ளொளியை மறைத்திருக்கும் அடைப்புகளை அகற்றுவதுதான். முறையான காயத்ரி சாதனை என்னும் சூரியன் அறியாமை இருளை அகற்றுகிறது; அப்போது முற்றிலும் தெய்வீகமான ஆன்மாவின் உண்மை உருவம் வெளிப்படுகிறது.

காயத்ரி சாதனையினால் வளரும் மன ஒழுக்கத்திலிருந்து எண்ணற்ற ஆன்மீக நலன்களும் உலக வாழ்க்கைக்குத் தேவையான வளங்களும் தோன்றுகின்றன. உடலும் உள்ளமும் தூய்மை அடைவதால் உலகியல் வாழ்க்கையில் அமைதியும் மகிழ்ச்சியும் உண்டாகிறது. ஆன்மீக வளர்ச்சியும், அறிவு வளர்ச்சியும் பெருகி, மற்றவர்களுக்கு மலைபோல் பெரிதாகத் தோன்றும் காரியங்களையும் மிகவும் சுலபமாகச் செய்யும் ஆற்றல் பெருகுகிறது. சாதகனுக்கு ஏற்றவாறு சூழ்நிலை மாறுகிறது. அல்லது சூழ்நிலை மாற்றங்களுக்கு ஏற்றவாறு சாதகன் தன் எண்ணங்களையும் போக்கையும் மாற்றிக் கொள்ள முடிகிறது. ஆசைகளும் பொருந்தாத சூழ்நிலை களும் ஒன்றையொன்று மோதுவதால்தான் துன்பமே விளைகிறது. அறிவுள்ள மனிதன் சூழ்நிலையை தனக்கு சாதகமாக மாற்றிக் கொள்கிறான். அல்லது மாறும் சூழ்நிலைக்கு ஏற்றவாறு தன்னை மாற்றிக் கொள்கிறான். அதனால் அவன் வாழ்க்கை ஆனந்தமயமாக அமைகிறது.

உண்மையில் ஒருவனுடைய மகிழ்ச்சியின் ஆதாரம் வெளியில் இல்லை. அவனுடைய மனநிலையில்தான் உள்ளது. எடுத்துக்காட்டாக, ஒரு காலத்தில் இன்சுவை உணவையும், பட்டு மெத்தையில் உறங்குவதையுமே சுவர்க்கம் என்றிருந்த ஒருவன் ஒரு துறவியால் ஆன்மீகப் பாதைக்குத் திருப்பப்பட்டவுடன் துறவு வாழ்க்கை, காட்டிலே வெறும் தரையில் படுத்து உறங்குதல், கனிகளையும், கிழங்குகளையும் உணவாகக் கொள்ளுதல் இவற்றில்தான் திருப்தி அடைகிறான். இந்த விருப்ப மாற்றத்திற்குக் காரணம் அவனுடைய எண்ணங்களில் ஏற்பட்ட மாற்றமே தவிர சூழ்நிலை மாற்றமல்ல. காயத்ரி அறிவுத் தெய்வம். அவளிடம் நாம் உண்மையான ஞானத்தை வேண்டுகிறோம். காயத்ரி சாதனையின் விளைவாக எண்ணம் உயர்கிறது. மனித வாழ்க்கையின் உண்மை நிலையை உணர்கிறோம். அதனால் எந்த

சூழ்நிலையிலும் வாழ்க்கை இன்பமாகவே அமைகிறது.

ஆயிரக்கணக்கானவர்கள் காயத்ரி தீட்சை பெற்று சாதனை செய்து வருகிறார்கள். மன உறுதியுடன் சாதனை புரியும் பலர், ஆச்சரியப்படும் அளவுக்கு பயன் அடைந்துள்ளார்கள். “காயத்ரி சாதனை” என்பது அறிவியல் ஒப்புக்கொள்ளும் ஒரு பயன் தரும் செயல் முறைதான்; எனினும் காயத்ரி மாதாவிடம் ஆழ்ந்த அன்பும், நன்றியுணர்வும் மன ஒருமைப்பாடும் இருக்கவேண்டுவது அவசியம். மனிதருக்கும், தெய்வத்திற்கும் இடையே அன்பின் பிணைப்பால் உண்டாகும் அந்த உறவுதான் விரைவில் பலன்களை அடைய உதவுகிறது.

## புத்துயிர் பெறுதல்

காயத்ரி மந்திரம் மனிதனை ஆன்மீகப் புத்துணர்ச்சி பெறச் செய்கிறது. காயத்ரி சாதனையைத் தொடங்கியவுடனேயே ஒருவன் தன்னுள் ஒரு புதிய மாறுதல் ஏற்படுவதை உணர்கிறான். ஒழுக்க நெறியில் அவன் வளர, வளர தீய எண்ணங்களும், செயல்களும், பழக்கங்களும் படிப்படியாகக் குறைகின்றன. அவனிடம் புலனடக்கம், பணிவு, பக்தி, உற்சாகம், சுறுசுறுப்பு, நேர்மை, உண்மை, இன்சொல் பேசுதல் போன்ற உயர்ந்த பழக்கங்கள் வளர்கின்றன. அதன் விளைவாக சாதகனுக்கு வாழ்க்கையில் அமைதியும் மனநிறைவும் ஏற்படுகின்றன. மக்கள் அவனை மதிக்கிறார்கள்; போற்றுகிறார்கள். தேவையானபோது அவனுக்கு வேண்டிய உதவிகளை மகிழ்ச்சியுடன் செய்கிறார்கள். அவனிடம் துன்பம் தலைகாட்டுவதே இல்லை.

காயத்ரி சாதகனின் மனதில் ஒரு அசாதாரண மாறுதலும் ஏற்படுகிறது. அவன் உண்மையான அறிவு விளக்கம் பெறுவதால், அறியாமையால் விளையும்

துன்பங்கள் அவனை விட்டு விலகுகின்றன. பூர்வஜென்ம வினையின் விளைவாக ஒவ்வொருவருக்கும் துன்பங்கள் வரத்தான் செய்யும். சாதாரண மனிதன், அவற்றை நஷ்டம், மரணம், நோய், எதிர்ப்பு, தாக்குதல், அதிர்ச்சி, இப்படி ஏதாவது ஒரு நிலையில்தான் உணர்வான். ஆன்மீக வலிமை பெற்ற காயத்ரி சாதகன் உண்மை அறிவு பெற்றிருப்பதால் இவற்றையெல்லாம் சாதாரண நிகழ்ச்சிகளாகவே எடுத்துக் கொள்வான். அவன் தைரியம், நம்பிக்கை, பொறுமை, மன அமைதி ஆகியவைகளுடன் தெய்வப்பற்றும் கொண்டவனாய் உலக வாழ்க்கையில் பற்றற்று வாழ்வான். அதனால் தனக்கு மிகவும் நெருக்கடியான நிலை வரும்போதும் அவனால் அமைதியாக சிரித்த முகத்துடன் செயல்பட முடிகிறது.

காயத்ரி சாதகன் இந்த உலகில் வாழ்வதற்கான நலன்கள் பலவற்றைப் பெறுகிறான். இவற்றிற்கெல்லாம் மேலாக அவனடையும் உன்னதமான பேறு ஆன்மீக வலிமை. அதனால் நோய், தளர்ச்சி, வேலையில்லா திண்டாட்டம், வாணிபத்தில் நஷ்டம், குடும்பச் சண்டை, வெறுப்புணர்ச்சி, பகைவரின் தாக்குதல், வழக்குகள், உறவால் துன்பம், மனத்தளர்ச்சி, மகளின் திருமணம் நடைபெறாமல் தடைபட்டு வருவது, எதிர்காலத்தில் என்ன செய்யப் போகிறோம் என்ற பயம், தேர்வில் வெற்றி பெற முடியாது தவிக்கும் கவலை, தீய பழக்கங்களுக்கு அடிமையாகி மீள முடியாத நிலை இவற்றைத்தவிர மற்ற எல்லாவித துன்பங்களும் அந்த ஆன்ம பலத்தால் நீங்கிவிடுகின்றன.

இந்த துன்பங்களுக்கெல்லாம் மூலகாரணமாய் இருப்பவை மூன்று. 1. திறமையின்மை, 2. நாமே உருவாக்கிக் கொண்ட குறைகள், 3. அவ்வப்போது நாம் செய்யும் தவறுகள். ஆன்ம பலம் வளரும் போது அதோடு கூடவே உணவுப் பழக்கங்கள், அன்றாட வாழ்க்கைமுறை,

மனப்பான்மை, மனித இயல்புகள் ஆகிய யாவுமே மாறிவிடுகின்றன. இந்த முழுமையான மாற்றத்தால் துன்பங்கள் மீண்டும் தலையெடுக்க முடியாமல் போய் வேரோடு அழிந்து விடுகின்றன. வாழ்க்கை அமைதியும் மகிழ்ச்சியும் நிறைந்ததாக மாறிவிடுகிறது. பல சமயங்களில் நம் சக்திக்கு மேலான ஆசைகளை வளர்த்துக் கொண்டு அவதிப்படுகிறோம். காயத்ரி சாதனையால் மனத் தூய்மை அடைந்தவன் இந்த ஆசைகளையெல்லாம் கடந்து விடுகிறான். அவன் தன் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள தவறு செய்வதும் இல்லை. ஆசை நிறைவேறவில்லையே என்று ஏங்குவதும் இல்லை. விதியின் விளைவால், தவிர்க்க முடியாது சில துன்பங்கள் வரும்போது, சாதாரண மக்கள் அழுது புலம்புகிறார்கள். காயத்ரி சாதனையால் ஆன்மபலம் பெற்றவன் இந்த இயற்கை விளைவுகளை அமைதியிழக்காமல் தைரியமாக சந்திக்கிறான். அதனால் மரணம் முதலான தவிர்க்க முடியாத துன்பங்கள் கூட அவனை பாதிப்பதில்லை.

ஒரு குறிப்பிட்ட நெருக்கடியைத் தவிர்ப்பதற்கும், ஒரு குறிப்பிட்ட தேவை நிறைவேறுவதற்கும் கூட காயத்ரி சாதனை செய்யப்படுகிறது. அதில் ஆச்சரியப்படும்படி வெற்றி கிடைக்கிறது. வேதமாதாவின் தெய்வீக ஒளியால் நம்பிக்கை வளர்கிறது. அச்சம் நீங்குகிறது; கடினமான வேலையும் மிகவும் எளிதாக மாறிவிடுகிறது; நெருக்கடி விலகி, தேவை பூர்த்தியாகிறது; மனம் அமைதியுறுகிறது.

காயத்ரி சாதனை "ஆன்மபலத்தை" வளர்க்கக்கூடிய மிக உயர்ந்த ஆன்மீகப் பயிற்சி. சிலர் மல்யுத்தத்தில் பயிற்சி பெறுகிறார்கள். மல்யுத்தப் போட்டியில் கலந்து கொள்கிறார்கள். சந்தர்ப்ப வசத்தால் அவர்கள் போட்டியில் தோல்வியுறவும் கூடும். போட்டியில் தோல்வியுற்றதாலேயே அவர் பெற்றுள்ள பயிற்சியால்

அவருக்கு பெற்றுள்ள உடல் வலிமை இல்லையென்றாகி விடுமா? அவர் பெற்ற வலிமை அவர் வாழ்நாள் முழுவதும் துணை புரியும். காயத்ரி சாதனை மூலம் உடல் நலம், நீண்ட ஆயுள், அழகு, செயல்திறம், இல்லற சுகம், நல்ல சந்ததி, பகைவருக்கு அஞ்சாமை போன்ற பல பேறுகள் கிடைக்கின்றன. ஒரு மல்யுத்த போட்டியில் வெற்றி பெறுவதை விட இந்தப் பேறுகள் எந்த வகையிலும் தாழ்ந்தவை அல்ல. காயத்ரி சாதனை செய்வதில் எதிர்பார்த்த ஒரு குறிப்பிட்ட நன்மை கிடைக்காமல் போகலாம். அந்த குறிப்பிட்ட நன்மை கிடைக்காததாலேயே சாதனை பயனற்றது என்று கூறமுடியாது. உடலும், உள்ளமும், வாழ்க்கையும் சீர்படுவது நிச்சயம். அதனால் வாழ்நாள் முழுவதும் இன்பமயமாக மாறிவிடுகிறதே?

ஆன்மா அழிவற்றது; பிரம்ம சொரூபம்; சித்திகளின் பிறப்பிடம். எரியும் கரி சாம்பலால் மூடப்பட்டுள்ளபோது ஒளி மங்கி காணப்படுவதுபோல், அக அழுக்குகளால் மூடப்பட்டுள்ள ஆன்மா, ஒளிமங்கி காணப்படுகிறது. காயத்ரி சாதனையால் அந்த உள் அழுக்குகள் (ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்கள்) விலகி விடுகின்றன. சாம்பல் நீக்கப்பட்ட தணலைப் போல் தூய ஆன்மா தன்னிடம் உள்ள பிரம்மதேஜசுடன் ஒளிமயமாக காட்சியளிக்கிறது. அப்போது காயத்ரி சாதகன் எல்லா சித்திகளும் கைவரப் பெறுகிறான். யோகிகள் நீண்ட காலம் முயன்று தவம் செய்து பெறும் பேறுகளை காயத்ரி சாதகன் எளிய முயற்சியால் மிகக் குறுகிய காலத்திலேயே அடைகிறான். காயத்ரி சாதனையின் இந்த விளைவை தற்கால வாழ்க்கையிலேயே காணலாம். கடந்த 50 ஆண்டுகளில் நூற்றுக்கணக்கானவர்கள் வெற்றி மேல் வெற்றி பெற்று உயர்ந்த நிலையை அடைந்துள்ளார்கள். அவர்கள் மூலம் ஊக்கம் பெற்று எண்ணற்ற மனிதர்கள்

காயத்ரி சாதகர்களாக மாறியுள்ளார்கள்.

பழங்காலத்தில் மகரிஷிகள் கடுந்தவம் செய்து அஷ்டமா சித்திகளைப் பெற்றார்கள். அவர்கள் தவத்தின் அடிப்படை காயத்ரி சாதனைதான். பழங்கால வேதநூல்கள் அவர்கள் பெற்றிருந்த அதி உன்னதமான ஆற்றல்களை விளக்குகின்றன. அவர்களைப் போன்ற ஞானிகள் இப்போதும் இருக்கிறார்கள். இப்போது வாழும் ஞானிகள் யாவரும் யோகமார்க்கத்தில் வெற்றி பெறவதற்கு காயத்ரி சாதனையை விட நிச்சயமானதும், எளியதுமான வழி வேறு எதுவும் இல்லை என்று கருதுகிறார்கள். சூரிய வம்சத்திலும், சந்திர வம்சத்திலும் தோன்றிய பேரரசர்கள் யாவரும் (ராமன், யுதிஷ்டிரன் முதலானோர்) காயத்ரி வழிபாடு செய்தவர்களே. இந்த தெய்வீக ஆற்றலைப் பெற்றிருந்ததாலேயே பிராமணர்கள் “ஜகத்குரு” என்று அழைக்கப்பட்டார்கள். க்ஷத்திரியர்கள் பேரரசர்களாக வாழ்ந்தார்கள். இந்த உண்மை இப்போதும் அழியாமல் நிலைத்திருக்கிறது. காயத்ரி மாதாவை முற்றிலும் சரணடைந்த எந்த மனிதனும் வாழ்க்கையில் தோல்வியோ, ஏமாற்றமோ அடைவதில்லை.



# 5. காயத்ரியின் பெருமை

காயத்ரியினால் கிடைக்கும் உயர்ந்த பேறுகளுக்கான மூலகாரணத்தை நம்மால் அறியமுடியாது. எனினும், பிரம்மா முதல் தற்காலத்தில் தோன்றிய ரிஷிகள் வரை உள்ள எண்ணற்ற தேவர்களும் ஞானிகளும் காயத்ரி மந்திரத்தை ஆழ்ந்த பக்தியுடனும் மன ஒருமைப் பாட்டுடனும் ஓதிவருவதால் அம்மந்திரம் அளவுகடந்த சக்தியைப் பெற்றிருக்கிறது. ஒரு மந்திரம் வலிமையும், ஆற்றலும் பெறுவதற்கும் அதன் பயன்கள் மிகவும் அதிகமாவதற்கும் எண்ணற்ற ஞானிகள் நீண்ட காலமாக அதை ஜபித்து வருவதும் ஒரு காரணமே. ஆனால் அவர்கள் ஜபித்து வருவதுமட்டுமே முழுமையான காரணமல்ல. முழுமையான தெய்வீக காரணம் நம் அறிவிற்கு அப்பாற்பட்டது. இந்த உலகம் தோன்றிய காலம் முதல் மிகவும் அதிகமான மனிதர்களாலும், சித்த புருஷர் களாலும் ஜபிக்கப்பட்ட மந்திரம் - காயத்ரி மந்திரத்தைத் தவிர வேறு எதுவுமே இல்லை. அதனால் எல்லா உலகங்களிலும் காயத்ரியைவிட உன்னதமான ஆன்மீக பலம் மிக்க மந்திரம் வேறு எதுவும் இல்லை.

ஒரு முறை தோன்றிய ஒரு ஒலியோ அல்லது கருத்தோ எக்காலத்திலும் அழிவதில்லை. இது அறிவியல் ஒப்புக்கொள்ளும் இயற்கை நிகழ்ச்சி. நம் எண்ண அலை, சொல் அலை ஒவ்வொன்றும் வானவெளியில் பரவி மின்காந்த அலை வடிவிலோ வேறு எந்த உருவத்திலோ எக்காலத்திலும் அழியாமல் நிலைத்திருக்கின்றன. அதிலும் சக்திவாய்ந்த அலைகள் எக்காலத்திலும் வலிமைமிக்க ஆன்மீக அலைகளாக நிலைத்து நிற்கின்றன. இப்போது அலை இயல் விஞ்ஞானிகள் மாகபாரதப் போர்க்காட்சிகளையும், தான்சேன் பாடிய பாடல்களையும் விண்ணில் மிதக்கும் அலைகளிலிருந்து பிரித்தெடுத்து

அவற்றை தொலைக்காட்சியில் பதிவு செய்ய முயற்சி செய்து வருகிறார்கள். அவர்கள் தங்கள் முயற்சியில் வெற்றி கண்டால் பழங்காலத்தில் நடந்த முக்கிய சம்பவங்களை பார்த்து இன்புற முடியும். அதுமட்டுமல்ல; பகவான் கிருஷ்ணன் உபதேசித்த கீதையை அவர் வாயாலேயே கூறக்கேட்டு இன்புற முடியும்.

எண்ணற்ற மக்கள் காயத்ரியிடம் கொண்டுள்ள பக்தியும், நம்பிக்கையும் இன்றும் வளர்ந்து கொண்டே போகிறது. சூட்சும உலகத்தில் பருவுடலை நீத்து நுண்ணுடலோடு கூடிய மக்கள் வாழும் வானவெளியில் அந்த பக்தி நிலையாக வாழ்ந்து வருகிறது. இயற்கைத் தத்துவ அடிப்படையில் நம்பிக்கை, பக்தி, நல்லுணர்வு, பிரம்மச்சர்யம் ஆகிய ஒத்த பண்புகள் ஒரு மையத்தில் ஒன்றுகூடும்போது அங்கு ஆன்மீக ஆற்றல் மிகுதியாக உண்டாகிறது. எண்ணற்ற பக்தர்களின் ஆன்மீக ஆற்றல் ஒன்றாக இணையும்போது அதன் நற்பலன்கள் பொங்கி வழிந்தோடும் அளவுக்குப் பெருகி விடுகிறது. அதனால் தற்காலத்தில் காயத்ரி சாதனை செய்யத் தொடங்கும் ஒரு பக்தன் மிகவும் குறைந்த காலத்திலேயே மிக அதிகமான பலன்களைப் பெறுகிறான்.

எண்ணம், அதிவிரைவில் எங்கும் பரவும் ஒரு பேரலையாகவும் பிரபஞ்சம் முழுவதும் பரவியுள்ள ஒத்த எண்ண அலைகளைத் தன்பால் ஈர்த்துக்கொள்ளும் காந்தசக்தியாகவும் உள்ளது. அதனால் நல்லவைகளை தொடர்ந்து எண்ணிவரும் ஒருவன் படிப்படியாக உயர்ந்த எண்ணங்களையும் பண்புகளையும் அடையப் பெறுகிறான். அதேபோல் மனதில் தீய எண்ணங்களையே வளர்த்து வருபவன் அதிவிரைவில் மிகவும் கொடியவனாக அல்லது தீயபழக்கங்களுக்கு அடிமையாக மாறிவிடுகிறான். அறிவியல் மொழியில் கூறினால்

"எண்ண அலைகளின் கவர்ச்சிக் கோட்பாட்டின்படிதான் ஒரு மிக உயர்ந்த மனிதனோ அல்லது ஒரு பயங்கரவாதியோ உருவாகிறான்" இந்த கோட்பாட்டின்படி பிரபஞ்சம் தோன்றியது முதல் இதுவரை உள்ள காயத்ரி பக்தர்களான தெய்வீக ஆத்மாக்களின் எண்ண அலைகள் ஒன்றாக இணைந்துள்ளன. அதனால் பழங்காலத்து பக்தர்களைவிட தற்கால காயத்ரி பக்தர்கள் மிக எளிதில் ஆன்மீகச் செல்வத்தைப் பெறுகிறார்கள். ஒவ்வொரு சொட்டு நீராக சேர்ந்தால்தான் பெருங்கடல் உருவாக முடியும். அக்கால காயத்ரி சாதகர்கள் எண்ணிக்கையில் மிகவும் குறைந்தவர்களே. அவர்கள் மிக அதிக முயற்சி செய்து ஆன்மவளத்தைப் பெருக்கி வைத்துள்ளனர். அவர்கள் கடல்போல சேமித்து வைத்துள்ள ஆன்மீகச் செல்வத்தை இக்கால காயத்ரி சாதகர்களால் எளிதில் அள்ளிப் பருகமுடிகிறது. காயத்ரி சாதனையால் கிடைக்கும் அத்தனை நன்மைகளையும் சிறிது சாதனை செய்தாலே பெறமுடிகிறது.

பெரும்பாலான மக்கள் காயத்ரி மந்திரத்தின் சிறப்பை அறிந்திருந்தும் அதனால் பயன்பெற முயற்சி செய்வதில்லை. இவர்கள் நிலை, எவருக்கும் பயன்படா வண்ணம் ஏராளமான செல்வத்தை வைத்திருக்கும் துரதிர்ஷ்டசாலியின் நிலையைப் போன்றதே காயத்ரி, கடவுளால் நமக்கு அளிக்கப்பட்டுள்ள தெய்வீக ஞானம். ரிஷிகளும், ஞானிகளும் வேதநூல்களின் மூலம் காயத்ரி சாதனையைக் கொண்டு பயனடையும் வழிகளை விளக்கியுள்ளார்கள். அப்படியிருந்தும் நாம் காயத்ரி சாதனை புரிந்து பயனடையவில்லை எனின் அது நம்முடைய துரதிர்ஷ்டம் என்றே கூறவேண்டும்.

## காயத்ரி என்பது ஆன்மீகத் திரிவேணி

கங்கையும், யமுனையும் நம் கண்களுக்குத் தெரியாத தெய்வீக நதியான சரஸ்வதியும் கலப்பது திரிவேணி என்று அழைக்கப்படுகிறது. இந்தத் திரிவேணி சங்கமம் பிரயாகையில் ஏற்பட்டுள்ளதால் பிரயாகை, தீர்த்தங்களில் எல்லாம் மேலான தீர்த்தமாக உள்ளது. அதுபோல காயத்ரி ஆன்மீக உலகின் திரிவேணியாக உள்ளது. காயத்ரி என்ற சொல்லின் முதல் எழுத்தான "கா" கங்கையைக் குறிக்கிறது; இரண்டாவது எழுத்தான "ய" யமுனையைக் குறிக்கிறது. "த்ரி" என்ற எழுத்து சரஸ்வதி என்ற அறிவுத் தெய்வத்துடன் புனித ஆன்மாவான கங்கையும் தூயமனமாகிய யமுனையும் சங்கமமாவதைக் குறிக்கிறது. 1. சத், சித், ஆனந்தம், 2. சத்தியம், சிவம், சுந்தரம், 3. ஈஸ்வரன், ஆன்மா, இயற்கை, 4. அறம், பொருள், இன்பம் - இவை போன்ற பிற திரிவேணிகளும் காயத்ரியுடன் இரண்டறக் கலந்துள்ளன. பிரயாகையில் உள்ள திரிவேணி சங்கமத்தில் நீராடுவதால் கிடைக்கும் புண்ணிய பலன்களை காயத்ரியை தியானம் செய்வதன் மூலமாகவே பெற்றுவிட முடியும். அதற்காக பிரயாகைக்கு செல்ல வேண்டிய அவசியம் இல்லை. காயத்ரி சாதனை திரிவேணி சங்கமத்தில் நீராடுவதால் கிடைக்கும் தெய்வ அருள், அச்சமின்மை, மன அமைதி, மகிழ்ச்சி ஆகியவற்றை அளிப்பதுடன் சாதகனை ஆன்மீகப் பாதையில் செலுத்தி அவனுக்கு என்றும் அழியாத மோட்சத்தையும் அளிக்கிறது. அதாவது அழிவற்ற இன்பத்தை அளிக்கிறது.

காயத்ரியின் சிறப்புக்கு எல்லையே இல்லை. வேதங்கள், புராணங்கள், சாத்திரங்கள், வரலாறுகள், ரிஷிகள், ஞானிகள், குடும்ப வாழ்க்கை நடத்துபவர்கள் முதலான எல்லோருமே அதன் பெருமையை உணர்ந்து போற்றுகின்றனர். அதற்கு நம்முடைய மனப்போக்கையே மாற்றக் கூடிய அசாதாரணமான ஆற்றல் இருக்கிறது. எதிர்மறை எண்ணங்கள், விரக்தி மனப்பான்மை, தவறான மனப்போக்கு ஆகிய யாவுமே அதனால் சரி

செய்யப்படுகின்றன. நம்முடைய எண்ணங்களும், உணர்ச்சிகளும், ஆசைகளும் அதனால் தூய்மை செய்யப்படுகின்றன. உலக மக்கள் அனைவரிடமும் இந்த மாற்றங்கள் வந்துவிட்டால் நம்மால் தெய்வாத்மாக்களை விட மேலானவர்களாக இருக்க முடியும். இந்த மண்ணுலகம் சுவர்க்கத்தைவிட மேலானதாக மாறிவிடும். நம்முடைய அறிவு தவறான பாதையில் செல்வதாலேயே நமக்கு சுவர்க்கமும் நரகமாக மாறிவிடுகிறது. இந்தக் குறையை அகற்றி நம்மை உயர்ந்த நிலைக்கு கொண்டு செல்லும் ஆற்றலைப் பெற்றது காயத்ரி. இந்த காயத்ரியின் ஆற்றலைப் பயன்படுத்துபவன் தவறான ஆசைகளிலும், தொடர்புகளிலும் இருந்து விடுதலை பெறுகிறான். நிலையான அமைதியை அடைகிறான். அப்போது சத்தியம், சிவம், சுந்தரம் ஆகியவை கடவுளின் வெவ்வேறு வடிவங்களே என்பதைப் புரிந்து கொள்கிறான்.

## திரிபாத காயத்ரி

காயத்ரி மூன்று வளர்ச்சிப் படிகளை உடையது. அது வேதமாதா, தேவமாதா, விஸ்வமாதா ஆகிய மூன்று சக்திகளாகவும் உள்ளது. எனவே அது திரிபாதா என்றும் அழைக்கப்படுகிறது. வேதங்கள் நான்கும் காயத்ரி மந்திரத்திலிருந்தே தோன்றின. அதனால் அது வேதமாதா என்று அழைக்கப்படுகிறது. அம்மந்திரம் நமக்கு தெய்வீக குணங்களையும், இயல்புகளையும் உயர்ந்த சக்தியையும் அளிப்பதன் மூலம் தேவமாதாவாகத் திகழ்கிறது. அது நம்முள் ‘உலகம் எல்லாம் ஒரே குடும்பம்’ (வசுதைவ குடும்பகம்) என்ற உணர்வை உண்டாக்குகிறது. இந்த முறையில் அது விஸ்வமாதாவாகப் பரிணமிக்கிறது. அதன் மூலம் ஒவ்வொரு மனிதனையும் ‘எல்லா ஆன்மாக்களும் என்னுடைய ஆன்மாவே’ என்று உணரச்செய்கிறது; நம் எண்ணம், பண்பு, பணிவு முதலியவைகளை உயர்த்துகிறது. திரிவேணி சங்கமத்தில் மூழ்குபவர்கள் மூன்று ஆறுகளால்

தூய்மை செய்யப்பட்டு புனித நிலையை அடைகிறார்கள். 3 வகையில் மனிதர்களை உயர்த்துவதால் காயத்ரியும் திரிவேணி சங்கமமாக உள்ளது. மூவகை உயர்வுகள் :

(1) காயத்ரி மந்திரம் குருமந்திரம் எனப்படுகிறது. அதுவே எல்லா மந்திரங்களுக்கும் மேலான மந்திரமாகவும், மூலமந்திரமாகவும் உள்ளது.

(2) ஆதி காலத்தில் பள்ளிகள் முதன்முதலில் காயத்ரி மந்திரம்தான் கற்பிக்கப்பட்டது. காரணம், கல்வி கற்பதன் அடிப்படை நோக்கம் நேர்மையாக வாழக் கற்றுக் கொள்வதும், பின்னர் துன்பங்களை முன்னரே அறிவுக் கூர்மையால் உணர்ந்து அத்துன்பங்கள் வராமல் தன்னைக் காத்துக் கொள்வதுமே ஆகும். இந்த இரண்டு நற்பேறுகளையும் காயத்ரி மந்திரம் இளமையிலேயே அளித்து விடுகிறது.

(3) காயத்ரி மந்திரத்தால் உள்ள எழுத்துக்கள் சிறந்த முறையில் இணைத்து அமைக்கப்பட்டுள்ளன. அம்மந்திரத்தை உச்சரிக்கும்பொழுது உண்டாகும் அதிர்வுகள் சாதகனுடைய உடலில் அமைந்துள்ள 24 உயிர் மையங்களையும் (கிரந்திகளையும்) தூண்டிவிட்டு அவனை விழிப்புணர்ச்சியும், எழுச்சியும் பெறச் செய்கிறது.



# 6. உயர்ந்தோர் போற்றும் காயத்ரி

இந்து மதத்தில் பல்வேறு தத்துவங்கள் உள்ளன. அவைகளுக்குள் மாறுபட்ட கருத்துக்களும் உள்ளன. ஆனால் எல்லா தத்துவங்களும் காயத்ரியின் சிறப்பை ஒப்புக் கொள்ளுகின்றன. ஞானிகளும், ரிஷிகளும் காயத்ரி மந்திரத்தின் உயர்வை பாராட்டுகின்றனர்.

அதர்வண வேத ஸ்லோகம் ஒன்று (19.1.71) "காயத்ரி நமக்கு நீண்ட ஆயுளையும், ஆற்றலையும், வலிமை, புகழ், செல்வம், பிரம்மதேஜஸ் ஆகியவற்றையும் அளிக்கிறது" என்று கூறுகிறது.

"காயத்ரியைப் போன்ற ஒரு மந்திரம் நான்கு வேதங்களிலுமே இல்லை. வேதங்கள், யக்ஞங்கள், தான தர்மங்கள், தவம் ஆகிய யாவும் காயத்ரி மந்திரத்தின் ஒரு சிறிய பகுதிக்குக் கூட இணையாக மாட்டா" என்று விஸ்வாமித்ர மகரிஷி கூறுகிறார்.

"காயத்ரியைப் போல் புனிதமாக்கும் மந்திரம் வேறு எதுவும் இல்லை. மூன்று ஆண்டுகள் தவறாமல் காயத்ரி தவம் செய்தவன் கடவுளைக் காண்பான்; காலை சந்தியிலும், மாலை சந்தியிலும் காயத்ரி மந்திரத் தியானம் செய்யும் பிராமணன் நான்கு வேதங்களையும் படித்த புண்ணியத்தைப் பெறுகிறான்; ஒருவன் இந்த காயத்ரி ஜபம் ஒன்றின் மூலமே அஷ்டமாசித்திகளையும் பெறுகிறான்; தினமும் 1,000 முறை காயத்ரி மந்திர ஜபம் செய்பவன், பாம்பு தன் சட்டையை உரிப்பது போல், எல்லா பாபங்களிலும் இருந்து விடுதலை பெறுகிறான்; காயத்ரி வழிபாடு செய்யாத பிராமணன் நரகத்திற்கு

செல்வான்'' என்று மனு கூறியுள்ளார்.

யக்ஞவால்க்யர், ''காயத்ரியையும் வேதங்களையும் சீர்தூக்கிப் பார்த்ததில் காயத்ரியே மேலோங்கி நின்றது. உபநிடதங்கள் வேதங்களின் சாரம், காயத்ரியும் அதன் உட்பொருளும் உபநிடதங்களின் சாரம். காயத்ரி வேதங்களின் தாய். அது பாபங்களை அழிக்கிறது. மக்களைப் புனிதமாக்குவதில் காயத்ரிக்கு இணையாக விண்ணுலகத்திலும், மண்ணுலகத்திலும் வேறு எதுவுமே இல்லை. கங்கைக்கு இணையான புனிதநதி இல்லை. கேசவனுக்கு மேலான தெய்வமும் இல்லை; அதேபோல் காயத்ரிக்கு மேலான மந்திரமும் இல்லை. காயத்ரியை அறிந்தவன் ஷ்ரௌட்ரியன் (முழுமையான ஞானத்தைப் பெற்றவன்) ஆகிறான். காயத்ரியிடம் பக்தி கொள்ளாத பிராமணன் இழிவானவனே. அவன் வேதங்களை எல்லாம் கற்றுத் தேர்ந்திருந்தாலும் அவையாவும் விழலுக்கு இறைத்த நீரைப் போல் பயனற்றுப் போகும். காயத்ரியை அறியாத பிராமணன் பிராமணத்துவத்தை இழந்த பாபியாக மாறிவிடுகிறான்'' என்று கூறுகிறார்.

பராசர முனிவர், ''தியானங்கள், சூக்தங்கள், வேதமந்திரங்கள் ஆகிய எல்லாவற்றையும் விட மேலானது காயத்ரி மந்திரம். ஆழ்ந்த பக்தியுடன் காயத்ரி ஜபம் செய்பவன் புனிதனாகி பரமபதத்தை அடைகிறான். வேதங்களையும், சாத்திரங்களையும், புராணங்களையும் கற்றிருந்தாலும் காயத்ரியை அறியாதவன் பிராமணன் ஆகமாட்டான்'' என்று கூறுகிறார்.

ஷாங்க ரிஷி, ''காயத்ரி மட்டுமே ஒரு மனிதனை நரகத்தில் விழாமல் காப்பாற்றுகிறது. விண் உலகத்திலும் மண்ணுலகத்திலும் அதற்கு மேலானது எதுவுமே இல்லை. காயத்ரியை அறிந்தவன் சுவர்க்கத்தை அடைவான் என்பதில் சந்தேகமே இல்லை'' என்று கூறுகிறார்.

ஷௌனக ரிஷி, "ஒரு பிராமணன் வேறு வகையான வழிபாடுகளை செய்தாலும் செய்யாவிட்டாலும் பரவாயில்லை. காயத்ரி ஜபம் ஒன்றை மட்டும் செய்தாலே போதும். இந்த உலகத்தில் எல்லா இன்பங்களையும் அனுபவித்து விட்டு இறுதியில் மோட்சத்தையும் அடைவான். 10,000 காயத்ரி ஜபசாதனை செய்தால் நெருக்கடி நீங்கும்!" என்கிறார் (குறிப்பு : நெருக்கடி நீங்குதல், நோய்வாய்ப்பட்டிருப்பவர் நலமுறுதல், கொடுத்த கடன் திரும்பி வருதல், எதிரிகளால் வரவிருக்கும் ஆபத்து விலகுதல், காணாமல் போனவர் திரும்ப வருதல் போன்றவை)

அத்திரி முனிவர், "காயத்ரி ஆன்மாவை முற்றிலும் தூய்மை செய்கிறது. காயத்ரியின் உன்னதமான ஆற்றலால் புரையோடியிருக்கும் குறைகளும், தீய பழக்கங்களும் வேரோடு களையப்படுகின்றன. காயத்ரியின் உட்பொருளை முழுமையாக அறிந்தவன் அனுபவிக்கும் இன்பத்திற்கு மேலான இன்பத்தை வேறு ஒருவன் தன் வாழ்நாள் முழுவதிலும் காணமுடியாது" என்று கூறுகிறார்.

வியாச பகவான், "எவ்வாறு மலரின் சத்தாக தேனும், பாலின் சத்தாக வெண்ணெயும் உள்ளனவோ அதேபோல நான்கு வேதங்களின் சாரமாக காயத்ரி உள்ளது. உபாசகர்களுக்கு காயத்ரி ஒரு காமதேனு. கங்கை பூதவுடல் செய்த பாபங்களைப் போக்குகிறது. காயத்ரி என்னும் பிரம்மகங்கை ஆன்மாவைத் தூய்மை செய்கிறது. காயத்ரி வழிபாடு செய்யாமல் வேறு வழிபாடுகளைச் செய்பவன் கையில் உள்ள இன்சுவை உணவை சாப்பிடாமல் பசியைத் தீர்த்துக் கொள்ள பிச்சை எடுக்கும் தொழிலை மேற்கொள்ளும் முட்டாளுக்கு ஒப்பாவான். விருப்பங்கள் நிறைவேறுவதற்கும், தவ வலிமை பெருவதற்கும் சிறந்த மார்க்கம் காயத்ரி மார்க்கமே"

என்கிறார்.

பரத்வாஜ மகரிஷி, "பிரம்மா முதலான கடவுள்களும் காயத்ரி ஜபம் செய்கிறார்கள். அது பரஞானத்தை அடைய (தெய்வத்தை உணர) வழிகாட்டுகிறது. கொடிய மனம் படைத்தவன் கூட காயத்ரி ஜபம் செய்தால் தன் குறைகளிலிருந்து விடுபடுகிறான். காயத்ரியை அறியாதவன் சூத்ரனைவிட தாழ்ந்தவனாவான்" என்கிறார்.

நெல்லிக்கனியை சாப்பிட்டுக் கொண்டு பிரம்மச்ரியம் காத்து காயத்ரி வழிபாடு செய்துவருபவன் நீண்டகாலம் வாழ்வான் என்று சரகர் கூறுகிறார். "பக்தியே காயத்ரி. எங்கெல்லாம் பக்தி (காயத்ரி) உள்ளதோ அங்கெல்லாம் நாராயணன் வாழ்கிறார் என்பதில் சந்தேகமில்லை" என்று நாரத மகரிஷி கூறுகிறார்.

வசிஷ்டர், "சோம்பலும் சலனபுத்தியும் உள்ளவன் காயத்ரியின் ஆற்றலால் உயர்ந்த நிலையை அடைகிறான். உறுதியுடனும், தூய மனத்துடனும் காயத்ரி வழிபாடு செய்பவன் தன்னை உணர்ந்தவன் ஆகிறான்" என்று கூறுகிறார். அனேகமாக எல்லா ரிஷிகளுமே காயத்ரியைப் பொறுத்தவரை ஒரே மாதிரியான கருத்தையே கொண்டுள்ளார்கள்.

ஜகத்குரு சங்கராச்சாரியார், "காயத்ரியின் புகழை மனிதனால் விவரிக்க முடியாது. உலகில் ஞானத்தைவிட முக்கியமானது வேறு ஒன்றும் இல்லை. ஏனெனில் தன்னை உணர்ந்த நிலையை அடைய ஞானம் இன்றியமையாதது. காயத்ரி அளிக்கும் உள்ளொளி அந்த ஞானத்தைதத் தருகிறது. காயத்ரியே மூலமந்திரம்; பாபங்களை அழித்து புண்ணியத்தை வளர்ப்பதற்கு தானாகவே தோன்றிய மந்திரம்" என்று கூறுகிறார்.

ராமகிருஷ்ண பரமஹம்சர், "நீண்டகால ஆன்ம சாதனை எதிலும் ஈடுபட வேண்டுவதில்லை. எளிய காயத்ரி சாதனை செய்யுங்கள். அதன் மூலம் அஷ்டமாசித்திகளும் கிடைக்கும். இந்த மந்திரம் சிறியதுதான்; ஆனால் இதன் ஆற்றலோ எல்லையற்றது" என்கிறார்.

ஆரிய சமாஜத்தைத் தோற்றுவித்த சுவாமி தயானந்த சரஸ்வதி ஒரு தீவிர காயத்ரி பக்தர். அவர் "வாராவாரம் பாகவதம் கதா காலட்சேபம் செய்வதை விட காயத்ரி புறச்சரணம் செய்வது மேலானது என்று குவாலியர் மன்னரிடம் கூறியுள்ளார். அவர் சச்சிதானந்தர், ஹீராலால், ராவல், கோடல்சிங் போன்ற பலருக்கு ஜெய்ப்பூரில் காயத்ரி ஜபம் செய்யும் முறையில் பயிற்சி அளித்திருக்கிறார். மூல்டானில் அவர் "வேதங்களின் பிறப்பிடம் காயத்ரி. பழங்காலத்தில் எல்லா ரிஷிகளும், ஞானிகளும் காயத்ரி ஜபம் செய்வதை ஒரு வழக்கமாகக் கொண்டிருந்தார்கள்" என்று காயத்ரி மந்திரத்தின் உயர்வை விளக்கியுள்ளார். அவர் பல இடங்களில் காயத்ரி அனுஷ்டான விழாக்கள் நடத்தியுள்ளார்.

சுவாமி ராமதீர்த்தர், "வாழ்க்கையின் குறிக்கோள் ஸ்ரீராமனை அடைவது. மனதைப் புலன்களின் வழியே கிடைக்கும் இன்பங்களை நாடாமல் கடவுளின் பக்கம் திருப்புவது காயத்ரியின் நோக்கம். எவனுடைய மனம் தூய்மையாய் இருக்கிறதோ அவனே ஸ்ரீராமனை அடைய முடியும். அந்தத் தூய்மையை அளிப்பது காயத்ரி" என்று கூறியுள்ளார்.

விவேகானந்தர், "ஒருவன் ஒரு அரசனிடம் போய் பிச்சை கேட்கும் பொழுது அந்த அரசனின் தகுதிக்கு ஏற்ற வகையில் கேட்கவேண்டும். கடவுளிடம் கேட்கும் பொழுது தூய்மையான தெய்வீக ஞானத்தை கேட்பதே

மிகவும் பொருத்தமானது. கடவுள் யாரிடம் அன்பு கொள்கிறாரோ அவனுக்கு அந்த தெய்வீக ஞானத்தை அளிக்கிறார். அந்த ஞானம் மனிதனை நேர்மையான பாதையில் செலுத்தி எல்லா வகையான இன்பங்களையும் அடையச் செய்கிறது. உண்மையின் பாதையில் முன்னேறிச் செல்பவன் எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் இருக்கிறான். காயத்ரி மந்திரம் உண்மையான ஞானத்தை தரும் மந்திரம், அதனால் அந்த மந்திரம், 'மந்திரங்களின் மணிமகுடம்' என்று அழைக்கப்படுகிறது'' என்கிறார்.

மகாத்மா மதன்மோகன் மாளவியா, ''காயத்ரி, ரிஷிகளால் நமக்கு அளிக்கப்பட்டுள்ள விலை மதிப்பிட முடியாத வைரம். அது மனதை தூய்மைப்படுத்துகிறது. ஆன்மாவை தெய்வீக ஒளியால் நிரப்புகிறது. இந்த தெய்வீக ஒளியால் கணக்கற்ற ஆன்மாக்கள் உலக பந்தங்களிலிருந்து விடுதலை அடைந்துள்ளன. அது கடவுளிடம் சரணாகதி அடைய உதவுகிறது; பற்றாக் குறையே இல்லாத நிறைவாழ்வு வாழத் துணை புரிகிறது. காயத்ரி சாதனை பிராமணர்களுக்கு மிகமிக அவசியம். காயத்ரி ஜபம் செய்யாத பிராமணன் கடமை தவறியவன் ஆவான்'' என்று கூறுகிறார்.

ரமண மகரிஷி, ''மந்திர அறிவு சக்தி வாய்ந்தது; மந்திர சக்தியால் வியக்கதக்க வெற்றிகளைப் பெற முடியும்.காயத்ரி மந்திரம் உலகியல் நலன்களையும் ஆன்மீக வளர்ச்சியையும் அளிக்கவல்லது'' என்று கூறுகிறார்.

பிரம்மஞான சபையின் மூதறிஞரான பேராசிரியர் ஆர். ஸ்ரீனிவாசன் ''இந்துமதம், காயத்ரியை மிகவும் சக்தி வாய்ந்த மந்திரமாகக் கருதிவருகிறது. அதன் ஆழ்ந்த பொருள் மனித அறிவால் முழுமையாகக் கண்டறிய முடியாதது. அது பல்வேறு மனிதர்களின் பல்வேறு

வகையான மனநிலைகளுக்கு ஏற்றவாறு பலனளிக்கிறது" என்று குறிப்பிட்டுள்ளார்.

லோகமான்ய திலகர் "அரசியல் போராட்டத்தால் மட்டுமே அடிமைத்தளையிலிருந்து விடுபட முடியாது. விடுதலை பெற ஒவ்வொருவரின் உள்மனமும் ஒளிபெற வேண்டும். அவ்வாறு உள்ளொளி பெற்ற ஆன்மாவால் தான் நல்லது எது? தீயது எது? என்று பிரித்து அறிய முடியும். அப்படிப் பிரித்து அறிய வல்ல மக்களே தவறான பாதையை விடுத்து நேரான பாதையில் சென்று வெற்றி காண முடியும். காயத்ரி மந்திரம் இந்த வெற்றிப் பாதையில் செல்ல உதவுகிறது" என்று கூறியுள்ளார்.

ரவீந்திரநாத் தாகூர், "இந்தியாவை விழிப்படையச் செய்யவல்லது காயத்ரி மந்திரம். இதில் கருத்து வேறுபாடுகொள்ள இடமே இல்லை" என்கிறார்.

"நோய்களைத் தீர்க்கவும், ஆன்ம வளர்ச்சிக்கும் காயத்ரி மந்திரத்தை இடைவிடாது ஜபித்து வருவது நல்ல பலனளிக்கும். ஏதேனும் துன்பம் வரும்போது மனதை அமைதியாக வைத்துக் கொண்டு சலனமின்றி காயத்ரி ஜபம் செய்தால் அந்தத் துன்பம் நீங்கிவிடும்," என்கிறார் மகாத்மா காந்தி.

யோகி அரவிந்தர், "முக்கியமான பெரும்பணிகளை செய்து முடிக்க காயத்ரி ஜபம் துணைபுரிகிறது" என்கிறார். "காயத்ரி வழிபாடு உலக வழிபாடு; அது ஆன்மாவுக்கு புத்துயிர் அளிக்க வல்லது" என்று டாக்டர்.எஸ்.ராதாகிருஷ்ணன் கூறுகிறார். இன்னும் எண்ணற்ற பெரியோர்கள் காயத்ரியின் சிறப்பை விளக்கிக் கூறியுள்ளார்கள்.

இவற்றிலிருந்து தெரிவது என்ன?

"காயத்ரி சாதனை ஒரு குருட்டு நம்பிக்கை அல்ல. அது தனிமனித முன்னேற்றத்திற்கான ஆதாரங்களைத் தன்னுள் கொண்டது. காயத்ரி சக்தியிடம் அடைக்கலம் புகுந்தவர்கள் அளவு கடந்த நன்மைகளை அடைகிறார்கள். காயத்ரி சாதனை பயனளித்தே தீரும்" என்பது உண்மையே.



# 7. காயத்ரி அளிக்கும் ஆன்மீக ஆற்றல்கள்

பழங்கால ரிஷிகளும், மகரிஷிகளும் காயத்ரி அடிப்படையில் யோக சாதனை செய்தார்கள்; தவ ஒழுக்கத்தில் ஈடுபட்டிருந்தார்கள் என்று புராணங்கள் கூறுகின்றன. அத்திரி முனிவர், விஸ்வாமித்திரரர், வியாச பகவான் போன்ற பழங்கால மகரிஷிகள் யாவரும் தங்கள் வெற்றியின் மூலகாரணம் காயத்ரிதான் என்று தெளிவாக விளக்கிக் கூறியுள்ளார்கள். சமீபகாலத்தில் கூட பல ஞானிகள் காயத்ரியை சரணடைந்து ஆன்ம ஒளி பெற்றிருக்கிறர்கள். அவர்கள் வழிபட்ட தெய்வங்கள் வெவ்வேறாக இருக்கலாம். வழிபாட்டு மந்திரம் காயத்ரி மந்திரம் ஒன்றே. அவர்கள் தங்களை அறியாமலே வேதமாதாவிடம் ஆழ்ந்த பக்தி கொண்டவர்கள். அவர்கள் உலகமாதாவின் ஞானப்பாலை ஆரம்பத்திலிருந்தே பருகிவந்ததால், அறிவிலே உயர்ந்து ஞானிகளாகத் திகழ்கிறார்கள்.

நகரை என்ற ஊருக்கு அருகில் உள்ள ராம்தேக்ரி காட்டுப் பகுதியில் வாழ்ந்த ஹரிஹரர் என்ற ஞானி காயத்ரி

சாதனை மூலம் சித்தி அடைந்தார். அவரை பார்க்கச் செல்பவர்கள் சிங்கங்களும் புலிகளும் வாழும் அந்த அடர்ந்த காட்டிற்குள் 14 மைல் கடந்து செல்லவேண்டும். "நாங்கள் ஹரிஹரரைப் பார்க்கப் போகிறோம்" என்று கூறிக்கொண்டு சென்றால் அந்த கொடிய வனவிலங்குகள் பயணிகள் கண்களில் படுவதே இல்லை.

லக்ஷ்மண்கர் என்ற ஊரில் விஸ்வநாத் கோஸ்வாமி என்பவர் இடைவிடாது காயத்ரி சாதனை செய்து கொண்டிருந்தார். அவருடைய ஆசிபெற்ற ஒரு ஏழை சிகார் இனக் குடும்பம் வறுமை நீங்கி செல்வச் செழிப்பு பெற்றது. அந்தக் குடும்பத்தினர் இன்றும் கோஸ்வாமி சமாதிக்குச் சென்று தங்கள் குழந்தைகளுக்கு முடி இறக்கி வருகிறார்கள்.

பழைய ஜெய்ப்பூர் ராஜ்யத்தில், ஜான் என்னும் கிராமத்தில் பண்டிட் ஹரிராய் என்று ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் ஆழ்ந்த காயத்ரி பக்தர். அவர் தனக்கு மரணம் வரப்போவதை முன்னரே அறிந்திருந்தார். அவர் உயிர்விடப் போகும் நாளில் தன் சீடர்களுக்கும், குடும்பத்தினருக்கும் ஒரு சமயச் சொற்பொழிவு நிகழ்த்தினார். சொற்பொழிவை முடித்தவுடன் காயத்ரி மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே உயிர்விட்டார்.

விஷ்ணுதாஸ்ஜி என்பவர் ஜெய்ப்பூருக்கு அருகில் உள்ள புதகேவாள் என்ற கிராமத்தில் பிறந்தவர். அவர் வாழ்நாள் முழுவதும் திருமணம் செய்து கொள்ளாமல் பிரம்மச்சரிய விரதம் பூண்டு ஒழுகியவர். அவர் புஷ்கர் என்ற ஊரில் ஒரு குடிசையில் துறவியாக வாழ்ந்து வந்தார். காயத்ரி சாதனை மூலம் அவர் பல சித்திகளை அடைந்தார். ஜோத்பூர், ஜெய்ப்பூர் அரசர்கள், மற்றும் உயர்நிலையிலுள்ள பலரும் அவரிடம் வந்து ஆசிபெற்றுச் செல்வார்கள். உதயபுரி மகாராணா அவரைத் தன் தலைநகரத்துக்

அழைத்துச் சென்று அவரைக் கொண்டு ஒரு மிகப் பெரிய காயத்ரி புறச் சரணவிழா நடத்தினார். விஷ்ணுதாஸ்ஜி செய்த அற்புதங்கள் இன்றும் ராஜஸ்தானில் கதைகளாக கூறப்படுகின்றன.

பண்டிட் புதர்மால் என்பவர் ரத்தன்கர் நகரில் வாழ்ந்த கற்றறிந்த பிராமணர். அவர் ஆழ்ந்த காயத்ரி பக்தர். அவர் சம்வத ஆண்டு (1996). காசிக்குச் சென்று அங்கேயே சாகும் வரை வாழ்ந்தார். அவர் உயிர் போகும் நேரத்தை முன்னரே அறிந்திருந்தார். அன்று ஒரு மிகப்பெரிய சமய விழாவுக்கு ஏற்பாடுச் செய்தார். அந்த விழாவில் கடவுள் வழிபாடு செய்துகொண்டு இருக்கும்போதே பூதவுடலை நீத்து விண்ணுலகை அடைந்தார். அவரிடம் ஆசிபெற்ற பலர் இன்று கோடீஸ்வரர்களாக வாழ்கிறார்கள்.

ஆல்வார் ராஜ்யத்தில் ஒரு சிறு கிராமத்தில் சாதாரண குடும்பத்தில் பிறந்த ஒருவர் மதுரா சென்று அங்கு ஒரு குன்றின்மேல், காயத்ரி ஜப சாதனை செய்து வந்தார். ஒரு கோடி ஜபம் செய்ததும் அவர் தெய்வத்தை உணர்ந்து சித்தபுருஷர் ஆனார். அவர் பூட்டிசித்தர் என்று அழைக்கப்பட்டார். அவர் எப்பொழுதும் மௌனமாகவே இருப்பார். நாளடைவில் அந்த குன்று காயத்ரி தீலா என்ற பெயரில் புகழ் பெற்றது. அக் குன்றின் மேல் ஒரு காயத்ரி கோவில் உள்ளது. அந்த சிறிய கோவிலில் ஒரு அழகிய காயத்ரி சிலை வைக்கப்பட்டுள்ளது. இந்தத் துறவியின் ஆசியால் பயனடைந்தவர்கள் பலர். தோல்பூர் அரசரும் ஆல்வார் அரசரும் அவர் மீது அளவு கடந்த நம்பிக்கை வைத்திருந்தனர்.

ஓங்காரேஷ்வர் என்ற ஊரிலுள்ள மாந்தாதா கோவிலுக்குப் பின்புறம் உள்ள ஒரு குகையில் ஒரு துறவி காயத்ரி ஜபம் செய்து கொண்டிருந்தார். அவர் உயிர்விடும்

போது அவருடைய குடும்பத்தினர் யாவரும் அருகில் இருந்தனர். ஒரு சிறுவன் அவரிடம், எனக்கு அறிவு மந்தமாக உள்ளது; "எனக்கு நல்ல அறிவு கிடைக்க ஆசீர்வதிக்க வேண்டும்" என்று வேண்டினான். அந்தத் துறவி தன் கமண்டலத்திலிருந்து கொஞ்சம் தண்ணீர் எடுத்து அவர் வாயில் ஊற்றி, "நீ ஒரு சிறந்த அறிஞன் ஆவாய்" என்று வாழ்த்தினார். காலப்போக்கில் அந்தச் சிறுவன் ஒரு கற்றிந்த மேதை ஆனான். இந்தூர் முவதும் அவன் புகழ் பரவியது. அவன் பெயர் ஓங்கார் ஜோஷி. இந்தூர் அரசர் காலையில் உலாவச் செல்லும் போது அவனுடன் பேசிக் கொண்டு செல்வதை மிகவும் விரும்பினார். இவ்வாறு மன்னரே அவனுடன் பேச விரும்பும் அளவுக்கு அவன் கல்வி அறிவு வளர்ந்திருந்தது.

சாண்டல் என்ற ஊரில் குண்டலினி ஆற்றல் கைவரப் பெற்றவர் ஸ்ரீ உதாத்ஜி ஜோஷி யோகேஸ்வர். அவர் காயத்ரி சாதனை மூலமே குண்டலினி ஆற்றலைப் பெற்று துறவி ஆனார். அவர் பலரை மரணத்திலிருந்து காப்பாற்றினார். அவர் ஆசியினால் துன்பம் நீங்கியவர்களும் செல்வந்தர் ஆனவர்களும் மிகப் பலர். அவர் ஏதாவது நடக்கப்போகிறது என்று கூறினால் அது தவறாமல் நடக்கும். அவரை சோதிக்கவும் ஏளனம் செய்யவும் விரும்பிய ஒருவன் தொழுநோயால் பாதிக்கப்பட்டு பிறர் ஏளனம் செய்யும் நிலையை அடைந்தான்.

பரோடா ராஜ்யத்தில் மஞ்சுசார் என்ற ஊரில் வாழ்ந்த ஸ்ரீ முக்தாராம்ஜி மகராஜ் ஒரு சிறந்த காயத்ரி பக்தர். அவர் பல சித்திகளை அடைந்தார். அவர் ஒரு நாளைக்கு எட்டு மணி நேரம் காயத்ரி ஜபம் செய்வார். அயல் நாடுகளில், நடப்பவைகளையும் நேரில் பார்த்தவர் போல் கூறுவார். அவர் கூறுபவை யாவும் நூற்றுக்கு நூறு உண்மையாக இருந்தன. அவர் முதல் வகுப்பு அல்லது

இரண்டாம் வகுப்பு வரைதான் படித்தவர். ஆனால் அவரால் உலகில் உள்ள எல்லா மொழிகளிலும் பேச முடியும். அயல் நாட்டவர்கள் அவரிடம் வந்து அவரவர் மொழிகளில் மணிக்கணக்காக பேசிக்கொண்டிருப்பார்கள். அவர் யோகம், சோதிடம், ஆயுர்வேத மருத்துவம், தாந்திரீகம், சமயம் ஆகியவற்றில் நிறைந்த ஞானம் பெற்றிருந்தார். பல அறிஞர்கள் அவரிடம் வந்து தங்கள் சந்தேகங்களை தீர்த்துக் கொள்வார்கள். அவர் பல அற்புதங்களை செய்து காட்டியுள்ளார்.

போர்சாட் நகரில் ஒரு துறவி ஏழு ஆண்டு உண்ணாவிரதம் இருந்து ஒரு காயத்ரி புறச் சரணம் செய்து நோன்பை முடித்துக் கொண்டார். அவர் கூறியவை எல்லாம் அப்படி அப்படியே நடந்தன.

காசியில் பாபா சிவப்பிரசாத் குப்தா பாரதமாதா கோவில் கட்டினார். அதற்கு பாபு பகவான்தாஸ் அடிக்கல் நாட்டினார். அந்த நிகழ்ச்சியில் ஒரு காயத்ரி மகாயக்ஞம் நடத்தப்பட்டது.அந்த யக்ஞம் 200 நாள்கள் நடந்தது. அதில் இருபது லட்சம் காயத்ரி ஜபங்கள் செய்யப்பட்டன. யக்ஞம் நிறைவு பெற்று பூர்ணாஹுதி செய்த நாளில் சுற்றியிருந்த மரங்களில் இருந்த உலர்ந்த இலைகள் யாவும் பச்சிலைகளாக மாறின. ஒரு பழமரத்தில் நிறைய பழங்கள் பழுத்துத் தொங்கின. இந்த அதிசய நிகழ்சியை பண்டிட் மதன்மோகன் மாளவியா, ராஜ மோதிசந்த், உயர்நீதிமன்ற நீதிபதி ஸ்ரீ கான்ஹையாலால் போன்ற பெரியோர் பலர் நேரில் கண்டு காயத்ரியின் ஆற்றலை தங்கள் சொந்த அனுபவத்தில் உணர்ந்தனர்.

வைணவ ஆசாரியர்களான பிருந்தாவனம் கதியபாபா, உதய் பாபா, சுவாமி கங்கேஷ்வரானந்தா ஆகியோர் காயத்ரி சாதனைக்கு மிக அதிகமான முக்யத்தும் அளிக்கின்றனர். பண்டிட் பால்பத்ராஜி பிரம்மச்சாரி,

சுவாமி தேவதர்சன், மகாத்மா யோகானந்தஜி, சுவாமி பிரம்மரிஷி தாஸ்ஜி போன்ற பல மகான்கள் காயத்ரி சாதனையால் உயர்ந்த நிலையை அடைந்த மகான்கள்.

நான் இளமையிலிருந்து காயத்ரி சாதனை செய்து வருகிறேன். என் வெற்றிகளுக்கெல்லாம் அதுவே காரணம். நான் குற்றங்குறைகளிலிருந்தும், பாபங்களி லிருந்தும், தீய எண்ணங்களிலிருந்தும் விடுபட்டி ருக்கிறேன். தெய்வீக உணர்வு, நேர்மைப்பண்பு, கடமை உணர்ச்சி, தொண்டு மனப்பான்மை, சுய கட்டுப்பாடு, தவ ஒழுக்கம், கற்றலில் ஈடுபாடு ஆகிய உயர்ந்த பண்புகளைப் பெற்றிருக்கிறேன். இவைகள் யாவுமே அந்த தெய்வத்தாயின் திருவருளின் விளைவுகளே ஆகும். அந்த அன்னை பல முறை என்னை பல சிக்கல்களிலிருந்து காப்பாற்றியுள்ளாள். இருள் சூழ்ந்திருந்த என் வாழ்க்கையை அவள் ஒளிமயமாக மாற்றி அமைத்திருக்கிறாள். என் மூலம் வேதமாதா காயத்ரியை வழிபடத் தொடங்கியவர்கள் யாவரும் தங்களிடம் நேர்மை, தூய்மை, விழிப்புணர்ச்சி, பாப காரியங்களில் வெறுப்பு, சுயகட்டுப்பாடு முதலிய நற்பண்புகள் வளர்ந்துள்ளதை உணர்கிறார்கள். அவர்கள் உலகியல் பயன்களை விட மிகவும் மேன்மையான ஆன்மீக லாபத்தை அடைந்துள்ளார்கள்.

ஆகையால் நான், “இந்தப் புத்தகத்தை படிப்பவர்கள் யாவரும் காயத்ரி சாதனை செய்ய வேண்டும். அதன் மூலம் நீங்கள் உங்களிடமே சத்வகுணம், விவேகம், நேர்மை, முதலியவை வளர்வதைக் கண்டுணர வேண்டும். உலக வாழ்க்கையிலும், ஆன்மீக வாழ்க்கையிலும் வெற்றிகள் பல பெற வேண்டும். வேதமாதா அருள் பிரசாதத்தால் நீங்களே பல அற்புதங்களை நிகழ்த்த வேண்டும்” என்று உங்கள் அனைவரையும் கேட்டுக் கொள்கிறேன். ❁ ❁ ❁

# 8. வேத நூல்களில் காயத்ரி சாதனை

நடைமுறை வாழ்க்கையில் காயத்ரி சாதனை மூலம் எண்ணற்ற மக்கள் அளவற்ற பயன்களைப் பெற்றிருக்கி றார்கள். இப்போதும் பெற்று வருகிறார்கள். இவற்றை நீங்களே உங்கள் சொந்த அனுபவத்தில் தெரிந்து கொள்ளலாம். உங்கள் வளர்ச்சிக்கு வேத நூல்கள் காயத்ரி சாதனையைப் பற்றி என்ன கூறுகின்றன என்று அறிந்து கொள்வது மிகவும் அவசியம். இனி அவற்றைக் காண்போம்.

**सर्वेषां वेदानां गुह्योपनिषद्सार**
**भूतां ततो गायत्रीं जपेत्॥ (छान्दोग्य परिशिष्टम्)**

ஸர்வேஷாம் வேதானாம் குஹயோபநீஷத்சார
பூதாம் ததோ காயத்ரிம் ஜபேத்

சாந்தோக்ய பரிஸிஷ்டம்

காயத்ரி மந்திரம் வேதங்கள். உபநிடதங்கள் ஆகியவற்றின் சாரம். ஆகையால் தினமும் காயத்ரி ஜபம் செய்ய வேண்டும்.

**सर्ववेदसारभूता गायत्र्यास्तु समर्चना।**
**ब्रह्मादयोऽपि सन्ध्यायां तां ध्यायन्ति जयन्ति च॥**

**(देवी भागवत् स्क.16 अ. 16.15-16)**

ஸர்வவேதஸாரபூதா காயத்ர்யாஸ்து ஸமர்சணா
ப்ரஹ்மாதயோ(அ)பிஸந்த்யாயாம் தாம் த்யாயந்தி ஜயந்தி சா

தேவீ பாகவத ஸ்க. 16 அ. 16/15

காயத்ரி மந்திர சாதனையே எல்லா வேதங்களின் சாரமாகவும் இருப்பதால் பிரம்மா சந்தியா வேளைகளில் காயத்ரி தியானம் செய்கிறார்.

**गायत्रीमात्र निष्णातो द्विजो मोक्षमवाप्नुयात्॥ (देवीभागवत् स्क.12 अ. 8.90)**

காயத்ரி மாத்ர நிஷ்ணாதோ த்விஜோ மோக்ஷமவாப்னுயாத் !

தேவீ பாகவத ஸ்க. 12 அ. 8/90

காயத்ரி ஜபம் மட்டும் செய்துவரும் பிராமணன் பாபங்கள் நீங்கப் பெற்று முக்தி அடைகிறான்.

**योऽधीतेऽहन्यहन्येतां त्रीणि वर्षाण्यतन्द्रितः।**
**स ब्रह्म परमभ्येति वायुभूतः स्वमूर्तिमान्॥ ( मनुस्मृति )**

யோ(அ)திதே(அ)ஹந்ய ஹந்யேதாம் த்ரீணி வர்ஷான்தந்த்ரித:
ஸப்ரஹ்ம பரமப்யோதி வாயுபூத: ஸ்வமூர்த்திமான் ! !

மனுஸ்ம்ருதி

மூன்று ஆண்டுகள் தினமும் காயத்ரி ஜபம் செய்பவனால் கடவுளைக் காணமுடியும்; காற்றைப் போல் விரும்பிய இடத்திற்கு செல்லும் ஆற்றலைப் பெறமுடியும்.

**कुर्यादन्यन्न वा कुर्यात् इति प्राह मनुः स्वयम्।**
**अक्षय मोक्षमाप्नोति गायत्रीमात्र जापनात्॥ ( शौनक )**

குர்யாதந்யந்ன வா குர்யாாத் இதி ப்ராஹ மனு: ஸ்வயம்
அக்ஷய மோக்ஷம மாப்னோதி காயத்ரிமாத்ரஜாபனாத்

ஸௌனக

ஒரு த்விஜன் (பிராமணன்) வேறு எந்த தெய்வத்தை வழிபட்டாலும் சரி; எந்த தெய்வத்தையும் வழிபடா விட்டாலும் சரி. அவன் காயத்ரி ஜபம் மட்டும் செய்து கொண்டிருந்தாலே வற்றாத பேரின்ப வெள்ளத்தில் நீந்திக் கொண்டிருப்பான் என்று மனுவே கூறியுள்ளார்.

**ओंकार पूर्वकास्तिस्त्रो गायत्रीं यश्च विन्दति।**
**चरित ब्रह्मचर्यश्च स वै श्रोत्रिय उच्यते॥ ( योगी याज्ञ. )**

ஓம்கார பூர்வகாஸ்திஸ்ரோ காயத்ரிம் யஸ்ச விந்ததி !
சரித ப்ரஹ்மசர்யஸ்ச ஸ வை ஸ்ரோத்ரிய உச்யதே ! !

யோகி யாஜ்ஞ

ஐம்புலக்கட்டுப்பாட்டுடன் காமப்ரதா 'ஓங்காரம்', காமப்ரதா வியாஹ்ரிதிகள் ஆகியவற்றுடன் சேர்த்து காயத்ரி ஜபம் செய்து வருபவன் ஸ்ரோத்ரியன்'' என்று

அழைக்கப்படுகிறான்.

**सन्ध्यासु चार्घ्यदानं च गायत्री जपमेव च।**
**सहस्त्रित्रितयं कुर्वन् सुरैः पूज्यो भवेन्मुने॥** (गायत्री तंत्र श्लोक ९)

ஸந்த்யாஸு சார்த்யதானம் ச காயத்ரி ஜபமேவ ச !
ஸஹஸ்ரத்ரிதயம் குர்வன் ஸுரை: பூஜ்யோ பவேன்முநே !!

காயத்ரி தந்த்ர

சந்தியா காலங்களில் சூரியனுக்கு நீர்வார்த்து 3,000 காயத்ரி மந்திர ஜபம் செய்துவருபவன் கடவுளாக மதிக்கப்படுவான்.

**सर्वेषाञ्चैव पापानां संकटे समुपस्थिते।**
**दशसहस्त्रकाभ्यासो गायत्र्याः शोधनं परम्॥** (गायत्री पंचांग)

ஸர்வஷாச்சைவ பாபனாம் ஸங்கடே ஸமுபஸ்திதி !
தஸ்ஸஹஸ்ரகாபயாஸோ காயத்ர்யா: ஸோதனம் பரம !!

காயத்ரி பஞ்சாங்க

10,000 காயத்ரி மந்திர ஜபம் ஒருவனுடைய துன்பங்களையும், பாபங்களையும் போக்கி அவனைப் புனிதனாக்குகிறது.

**गायत्रीमेव यो ज्ञात्वा सम्यगुच्चरते पुनः।**
**इहामुत्र च पूज्योऽसौ ब्रह्मलोकमवाप्नुयात्॥**

காயத்ரீமேவ யோ க்ஞாத்வா ஸம்யகுச்சரதே புன: !
இஹாமுத்ர ச பூஜ்யோ(அ)ஸௌ ப்ரஹ்மலோகமவாப்னுயாத் !!

காயத்ரியை நன்றாக உணர்ந்து ஜபிப்பவன் இந்த உலகிலும் பிரம்மலோகத்திலும் தெய்வ நிலையை அடைகிறான்.

**मोक्षाय च मुमुक्षूणां श्रीकामानां श्रियेतथा।**
**विजयाय युयुत्सूनां व्याधितानामरोगकृत्॥** (गायत्री पंचांग)

மோக்ஷாய ச முமுக்ஷுணாம் ஸ்ரீகாமனாம் ஸ்ரீயோததா !
வியாய யுயுத்ஸுநாம் வ்யாதிதாநாமரோகக்ருத் !!

காயத்ரி பஞ்சாங்க

முக்திப்பேறு, செல்வம், போரில் வெற்றி, நோய்

நீக்கம் ஆகியவற்றை அடையும் ஆர்வம் உள்ளவர்கள் காயத்ரி சாதனை மூலம் அவற்றை அடைகிறார்கள்.

**विधिना नियतं ध्यायेत् प्राप्नोति परमं पदम्।**
**यथा कथञ्चिज्जपिता गायत्री पापहारिणी ॥**
**सर्वकामप्रदा प्रोक्ता प्रथक्कर्म्मसु निष्ठिता ॥**

விதினா நியதம் த்யாயேத் ப்ராப்நோதி பரமம்பதம் !
யதா கதச்சிஜ்ஜபிதா காயத்ரி பாப ஹாரிணீ !
ஸர்வ காமப்ரதா ப்ரோக்தா ப்ரதக்கர்ம்மஸு நிஷ்டிதா !!

காயத்ரி ஜபத்தை எப்படி செய்தாலும் பாவங்கள் விலகும். எந்த நோக்கம் நிறைவேற வேண்டும் என்று ஜபிக்கப் படுகிறதோ அந்த நோக்கமும் நிறைவேறும். ஆனால் காயத்ரியின் முக்கிய குறிக்கோளான "தன்னை அறிதல்" என்ற நிலையை அடைய வேண்டுமானால் அதை மனதிலிருத்தி முறைப்படி தியானம் செய்து வரவேண்டும்.

**गायत्र्युपासना नित्या सर्ववेदैः समीरिता।**
**यया विना त्वधः पातो ब्राह्मणस्यास्ति सर्वथा ॥ ( देवी भागवत् )**

காயத்ர்யூபாஸனா நித்யா ஸர்வவேதை: ஸமீரிதா !
யயா வினாத்வத: பாதோ ப்ராஹ்மணஸ்யாஸ்தி ஸர்வதா !!
தேவீ பாகவதம்

தினசரி காயத்ரி வழிபாடு பற்றி எல்லா வேதங்களிலும் விளக்கங்கள் உள்ளன. காயத்ரி மந்திர ஜபம் செய்யாத பிராமணன் எல்லா வகைகளிலும் அழிவை நோக்கியே செல்கிறான்.

**सांगांश्च चतुरो वेदानधीत्यापि सवाङमयान्।**
**गायत्रीं यो न जानाति वृथा तस्य परिश्रमः ॥ ( योगी याज्ञ. स्मृ. )**

ஸாங்காஸ்ச சதுரோ வேதாநதீத்யாபி ஸவா(அ)மயான் !
காயத்ரீயோ ந ஜானாதி வ்ரதா தஸ்ய பரிஸ்ரம: !!
யோகி யாஜ்ஞ

ஒருவன் நான்கு வேதங்களையும் கற்றுத் தெளிந்தவனாக இருக்கலாம். அவனுக்கு காயத்ரி மந்திரம் தெரியவில்லை என்றால் அவன் உழைப்பெல்லாம்

பயனற்றுப் போய்விடும்.

गायत्रीं यः परित्यज्य चान्यमन्त्रमुपासते।
न साफल्यमवाप्नोति कल्पकोटि शतैरपि॥ (बृ. सन्ध्या भाष्य)

காயத்ரிம் ய: பரித்யஜ்ய சாந்யம்ந்த்ரமுபாஸதே !
ந ஸாபல்யமவாப்நோதி கல்பகோடி ஷதைரபி !!
ப்ரு. ஸந்த்யா பாஷ்யே

காயத்ரியைத் தவிர வேறு மந்திர வழிபாடுகள் செய்பவன் பல்லாயிரம் பிறவிகள் எடுத்தாலும் வெற்றி காண முடியாது.

विहाय तां तु गायत्रीं विष्णूपासनतत्परः।
शिवोपासनतो विप्रो नरकं यातिसर्वथा॥ (देवी भागवत 12.8.92)

விஹாய தாம் தூ காயத்ரீ விஷ்ணூபாஸநதத்ப:
ஷிவோபாஸநதோ விப்ரோ நரகம் யாதிஸர்வதா !! தேவிபாகவத

காயத்ரி வழிபாட்டை கைவிட்ட பிராமணன் விஷ்ணுவை வழிபட்டாலும் சரி; சிவனை வழிபட்டாலும் சரி; அவன் நரகத்திற்கே செல்வான்.

एवं यस्तु विजानाति गायत्रीं ब्राह्मणस्तु सः।
अन्यथा शूद्रधर्मा स्याद् वेदानामपि पारगः॥ (योगी याज्ञ. स्मृ. 4.41-42)

ஏவம் யஸ்து விஜானாதி காயத்ரீ ப்ரஹ்மணஸது ஸ: !
அந்யதா க்ஷுத்ரதர்ம ஸ்யாத் வேதாநாமபி பாரக: !! யோகி யாஜ்ஞ

காயத்ரியை அறிந்து ஜபம் செய்பவனே பிராமணன். அவ்வாறு செய்யவில்லையென்றால், வேதங்களைக் கற்றிறந்தவனாயினும் அவன் இழிந்தவனே ஆவான்.

न ब्राह्मणो वेदपाठान्न शास्त्रपठनादपि।
देव्यास्त्रिकालमभ्यासाद् ब्राह्मणः स्याद् द्विजोऽन्यथा॥ (बृ. संध्या भाष्य)

ந ப்ராஹ்மணோ வேதபாடான்ன ஞாஸ்த்ரபடநாதபி
தேவ்யாஸ்த்ரிகாலாப்யாஸாத் ப்ராஹ்மண:
ஸ்யாத் த்விஜோந்யதா !! ப்ரு. ஸந்த்யா பாஷ்யே

வேதங்களையும், சாஸ்திரங்களையும் படித்தால் மட்டுமே ஒருவன் பிராமணன் ஆகிவிட முடியாது., ஒரு நாளைக்கு மூன்று முறை காயத்ரி வழிபாடு செய்தால்தான் பிராமணன் ஆக முடியும்.

காயத்ரியின் முக்கியத்துவம் பற்றி வேதநூல்கள் கூறும் கருத்துக்கள் :

வேதங்கள், சாஸ்திரங்கள், புராணங்கள் யாவும் காயத்ரியின் முக்கியத்துவத்தை எடுத்துக் கூறுகின்றன. கீழ்க்கண்ட வழிபாடு அதர்வண வேதத்தில் உள்ளது. அதில் காயத்ரி ஒருவனுக்கு நீண்ட ஆயுள் பிரணா சக்தி, கால் நடைச் செல்வம், செல்வம், புகழ், பிரம்மதேஜஸ் ஆகியற்றை அளிப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

**ॐ स्तुतामया वरदा वेदमाता प्रचोदयान्ताम् पावमानी द्विजानाम्।**
**आयुः प्राणं प्रजां पशुं कीर्तिं द्रविणं ब्रह्मवर्चसम्॥ ( अथर्ववेद 19.171.1 )**

ஸ்துதாமயா வரதா வேதமாதா ப்ரசோதயந்தாம் பாவமானி
த்விஜானாம் ஆயு : ப்ராணம் ப்ரஜாம் பஸும் கீர்த்திம்
த்ரவிணம்ப்ரஹ்மவர்ச்சஸம்

அதர்வவேத - 19-171-1

வேதங்களின் வடிவாக உள்ள எல்லாம் வல்ல பரம் பொருளே அதர்வண வேதத்தில் பாஷ்யே நான் வழிபடும் வேதமாதாவான காயத்ரி பிராமணர்களைத் தூய்மைப் படுத்தி அவர்களுக்கு நீண்ட ஆயுள் பிராணசக்தி, கால் நடைகள், செல்வம், புகழ், பிரம்ம தேஜஸ் ஆகியவற்றை அளிப்பாளாக! என்று கூறியுள்ளார்.

**यथा मधु च पुष्पेभ्यो घृतं दुग्धद्रसात्पयः।**
**एवं हि सर्ववेदानां गायत्री सारमुच्यते॥ ( बृ. योगियाज्ञ. स्मृ. 4.16 )**

யதா மது ச புஷ்பேப்யோ க்ருதம் துக்தாத்ரஸாத்பய :
ஏவம் ஸர்வவேதானாம் காயத்ரீ ஸார உச்யதே

எவ்வாறு மலர்களின் சாரமாக தேனும், பாலின் சாரமாக நெய்யும், நீரின் சாரமாக சுவையும் உள்ளனவோ அதே போல காயத்ரி மந்திரம் வேதங்களின் சாரமாக உள்ளது.

**तदित्यृचः समो नास्ति मंत्रो वेदचतुष्टये।**
**सर्वे वेदाश्च यज्ञाश्च दानानि च तपांसि च।**

समानि कलया प्राहुर्मुनयो न तदित्यृचः ॥ ( विश्वामित्र )

ததித்யருச: ஸமோ நாஸ்தி மந்த்ரோ வேதசதுஷ்டயேஸவே
வதஷ்ச யக்ஜ்ஞாஷ்ச தானாநி ச தபாம்ஸி ச
ஸமானி பாலய ப்ராஹுர்முனயோ ந ததித்யருச:

விஸ்வாமித்ர

நான்கு வேதங்களிலும் காயத்ரி மந்திரத்தைப் போல் வேறு ஒரு மந்திரம் இல்லை என ரிஷிகளும், ஞானிகளும் கூறுகிறார்கள். வேதமும், யாகமும், தானமும், தவமும் காயத்ரி மந்திரத்தின் ஒரு சிறிய பகுதிக்கு கூட இணையாக மாட்டா.

गायत्री छन्दसां मातेति। ( महानारायणो उप. 15.1 )

காயத்ரீ சந்தஸாம் மாதேதி ! மஹாரண்யக உபநிஷத்

காயத்ரி வேதங்களின் பிறப்பிடம்; வேதங்களின் தாய்.

त्रिभ्य एव तु वेदेभ्यः पादम्पादमदूदुहत्।

तदित्यृचोऽयाः सावित्र्याः परमेष्ठी प्रजापतिः ॥ ( मनु स्मृ. 2.77 )

த்ரிப்ய ஏவ து வேதப்ய: பாதம்பாதமதூதுஹத் !
ததித்யருசோயா: ஸாத்யா: பரமேஷ்டி ப்ரஜாபதி: ! ! மனு

பிரஜாபதி பிரம்மா மூன்று நிலைகளை உடைய காயத்ரியை மூன்று வேதங்களின் சாரமாகப் படைத்தார்.

वेदांश्च ब्रह्मणा तोलिता:पुरा।
वेदेभ्यश्च चतुर्भ्योऽपि गायत्र्यतिगरीयसी ॥ ( बृ. पारा. स्मृ. 4.16 )

காயத்ரீ சைவ வேதாஸ்ச ப்ரஹ்மணா தோலிதாபுரா !
வேதப்யஷ்ச சதுர்ப்யோ (அ) பி காய கதிகழியஸி ! !

வ்ரு. பராசரஸ்ம்ருதி

பழங்காலத்தில் பிரம்மா காயத்ரியையும் வேதங்களையும் எடைபோட்டு பார்த்தார். நான்கு வேதங்களையும் விட காயத்ரியே எடை அதிகமாக இருந்தது.

गायत्र्यास्तु परन्नास्ति शोधनं पापकर्मणाम्।

**महाव्याहृति संयुक्ता प्रणवंन च संजपेत्॥ ( सम्वर्त स्मृ. 214 )**

காயத்ர்யாஸ்து பரன்னாஸ்தி ஷோதனம் பாபகர்மணாம்!
மஹா வியாஹ்ருதி ஸம்யுக்தா ப்ரணவம் ந ச ஸம்ஜபேத!!

பிரணவத்துடனும், மூன்று வியாஹ்ருதிகளுடனும் சேர்த்து காயத்ரி மந்திர ஜபம் செய்து தியானிக்க வேண்டும். ஏனெனில் காயத்ரி மந்திரத்தைத் தவிர வேறு எந்த மந்திரமும் பாபங்களை அழிக்க கூடியவை அல்ல.

**नान्नतोय समं दानं न चाहिंसापरं तपः।**
**न गायत्री समं जाप्यं न व्याहृति समं हुतम्॥ ( सूत संहिता 6.30 )**

நந்ததோய ஸமம் தான வ சாஹிம்ஸா பரம் தப:!
ந காயத்ரீ ஸமம் ஜாப்யம் ந வ்யாஹ்ருதி ஸமம் ஹுதம்

உணவும் நீரும் தர்மம் செய்தல், அஹிம்சை நோன்பு, காயத்ரி ஜபம் வியாஹ்ருதிகளின் அக்னி ஹோத்ரம் ஆகியவற்றிற்கு மேலானவை வேறு எதுவும் இல்லை.

**हस्तत्राणप्रदा देवी पततां नरकार्णवे।**
**तस्मात्तामभ्यसेन्नित्यं ब्राह्मणो हृदये शुचिः॥**

ஹஸ்தத்ராணப்ரதா தேவீ பததாம் நரகார்ணவே!
தஸ்மாத்தாமப்ய ஸேந்நித்யம் ப்ராஹ் மணோஹ்ருதயே சுசி:!!

நரகம் என்னும் கடலில் விழுபவனை காயத்ரி கைகொடுத்துக் காப்பாற்றுகிறது. ஆகையால் ஒரு த்விஜன் (பிராமணன்) தூய இதயத்தோடு தினமும் காயத்ரி ஜபம் செய்யவேண்டும்.

**सारभूतास्तु वेदानां गुह्योपनिषदो मताः।**
**ताभ्यः सारस्तु गायत्री तिस्रो व्याहृतयस्तथा॥ ( योगी याज्ञ. 4.77 )**

ஸாரபூதாஸது வேதாநாம் குஹயோபநிஷதோ மதா:!
தாப்ய: ஸாரஸ்து காயத்ரீ திஸ்த்ரோ வ்யாஹ்ருயஸததா!!
யோகி யாஜ்ஞ

வேதங்களின் சாரம் உபநிடதங்கள். உபநிடதங்களின் சாரம் மூன்று வியாஹிருதிகளுடன் கூடிய காயத்ரி.

**गायत्री वेदजननी गायत्री पापनाशिनी।**
**गायत्र्यास्तु परन्नास्ति दिवि चेह च पावनम्॥ ( शंख स्मृ. 12.24 )**

காயத்ரீ வேதஜனனி காயத்ரீ பாபநாஷினி !
காயத்ர்யாஸ்து பரன்னாஸ்தி திவி சேஹ ச பாவனம் !! மனு

காயத்ரி வேதங்ளின் தாய்; பாபங்களை அழிக்கும் சக்தி. அதைவிட புனிதமான மந்திரம் விண்ணிலும் இல்லை; மண்ணிலும் இல்லை.

**यद्यथाग्निदेवानां ब्राह्मणो मनुष्याणाम्।**
**वसन्तऋतुणामियं गायत्री चास्ति छन्दसाम्॥ ( गोपथ ब्राह्मण )**

யத்யதாக்னி தேவானாம் ப்ராஹ்மனோ மநுஷ்யாணாம் !
வஸந்தறிதுநாமியம் காயத்ரீ சாரிதே சந்தஸாம் !!

கோபாத ப்ராஹ்மண

தேவதைகளில் சிறந்தது தீ; மனிதர்களில் சிறந்தவன் பிராமணன்; பருவகாலங்களில் சிறந்தது வசந்தம்; மந்திரங்களில் சிறந்தது காயத்ரி.

**नास्ति गंगा समं तीर्थं न देव: केशवात्पर:।**
**गायत्र्यास्तु परं जाप्यं न भूतं न भविष्यति॥ ( बृ. योगियाज्ञ. स्मृ. 10.10-11 )**

நாஸ்தி கங்கா ஸமம் தீர்த்தம் ந தேவ: கேஷ்வாத்பர:
காயத்ர்யாஸ்து பரம் ஜாப்யம் ந பூதம் ந பவிஷ்யதி !! யோகி யாஜ்ஞ

கடந்த காலத்தில் சரி; எதிர்காலத்திலும் சரி; கங்கையைப் போன்ற தீர்த்தமில்லை; கேசவனைப்போன்ற கடவுள் இல்லை. காயத்ரிக்கு மேலான ஜபம் இல்லை.

**सर्वेषां जप्यसूक्तानामृमश्चां यजुषां तथा।**
**साम्नां चैकाक्षरादीनां गायत्री परमोजप:॥ ( बृ. पारा. स्मृ. 3.4 )**

ஸர்வேஷாம் ஜபஹுக்தாநாம்ருயஷ்ய யஜுஷாம் யதா !
ஸாம்நாம் சைக்ஷராதீனாம் காயத்ரீ பரமோஜப: !!

வ்ரு. பராசரஸ்ம்ருதி

எல்லா சூக்தங்களையும் விட ரிக், யஜுர், சாம வேதங்களையும் விட, ஓம் முதலான மந்திரங்களையும் விட காயத்ரி மந்திரஜபம் மேலானது.

**एकाक्षरं परंब्रह्म प्राणायाम: परन्तप:।**
**सावित्र्यास्तु परन्नास्ति पावनं परमं स्मृतम्॥ ( अग्नि पुराण 166.18 )**

ஏகாக்ஷரம் பரம் ப்ரஹ்ம ப்ராணாயாம பரந்தப: !

ஸாவித்ர்யாஸ்து பரன்னாஸிதி பாவனம் பரமம் ஸ்ம்ருதம்!!

மனு ஸ்ம்ருதி

'ஓம்' என்னும் ஏகாட்சரம் பரப்ரம்மம்; பிராணாயாமம் உயர்ந்த தவம்; புனிதப்படுத்தும் உன்னதமான மந்திரம் காயத்ரி மந்திரம்.

**सोमादित्यान्वयाः सर्वे राघवाः कुरवस्तथा।**
**पठन्ति शुचयो नित्यं सावित्रीं परमां गतिम्।। ( महाभारत अनु पर्व 150.77 )**

ஸோமமாதித்யாந்வயா: ஸர்வே ராகவா: குரவஸ்ததா !
படந்தி ஸுநித்யம் ஸாவித்ரீம் பரமாம் கதிம்!!

மஹாபாரத அனுபர்வ

யுதிஷ்டிரா! சந்திர குலத்தவர், சூரிய குலத்தவர், ரகு வம்சத்தவர், குரு வம்ஸத்தவர், ஆகிய அனைவரும் தினமும் காயத்ரி ஜபம் செய்து புனிதமடைந்துள்ளார்கள்.

**बहुना किमिहोक्तेन यथावत् साधुसाधिता।**
**द्विजन्मानामियं विद्या सिद्धाकामदुघास्मृता।।**

பஹுனா கிமிஹோக்தேன யதாவத ஸாதுஸாதிதா
த்விஜந்மாநாமியம் வித்யா ஸித்திகாம துதாஸ்ம்ருதா !!

எதையும் அதிகப்படுத்திக் கூறுவது பயனளிக்காது; முழு நிறைவு பெற்ற காயத்ரி ஞானம் பிராமணர்களின் காமதேனு.

**सर्ववेदोद्धतः सारोमन्त्रोऽयं समुदाहृतः।**
**ब्रह्मादिदेवा गायत्री परमात्मा समीरितः।।**

ஸர்வவேதோதத்ருத: ஸாரோ மந்த்ரோ(அ)யம் ஸமுதாஹ்ருது !
ப்ரஹ்மா தேவாதி காயத்ரீ பரமாத்மா ஹஸமீரிதா: !!

காயத்ரியே வேதங்கள்; வேதங்களின் சாரமும் காயத்ரியே; பிரம்மனும் காயத்ரியே; எல்லாம் வல்ல பரம்பொருளும் காயத்ரியே. **यानित्या ब्रह्मगायत्री सैव गंगा न संशयः।**
**सर्वतीर्थमयी गंगा तेन गंगा प्रकीर्तिता।। ( गायत्री तंत्र 3.143 )**

யாநித்ய ப்ரஹ்மகாயத்ரீ ஸைவ கங்கா ந ஸம்ஷய: !
ஸர்வ தீதமயி கங்கா தேன கங்கா ப்ரகிர்த்திதா !!

கங்கைக்கு அப்பெயர் வந்ததன் காரணம் அது எல்லா

தீர்த்தங்களையும் தன்னகத்தே கொண்டுள்ளதுதான். அந்த நதி பிரம்ம காயத்ரியின் ஒரு புற வடிவம்.

**सर्वशास्त्रमयी गीता गायत्री सैव निश्चिता।**
**यागतीर्थं च गोलोकं गायत्रीरूपमद्भुतम्॥ ( गायत्री तंत्र 3.144 )**

ஸர்வசாஸ்த்ரமயீகீதா காயத்ரீ ஸைவ நிஸ்சிதா!
சுயாதீர்தம் ச கோலோகலம் காயத்ரீரூபமத்புதம்!! காயத்ரீ தந்த்ர

கீதை எல்லா சாஸ்திரங்களையும் தன்னுள்ளடக்கியது. கீதை காயத்ரியின் ஒரு வடிவமே. கயை தீர்த்தமும், கோலோகமும் கூட காயத்ரியின் வேறு வடிங்களே.

**अशुचिर्वा शुचिर्वापि गच्छन्तिष्ठन् यथा तथा।**
**गायत्री प्रजपेद्धीमान् जपात् पापान्निवर्तते॥ ( गायत्री तंत्र )**

அஷு~சிர்வா ஷு~சிர்வாபி க்சசந்திஷ்டன யதா ததா!
காயத்ரீ பாஜபேதீமனா ஜபாத பாபன்னிவர்த்ததே!!

ஒரு மனிதன் தூயவனாகவும் தூய்மையற்றவனாகவும் இருக்கலாம்; நின்றுகொண்டோ, உட்கார்ந்து கொண்டோ, வேறு எந்த நிலையிலோ இருக்கலாம்.எந்த நிலையிலும் ஒரு அறிவுள்ள மனிதன் காயத்ரி ஜபம் செய்தால் அவன் எல்லா துன்பங்களிலும் இருந்து காப்பாற்றப்படுகிறான்.

**मननात् पापतस्त्राति मननात् स्वर्गमश्नुते।**
**मननात् मोक्षमाप्नोति चतुर्वर्गमयोभवेत्॥ ( गायत्री तंत्र )**

மனனாத் பாபதஸ்த்ராதி மனனாத் ஸ்வர்கமஸனுதே!
மனனாத் மோக்ஷமாப்னோதி சதுர்வர்கமயோபவேத் காயத்ரீ தந்த்ர

காயத்ரியை தியானம் செய்வதால் பாபங்கள் அழிகின்றன. மோட்ச பதம் கிடைக்கிறது. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பேறுகளும் வந்து சேருகின்றன.

**गायत्रीं तु परित्यज्य अन्यमन्त्रानुपासते।**
**त्यक्त्वा सिद्धान्नमन्यत्र भिक्षामटतिदुर्मतिः॥**

காயத்ரீ து பரித்யஜ்ய அன்யமந்த்ரானுபாஸதே!
த்யாக்த்வா ஸித்தான்னமந்யத்ர பிக்ஷாமடதிதுர்மதி:!! காயத்ரீ தந்த்ர

காயத்ரியைத் தவிர வேறு மந்திர வழிபாடு செய்பவர்கள் அறியாமையில் உழல்பவர்கள். அவர்கள் தயாராக உள்ள

உணவை விட்டுவிட்டு உணவுக்கு பிச்சையெடுத்து அலைபவர்களைப் போன்றவர்கள்.

**नित्यैनैमित्तिके काम्ये तृतीये तपोवर्धने।**
**गायत्र्यास्तु परं नास्ति इह लोके परत्र च॥**

நித்யே நைமித்திகே காம்யே த்ருதீயே தபவர்தானே
காயத்ர்யாஸ்து பரம் நாஸ்தி இஹ லோக பரத்ர ச !!

தினசரிக் கடமைகள், ஆசைகள் நிறைவேறுதல், தவ வளர்ச்சி ஆகியவற்றிற்கு காயத்ரியை விட சிறந்த சாதனை இவ்வுலகிலும், வேறு உலகங்களிலும் இல்லை.

**सावित्री जाप्य निरतः स्वर्गमाप्नोति मानवः।**
**तस्मात् सर्वप्रयत्नेन स्नातः प्रयतमानसः।**
**गायत्रीं तु जपेत् भक्त्या सर्वपापप्रणाशिनीम्॥** ( शंख स्मृ. 12.30-31 )

ஸாவித்ரீ ஜபரோ நித்யம் ஸ்வர்க்கமாப்நோதி மானவ: !
தஸ்மாத் ஸர்வப்ரயத்னேன ஸ்னாத: ப்ரயதமானஸ:
காயத்ரீ து ஜபேத் பக்த்யா ஸர்வபாப ப்ரணாஷினீம் !

சாவித்ரி என்றும் அழைக்கப்படும் காயத்ரியை அறிந்தவன் சுவர்க்கத்தை அடைவான். ஆகையால் ஒவ்வொருவரும் குளித்துவிட்டு அமைதியான மனநிலையில் காயத்ரி ஜபம் செய்யவேண்டும். அது எல்லா பாபங்களையும் அழிக்கும்வரை இடைவிடாது தொடர்ந்து ஜபம் செய்துவர வேண்டும்.



# 9. பெண்களும் காயத்ரி சாதனை செய்யலாம்

பாரத தேசத்தில் பழங்காலம் முதல் பெண்களுக்கு உரிய மதிப்பளிக்கப்பட்டுள்ளது. பெண்கள் ஆண்களை விட புனிதமானவகர்களாகக் கருதப்பட்டிருக்கிறார்கள். பெண்கள் பெரும்பாலும் தேவி என்றே அழைக்கப் பட்டார்கள். பெண்கள் தேவி என்ற தெய்வப் பெயரை இணைத்து சாந்திதேவி, கங்காதேவி என்றெல்லாம் பெயரிட்டார்கள்.

கடவுள்களின் பெயர்களும், உயர்ந்த மனிதர்களின் பெயர்களும் கூட அவர்களின் மனைவிமார்களின் பெயர்களுடன் இணைந்தே அமைந்துள்ளன. சீதாராமன், கௌரிசங்கர், லட்சுமிநாராயணன் போன்ற எண்ணற்ற பெயர்களில் முன்னே மனைவியின் பெயரும் பின்னே தெய்வத்தின் பெயரும் இருப்பது நாம் அறிந்ததே. கற்பு, கடமை உணர்ச்சி, அன்பு, இரக்கம், தாராள மனப்பான்மை, பக்தி ஆகிய உயர்ந்த பண்புகளில் பெண்களே சிறந்து விளங்குகிறார்கள்.

எல்லா மதங்களும் பெண்களுக்கு சிறப்பான இடம் அளித்துள்ளன. வேதங்களில் உள்ள பாடல்களை எல்லாம் ரிஷிகளே எழுதிவிடவில்லை. சில பாடல்களை ரிஷி பத்தினிகளும் எழுதியுள்ளார்கள். தெய்வீக ஞானம் தானாகவே தோன்றி வேதங்களாக வெளிப்பட்டது. அது ஆன்மநிலையில் உயர்ந்தவர்களின் பாடல்களாக வெளிப் பட்டது. அவ்வாறு ஆன்மநிலையில் உயர்ந்த பெண்களும் இருந்தார்கள். அவர்களும் ரிஷிகள் என்றே அழைக்கப் பட்டார்கள். கடவுள் அன்புள்ளம் கொண்டவர்; நேர்மையானவர். விருப்பு வெறுப்பு அற்றவர்; ஆண்களும் பெண்களும் அவருடைய குழந்தைகளே. அப்படியிருக்க அவரால் எப்படி ஆண்களை மட்டும் உயர்த்தி

பெண்களைத் தாழ்த்த முடியும்?

ரிக்வேத மந்திரங்கள் சில (10/85) சூர்ய சாவித்ரி என்ற பெண் ரிஷியால் உருவாக்கப்பட்டவை. ரிக் வேதத்தில், வரும் கோதா, இந்திராணி, ஊர்வசி, லோபமுத்ரா போன்ற பல பெண்கள் பிரம்ம ரிஷிகளாகக் கருதப்படுகின்றனர். ரிக்வேத சூக்தங்கள் - 10-39, 10-40, 10-91, 10-95, 10-107, 10-109,10-154, 10-159, 10-189, 5-28, 8-91 போன்ற பல மந்திர சூக்தங்கள் பெண் ரிஷிகளால் இயற்றப்பட்டவைகளே. பெண்கள் சிறப்பாக யக்ஞங்கள் செய்துள்ளனர். யாக்ஞவல்க்ய மகரிஷியின் மனைவி மைத்ரேயி பிரம்மவாதினி என்று அழைக்கப்பட்டார். (பிரம்மவாதினி என்ற சொல்லுக்கு வேதங்க்ளுக்கு விளக்கம் கூற வல்லவர் என்பது பொருள்.)

பாரதிதேவி என்ற பெண் ஆதிசங்கரருடன் இறை தத்துவம் குறித்து வாதம் புரிந்தார். அந்த வாதத்தில் அவர் வேதக் கருத்துக்களை எடுத்தாண்ட முறை வேத வல்லுநர் களையே வியப்புக்குள்ளாக்கியது. சங்கரரே அவர் வினாக் களுக்கு உடனடியாக விடை கூறமுடியாது ஒரு மாதகாலம் தவணை கேட்டார். சங்கர திக்விஜயம் என்ற நூலில் (3/16) பாரதிதேவி வேத புராணங்கள் அனைத்தையும் ஐயமறக் கற்று கரைகண்டவர் என்று கூறப்பட்டுள்ளது. இப்பொழுது மட்டும் ஏன் வேதநூல்களைப் படிக்கக் கூடாது என்று பெண்களுக்கு தடை விதிக்க வேண்டும்? அக்காலத்தில் இப்படி ஒரு தடை இருந்திருக்குமானால், எவ்வாறு பெண்களால் யாக்ஞவல்க்யர், சங்கராச்சாரியார் போன்ற வேத வித்தகர்களுடன் தர்க்கம் செய்திருக்க முடியும்? உண்மையில் அக்காலத்தில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் வேதங்களைப் பயில சமவாய்ப்பு இருந்தது.

அஸ்வாலயன் க்ரஹ்ய சூத்ரம் 1/1/9 யக்ஞம் செய்ய

வேண்டிய ரிஷி இல்லாதபோது அவருடைய மனைவியோ, மகனோ அல்லது திருமணமாகாத மகளோ அந்த யக்ஞத்தை செய்யலாம் என்று கூறுகிறது. கதக்ரஹ்யசூத்ரம் (3/3/30ம் 26/3ம்) லோகாக்ஷி க்ரஹ்ய சூத்ரம் (25) ஆகியவை பெண்களும் வேத மந்திரங்களை ஜபிக்கலாம்; வேத கர்மகாண்டங்களைச் செய்யலாம் என்று கூறுகின்றன. திருமணத்தின் போது நடைபெறும் லாஜஹோமத்தில் மணமகளே மந்திரங்களை சொல்கிறாள் என்று பரஸ்கார் க்ரஹ்ய சூத்ரம் (1/5/1,2) கூறுகிறது. தசக்ஷுர்தேவஹிதம் என்ற நூலில் மணமகள் சூரியனைப் பார்க்கும் போது யஜுர் வேத மந்திரங்களைக் கூறுகிறாள் என்று கூறப்பட்டுள்ளது (ஸ்லோகம் 36/24)

போர் நடக்கும் போது பெண்கள் சாமவேத மந்திங்களைப் பாடிக்கொண்டு அவைகளுக்கு ஏற்ப வீணை வாசித்தார்கள் என்று டாண்டிய பிரம்மன் (5/6/8) கூறுகிறது. குறிப்பிட்ட வேதமந்திரங்களை பெண்கள் எப்படி உச்சரிக்க வேண்டும் என்று காத்யாயன சிரௌத சூத்திரங்களில் (1/17, 10/13, 26/4/13, 27/7/28) தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. சாமவேத மந்திரங்களை மனைவி இசையுடன் பாட வேண்டும் என்று லத்யாயன சிரௌத சூத்திரம் கூறுகிறது.

## பழங்காலப் பெண்களும் காயத்ரி சாதனையும்

பழங்காலத்தில் கார்க்கி, மைத்ரேயி, அனசூயா, அருந்ததி, தெய்வயானை, அகல்யா, குந்திதேவி, மண்டோதரி, தாரா, துரௌபதி, தமயந்தி, சாவித்ரி, லோபமுத்ரா, வைசாலினி, சுநீதி, சகுந்கலா, ரோஹிணி, காந்தாரி, அஞ்சனாதேவி, சீதாதேவி, பார்வதி, அதிதி, சுகன்யா போன்ற எண்ணற்ற கற்றறிந்த கற்பரசிகள் காயத்ரி

வழிபாடு செய்தனர். அவர்கள் காயத்ரி சாதனை மூலம் யோகசித்திகளை அடைந்தவர்கள். அவர்கள் குடும்ப வாழ்க்கையிலேயே சாவித்ரி வழிபாடு செய்து வெற்றி கண்டவர்கள்; பல அற்புதங்களைச் செய்து மற்றவர்களை ஆச்சரியத்தால் வாயடைந்து நிற்கச் செய்தவர்கள்.

சாவித்ரி ஓராண்டு காயத்ரி ஜபம் செய்து இறந்த கணவன் சத்யவானின் உயிரை யமனிடமிருந்து மீட்டுக் கொண்டு வந்தாள். தமயந்தி தன்னை கற்பழிக்க வந்த வேடனை தன் தவ வலிமையால் எரித்து சாம்பலாக்கினாள். காந்தாரி கண்களைக் கட்டிக்கொண்டு தவமிருந்ததன் விளைவாக துரியோதனன் உடலில் அவர் பார்வைபட்ட இடங்கள் யாவும் எவராலும் அழிக்க முடியாத வஜ்ரமாக மாறின. அனசூயாதன் தன் தவ வலிமையால் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளையும் குழந்தைகளாக மாற்றினாள். சாந்தினி தன் கற்பாற்றலால் சூரியனுடைய தேரையே ஓடாமல் நிறுத்தி விட்டால். சுகன்யா வயது முதிர்ந்த சியவன ரிஷியை இளைஞனாக மாற்றினாள். பெண்களின் தவம் எந்தவகையிலும் ஆண்களின் தவத்தை விட குறைந்ததல்ல. இப்பொழுது கூட காயத்ரி சாதனை செய்யும் பெண்கள் பலர் செல்வ வளமும் அருள் வளமும் பெற்று, அமைதியுடனும் மகிழ்ச்சியுடனும் வாழ்கிறார்கள்.

## பெண்களுக்கு மட்டும் கட்டுப்பாடு ஏன்?

காயத்ரி வழிபாடு என்பது கடவுளை தாயாக பாவித்து வழிபடுவது. உறவுகளில் எல்லாம் மிகவும் நெருக்கமானதும், பாசம் மிகுந்ததும் தாய்-சேய் உறவு தான். கடவுளை பக்தன் எந்த உருவத்தில் பார்க்கிறானோ அந்த உருவத்தில் வந்து உதவுகிறார். கடவுளைத் தாயகவே பாவிக்கும் பக்தனுக்கு கடவுளிடமிருந்து ஒரு தாயின்

அன்பும் அரவணைப்பும் கிடைக்கிறது.

இயல்பாகவே ஆண்களைவிட பெண்களுக்கு அன்பும், பாசமும், பரிவும், இரக்கமும் அதிகம். அதனால் தான் ரிஷிகள் பழங்காலத்திலிருந்தே கடவுளைத் தாயாக எண்ணி வழிபட்டு வருகிறார்கள். இந்த முறையில் வழிபடுவது எளியது. விரைவில் பலன் தரவும் வல்லது. காயத்ரி வழிபாடு இந்தியனின் தினசரி சமயக் கடமைகளில் ஒன்று சந்தியா வந்தனத்தின் ஒரு முக்கிய அங்கம் காயத்ரி. ஒருவன் தினமும் காயத்ரி சாதனை செய்யவில்லை என்றால் அவன் தன் சமயக் கடமை யிலிருந்து தவறியவனாவான்.

தாயாருக்கு மகனும், மகளும் ஒன்றுதான். அதுபோல கடவுளின் அன்புக்கு ஆணும், பெண்ணும் சம அளவு பாத்திரமானவர்கள். நேர்மையான பெற்றோர்கள் இரண்டு குழந்தைகளிடமும் பாரபட்சமாக நடக்க மாட்டார்கள். அதேபோல் கடவுளும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் சமமாகவே தன்னை உணர்வதற்கான ஆன்மீகக் கடமைகளை வகுத்திருக்கிறார். இதில் எவரும் குறுக்கிடுவது எவ்வகையிலும் நியாயமல்ல.

நம்நாட்டில் மத்தியகாலம் ஒரு இருண்ட காலமாக இருந்தது. அக்காலத்தில் உயர்ந்தோர் பலர் தோன்றி சீர்திருத்தங்களைச் செய்தார்கள். குறுகிய மனப்பான்மையால் பெண்கள் ஒடுங்கியிருந்ததை எண்ணி அவர்கள் வருந்தி னார்கள். பெண்கள் விடுதலை பெற்றால் தான் நம்நாடு பழங்காலத்தில் பெற்றிருந்த பெருமையை அடைய முடியும் என்று உணர்ந்தார்கள். நம்நாட்டு மக்கள் தொகையில் பாதிப்பேர் பெண்கள். இடைக்காலத்தில் வந்த மூடப்பழக்க வழக்கங்களை கண்மூடித்தனமாகப் பின்பற்றிக் கொண்டு பெண்களை அடக்கி ஆள

முயன்றால் நம்நாட்டு வளர்ச்சியே தடைபடும்.

## மாளவியாஜி எடுத்த முடிவு

கற்றறிந்த பெரியோர்கள் காசியில் கூடி "பெண்கள் வேதமந்திரங்களை சொல்லலாமா? சொல்லக் கூடாதா?" என்று வாதம் செய்தார்கள். அப்போது வாரணாசி இந்து பல்கலைக்கழகத்தில் வேதபாட வகுப்பில் சேர குமாரி கல்யாணி என்ற பெண் மனுச் செய்தாள். பல்கலைக்கழக அதிகாரிகள் "சாஸ்திரப்படி பெண்கள் வேத மந்திரங்களை சொல்லக்கூடாது" என்று காரணம் காட்டி அவளுக்கு வேதவகுப்பில் இடமளிக்க மறுத்து விட்டார்கள். செய்தித் தாள்கள் இதை ஆதரித்தும் எதிர்த்தும் கட்டுரைகள் எழுதின. "சர்வதேசிக்" என்ற இதழ் "பெண்களுக்கு வேதம் படிக்க உரிமை உண்டு" என்று எழுதியது. "சித்தாந்தா" என்ற இதழ் அதை எதிர்த்து எழுதியது.

இது பற்றி ஆராய்வதற்கு பல்கலைக்கழகம் மகாமான மதன் மோகன் மாளவியா தலைமையில் ஒரு குழு அமைத்தது. அந்தக் குழு சாஸ்திரங்களையெல்லாம் நன்றாகப் படித்து ஆராய்ந்தபிறகு "ஆண்களுக்கு உள்ளதைப் போல் பெண்களுக்கும் வேதம் பயில உரிமை உண்டு" என்று கூறியது. சனாதன தர்மத்தின் உயிர் மூச்சாகக் கருதப்பட்ட மாளவியா இந்த முடிவை 1946 ஆம் ஆண்டு ஆகஸ்ட் 22-ம் நாள் வெளியிட்டார். குமாரி கல்யாணி பல்கலைக் கழகத்தில் வேதவகுப்பில் சேர்த்துக் கொள்ளப்பட்டாள். அதுமுதல் ஆண்களைப் போல் பெண்களுக்கும் வேதம் பயில உரிமை வழங்கப்பட்டது. மாளவியாஜியோ, அவரைச் சேர்ந்த மற்ற அறிஞர்களோ சனாதன தர்மத்துக்கு எதிரிகள் அல்ல. அவர்களுடைய சமய ஈடுபாடு யாவரும் அறிந்த உண்மை. இவர்களின்

முடிவால் காயத்ரி சாதனை செய்வதற்கு பெண்களுக்கும் உரிமை உண்டு என்பது வெளிப்படை. கற்றறிந்த பெண்கள் ரிஷிகளாய் இருக்கிறாாகள். சில வேதமந்திரங்களை இயற்றியும் இருக்கிறார்கள். எனவே தற்கால ரிஷியான மாளவியாஜியின் முடிவை ஏற்று நடப்பதே சமூக சீர்திருத்தவாதிகளின் கடமையாகும்.



# 10. யக்ஞோபவீதமும் காயத்ரியும்

## இந்துசமயச்சின்னங்கள் – சிகையும் சூத்ரமும்

இந்து சமயத்திற்கு இரண்டு சின்னங்கள் உள்ளன. (1) சிகை (ஜடாமுடி), (2) சூத்ரம் (யக்ஞோபவீதம்). இவை இரண்டும் காயத்ரியின் இரண்டு சின்னங்கள். சிகை தெய்வீகப் பாண்பாட்டின் கொடி போன்றது. மனித மூளையைப் பாதுகாக்கும் கோட்டைபோன்றது. நடராஜர் உருவத்தில் அவருடைய ஜடாமுடி (சிகை) காயத்ரி மாதாவின் கொடியைப் போல் விரிந்து பரந்து கொண்டிருப்பதைக் காணலாம். தீய எண்ணங்கள் மூளைக்குள் செல்லாமல் தடுத்து நிறுத்தவே இந்த சிகை அமைந்துள்ளது. குழந்தைக்கு மொட்டை அடிப்பது இந்து சமயத்தில் ஒரு முக்கிய விழா. உண்மையில் இது தலையில் வளர்ந்துள்ள சாதாரண முடியைக் களைந்து விட்டு சிகையை பிரதிஷ்டை செய்வதே (தெய்வீக முடியைத் தலையில் சூடுவதே) ஆகும். மனித உடல் ஒரு கோவில். தலைமேல் உள்ள சிகை தெய்வத்தின் கொடி.

## காயத்ரியின் பிரதிபிம்பமே யக்ஞோபவீதம்

பூநூல் (யக்ஞோபவீதம்) பிரம்மசூத்திரம் என்றும் அழைக்கப்படும். நூலுக்கும் சூத்திரம் என்ற பெயர் உண்டு. காயத்ரி குருமந்திரம் என்று அழைக்கப்படுகிறது. உபநயனம் காயத்ரி மந்திரத்துடன் தான் தொடங்குகிறது. ஒரு பிராமணனுக்கு பூநூல் அணிவது எவ்வளவு முக்கியமோ, காயத்ரியை அறிந்திருப்பதும் அவ்வளவு முக்கியமாகும். காயத்ரி பூநூல் இணைப்பு லட்சுமி நாராயணன், சீதாராமன், பிரகிருதி பிரம்மா, கௌரிசங்கர் இணைப்புகளைப்போல் ஒன்றை விட்டு ஒன்றை பிரிக்க முடியாதவையாகும். எப்படி ஒரு குடும்பத்தில் கணவன் மனைவியை வெவ்வேறாய் பிரிக்க முடியாதோ அதுபோல த்வஜத்தில் காயத்ரியையும் பூநூலையும் தனித்தனியே பிரிக்க முடியாது. பூநூல் சூத்திரம்; காயத்ரி அதன் விளக்கம்.

யக்ஞோபவீதத்தில் (பூநூலில்) மூன்று இழைகள் உள்ளன. காயத்ரியில் மூன்று நிலைகள் உள்ளன. (1) "தத் சவிதுர் வரேணியம்" (2) "பர்கோ தேவஸ்ய தீ மஹி" (3) "தியோ யோநஹ் ப்ரசோத யாத்". இந்த மூன்று அங்கங்ளையும் பூநூலின் மூன்று இழைகள் குறிக்கின்றன.

பூநூலில் மூன்று முடிச்சுகள் (க்ரந்திகள்) உள்ளன. அவைகள் : பிரம்ம க்ரந்தி, விஷ்ணு க்ரந்தி, ருத்ர க்ரந்தி என்பனவாகும். அவற்றைப்போல் காயத்ரியில் மூன்று வ்யாஹ்ருதிகள் உள்ளன. அவைகள் 1. பூர், 2. புவ, 3. ஸ்வஹ என்பனவாகும். காயத்ரி மந்திரத்தில் ஓங்காரத்தைத் தொடர்ந்து வரும் இந்த மூன்று வ்யாஹ்ருதிகளும் பூநூலின் மூன்று முடிச்சுகள் (யக்ஞோபவீதத்தின் மூன்று க்ரந்திகள்) ஆகும்.

காயத்ரி பிரணவ மந்திரத்துடன் தொடங்குகிறது. "ஓம்" என்ற பிரணவம் கடவுள் எல்லா உயிர்களிலும் பரவியுள்ளார் என்பதைக் குறிக்கிறது. அதனால் ஒரு பக்தன் தன்னலம் கருதாமல் அமைதியாக மனித குலத்திற்குத் தொண்டு செய்வதற்காக தன் வாழ்க்கை

யையே அர்ப்பணம் செய்ய வேண்டும். "பூர்" என்ற சொல் பருவுடலின் நிலையற்ற தன்மையைக் குறிக்கிறது. அதனால் பக்தன் அழியக் கூடிய தன்னுடலின்மீது அதிக பற்று வைக்காமல் நேர்மையான பாதையில் சென்று உள்ளே உறையும் ஆன்மாவின் ஆற்றலை வளர்க்க வேண்டும். "புவ" என்ற சொல், தெய்வீக நிலையை அடைவதற்காக பாவங்களை எதிர்த்துப் போராடு பவனைக் குறிக்கிறது. தூயமனதுடன் புனிதமான தூய வழியைப் பின்பற்றுபவனே ஞானி. ஸ்வஹ என்பது உண்மையான ஆன்ம அறிவுடன் உண்மைப் பொருளை நாடிச் செல்லவேண்டும் என்பதைக் குறிக்கிறது. இதற்கு சுயகட்டுப்பாடும், தியாக உணர்வும் வேண்டும்.

காயத்ரி கீதையின்படி ஒன்பது இழைகள் கொண்ட யக்ஞோபவீதம் (பூநூல்) அணிய வேண்டும். அந்த ஒன்பது இழைகளும் ஒன்பது சிறப்பியல்புகளைக் குறிக்கின்றன. அவைகள் வருமாறு: (1) ஆன்மாவைப் பற்றிய அறிவு, (2) ஆற்றல் வளர்ச்சி, (3) தனிச் சிறப்பை அடைதல், (4) தூய்மை, (5) தெய்வீக மனம், (6) நேர்மை, (7) விவேகம், (8) தன்னடக்கம், (9) தொண்டு.

1. ஆன்மாவைப் பற்றிய அறிவைப் பெற்று மனிதன் பிறப்புக்கும், இறப்புக்கும் காரணமான புதிர்களைப் புரிந்து கொள்கிறான். இந்த மனத் தெளிவு மரண பயத்தை முற்றிலும் அகற்றிவிடுகிறது; உலகப் பொருள்களின் மீது பற்று வைப்பதும் அதிக ஆசை கொள்வதும் உண்மையில் துன்பத்தையே தருகின்றன; அவற்றால் நிலையான இன்பம் கிடைக்காது என்ற உண்மையையும் புரிய வைக்கிறது. அதனால் அவன் உலகப்பொருள் எதிலும் பற்றற்றவனாக மாறி விடுகிறான். அந்நிலையில் அவனால் வாழ்வில் வரும் இன்ப துன்பங்களையும், லாபநஷ்டங்களையும் சமமாக எண்ணி அமைதி கொள்ள முடிகிறது.
2. யக்ஞோபவீதத்தின் இரண்டாவது சிறப்பு அம்சமான

ஆற்றல் வளர்ச்சி உடல்நலம், கல்வி, அறிவு, செல்வம், கூட்டுறவு, கௌரவம் முதலான அனைத்து சிறப்புகளின் ஒட்டுமொத்த வளர்ச்சி. இந்த ஆற்றல் வளர்ச்சியால் ஒருவன் தனிவாழ்வில்இன்பம் பெறுவதுடன் சமூகத்தில் ஒரு தனிப்பட்ட அந்தஸ்தும் பெறுகிறான். எல்லோருக்கும் இந்த ஆற்றல் வளர்ச்சி ஏற்பட்டுவிட்டால், உயர்ந்தவன் தாழ்ந்தவனை துன்புறுத்தல், ஒழுக்கக் குறைபாடுகள் ஆகிய யாவும் அகன்று, எல்லோரும் ஒன்றுபட்ட சமூகமாக இன்புற்று வாழமுடியும்.

3. தனிச்சிறப்பு என்பது ஒருவனுக்கு அமையும் சந்தர்ப்ப சூழ்நிலைகளைப் பொறுத்து உண்டாவதல்ல. அவனுடைய குறிக்கோள், அதை அடைவதில் அவனுக்குள்ள மனஉறுதி, அவன் குறிக்கோளை அடைய செய்ல்படும் முறைகள், இவற்றைப் பொறுத்தது. சலனபுத்தியும், தாழ்வு மனப்பான்மையும் கொண்டவர்களுக்கு குறிக்கோள் என்று ஒன்றுஇருப்பதில்லை. அவர்கள் மனம் எப்பொழுதும் எதையாவது எண்ணி அலைமோதிக் கொண்டிருக்கும். அவர்களால் நிம்மதி காணவே முடியாது. அதே நேரத்தில் உயர்ந்த குறிக்கோள் உள்ளவர்கள், பரந்த மனப்பான்மையும் கொண்டிருப்பர். அவர்கள் ஏழையாக வாழ்ந்தாலும் சமூகத்தில் அவர்களுக்கு ஒரு மதிப்பு இருக்கும். இந்தத் தனிச்சிறப்பு காயத்ரி சாதனை மூலம் கிடைக்கிறது.

4. தூய்மை என்பது அழகு. மனிதன் மட்டுமல்ல; விலங்குகளும் பறவைகளும் கூட அழகை விரும்புகின்றன. அழகற்ற அசுத்தமான இடத்தில் இருக்க யாரும் விரும்ப மாட்டார்கள். உடல் தூய்மையற்றவனை நோயும், தளர்ச்சியும் பற்றிக் கொண்டிருக்கும். ஒருவனுடைய மனம், அறிவு, ஆன்மா அனைத்திலுமே அசுத்தம் நிறைந்திருந்தால்,

அவனுடைய வாழ்க்கை ஒரு பேய் வாழ்க்கையாக, அல்லது ஒரு விலங்கு வாழ்க்கையாக இருக்குமே தவிர ஒரு மனித வாழ்க்கையாக இருக்காது. அதனால் யக்ஞோபவீதம் செய்து கொள்ளும் ஒவ்வொருவரும் உள்ளத்தாலும், உடலாலும் தூய்மையாய் இருந்தால் மட்டும் போதாது. எண்ணங்கள், கருத்துக்கள், வாழ்விடம், பேச்சு, பயன்படுத்தும் பாத்திரங்கள், உடை, பொருள் தேடும் முறைகள் முதலான எல்லா வகையிலும் தூயவனாக இருக்க வேண்டும். அப்படியிருந்தால் அவன் முகத்தில் ஒரு தனி அழகு மிளிரும். அவன் வாழ்க்கை உற்சாகம், மகிழ்ச்சி அமைதி ஆகியவை நிறைந்ததாக அமையும்.

5. தெய்வீக மனம் என்பது உலகில் காணப்படும் எல்லாவற்றிலும் தெய்வீக நிலையைக் கண்டு, அந்த தெய்வீக நிலையுடன் மனதை ஒன்றுபடச் செய்தல், உலகில் உள்ள எல்லா பொருள்களுமே அவை அவைகளுக்கு உடன்பாடான பொருள்களைக் கவர்கின்றன. எல்லாவற்றிலும் நல்லதையே காண்பவன் தன்னைச் சுற்றியுள்ளவர்கள் யாவரும் நல்லவர்களாகவே இருப்பதைக் காண்கிறான். தீயமனம் படைத்தவன் சந்தேகக் கண்களுடனேயே அனைத்தையும் காண்கிறான். அவனுடைய பார்வையில் அனைவருமே தீயவர்களாகவும் பகைவர்களாகவும் காணப்படுகிறார்கள். எல்லாப் பொருட் களும் அவன் கண்களுக்கு நஞ்சாய் காட்சியளிக்கின்றன. தெய்வீக மனம் படைத்தவனுக்கு இந்த உலகமே கடவுளின் நந்தவனமாகக் காட்சியளிக்கிறது. அவனைச் சுற்றி எங்கு பார்த்தாலும் தெய்வீக இன்பம் சிதறிக் கிடப்பதாகவே அவன் உணர்கிறான். அதனால் தான் "மனம்போல் வாழ்வு" என்ற பழமொழியே தோன்றியது போலும்.

6. நற்பண்புகள், நல்ல பழக்கங்கள், அடக்கம், பணிவு,

இனிய பேச்சு, தாராள மனப்பான்மை, தொண்டுள்ளம், ஒற்றுமை, கடமை உணர்வு, ஊக்கம், காலந்தவறாமை, கிடைத்ததில் திருப்தியடைதல், விழிப்புணர்ச்சி, சகிப்புத்தன்மை, தைரியம், வீரம், உற்சாகம் இவை எல்லாம் நேர்மையுள் அடங்கும். நாம் இத்தகைய நற்பண்புகளையும், பழக்கங்களையும் நம்மிடையே வளர்த்துக்கொள்ள வேண்டும். இந்த பண்புகள் வளர்ந்து விட்டால் மகிழ்ச்சி நம்மிடம் தானகவே வந்துசேரும்.

7. எது உண்மை, எது பொய்? எது நல்லது, எது கெட்டது? எது பயனுள்ளது, எது பயனற்றது? என்று பகுத்தறியும் பண்பு விவேகம். இன்று உள்ள சமூக அமைப்பில் எதை நல்லதென்று ஏற்பது, எதை விடுப்பது என்று முடிவு செய்வதே மிகவும் கடினமாக உள்ளது. ஒரு விவேகி, ஒருவர் சொல்வதை நம்பியோ அல்லது அந்த நேரத்திற்கு நல்லதாகத் தோன்றுவதாலேயோ ஒன்றை ஏற்றுக் கொள்ள மாட்டான். ஏதேனும் ஒன்று அமைந்துள்ள இடம், காலம், சந்தர்ப்பம், சூழ்நிலை, அது பயன்படும் விதம், எல்லாவற்றையும் ஆழ்ந்து சிந்தித்து ஆராய்ந்த பிறகே அதை ஏற்றுக் கொள்வான். எல்லாவற்றிலும் சரியானபடி முடிவுகளை எடுப்பவன் எளிதில் இன்பத்தையும் அமைதியையும் அடைகிறான். பெரும்பாலான சண்டை சச்சரவுகளுக்கும், துன்பங் களுக்கும் காரணம் விவேகமின்மை, தீயமனம், தவறான கற்பனை, அறியாமை ஆகியவைகளே விவேகம் உள்ளவன் இந்த குறைகளுக்கு இடம் கொடுப்பதில்லை. அதனால் அவன் வாழ்க்கையில் சிக்கல்களும், பிரச்சனைகளும் தோன்றுவதுமில்லை.

8. தன்னுடைய எண்ணங்கள், செயல்கள், பால் உணர்ச்சி முதலியவற்றை தவறான பாதையில் செல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அதுவே தன்னடக்கம். அதற்காக இப்பண்புகளை குறைத்து ஒடுக்கி

விடுவதோ அல்லது முற்றிலும் அழித்து விடுவதோ தன்னடக்கம் ஆகாது. மனித உடல் ஆச்சரியப் படத்தக்க பல ஆற்றல்களைத் தன்னுள் கொண்டு உள்ளது. அந்த ஆற்றல்களை தவறான வழியில் செல்லாமல் தடுத்து, சரியான பாதையில் செல்லும் வண்ணம் திருப்பிவிட்டால் வாழ்க்கையில் தோல்விக்கே இடம் இருக்காது. எல்லாம் வெற்றிகரமாக அமையும்.

9. தேவையான உதவிகளைச் செய்தல். நல்ல காரியங்களுக்கு ஒத்துழைப்பு தருதல், ஆக்கப் பணிகளுக்கு ஊக்கம் அளித்தல் ஆகியவை தொண்டின் பால் அடங்கும். பொதுவாக தானம் கொடுத்தல், உடலாலும், மனதாலும் பிறருக்கு உதவி செய்தல் ஆகியவை தொண்டாகக் கருதப்படுகின்றன. உண்மையில் இத்தகைய தியாகங்கள் ஒருவருடைய தேவைகள் பூர்த்தியடைய வழி வகுக்கின்றனவா? அல்லது அவர் விழிப்புணர்ச்சியும் ஊக்கமும் பெற உதவுகின்றனவா ? என்று எவரும் கவலைப் படுவதில்லை. இந்த உதவிகள் மக்களை சோம்பேறி களாகவும், தன் உழைப்பை நம்பாமல் பிறரை சார்ந்து வாழ்பவர்களாகவும் மாற்றி விடுகின்றன. இவ்வாறு தீமை விளைவிக்கும் இத்தகைய உதவிகள் தொண்டே அல்ல. எது மற்றவர்களுக்கு உற்சாகத்தையும், சுறுசுறுப்பையும் தன்னம்பிக்கையும் அளிக்கிறதோ, எது ஒருவனை புனிதனாக மாற்றுகிறதோ, எது ஒருவனை தன் நன்மைக்காகவும் உலக நன்மைக் காகவும் உழைக்கச் செய்கிறதோ அதுவே - அதாவது ஆன்மாவை ஒளிப்பெறச் செய்யும் அறிவொளியை அளிப்பதே தொண்டாகும். இந்த அறிவொளியே தனக்கும், பிறருக்கும் நிலையான இன்பத்தை அளிக்கும்.

இந்த ஒன்பது சிறப்பியல்புகளும் ஒருவனுடைய வாழ்க்கையை மேம்படச் செய்து அவனை உன்னத நிலைக்கு கொண்டு செல்லும் நவரத்தினங்களாகும். எவன் ஒருவன் காயத்ரி அருளையும், யக்ஞோபவீதத்தின் அங்கங்களான இந்த நவரத்தினங்களையும் பெற்றிருக்கிறானோ அவன் குபேரனுக்கு இணையாக செல்வத்தை உடையவன் என்று வேதநூல்கள் கூறுகின்றன. ஒன்பது இழைகள் கொண்ட பூநூல் அணிந்துள்ள ஒருவன் அந்த ஒன்பது இழைகளின் விளக்கமாக உள்ள இந்த ஒன்பது சிறப்பியல்புகளோடும் வாழ்ந்து வந்தால் அவன் காயத்ரி கற்பக விருட்சத்தை பெற்றவனாவான். அவனுக்கு இந்த பூலோகமே சொர்க்கலோகமாக அமையும். அவன் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பேறுகளையும் பெறுவான்.

## சாதகர்கள் பூநூல் அணிவதன் அவசியம்

'பூநூல் அணிந்தால் அதற்கான நெறிமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டும்; அது நம்மால் முடியாது; அதனால் நாம் பூநூல் அணியக்கூடாது' என்று சிலர் நினைக்கிறார்கள். இது "ஆழ்ந்த பக்தி உள்ளவர்கள்தான் கடவுளை வழிபட வேண்டும்; அப்படியில்லாவிட்டால் கடவுள் வழிபாடே செய்யக்கூடாது" என்று கூறுவதுபோல் இருக்கிறது. நாம் கடவுளை வழிபடுவதே நம் பக்தி வளர்வதற்குத்தான். நோயாளிக்குத்தான் மருந்து வேண்டும். அதுபோல யக்ஞோபவீத நெறிமுறைகளை பின்பற்ற முடியாதவர்களை பின்பற்ற வைப்பதற்குத்தான் பூநூல் போடுவது அவசியம்.

பூநூல் அணிபவர்கள் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகளைப் பற்றி மக்கள் தவறான கருத்து கொண்டுள்ளார்கள். "பூநூல் அணிபவர்கள் குளிக்காமல்

சாப்பிடக்கூடாது; பழைய உணவை உண்ணக் கூடாது; பிற சாதியினர் சமைத்த உணவை சாப்பிடக் கூடாது'' என்றெல்லாம் சிலர் கருதுகிறார்கள். இவைகள் யாவும் நாமாக உண்டாக்கிக் கொண்ட தவறான கருத்துக்கள். பூநூல் அணிவது ஒரு மனிதனின் முழுமையான வளர்ச்சிக்காகவே. அந்த வளர்ச்சியில் உடல் நலம் காத்தல் ஒரு முக்கிய அம்சம். அதற்காக உணவு நெறியில் ஒரு கட்டுப்பாடு இருக்கவேண்டும். அந்தக் கட்டுப்பாட்டுடன் இருக்க முடியவில்லை என்பதற்காக பூநூலே அணியக் கூடாது என்பது பொருத்தமற்றது.

சிறுநீர், மலம் கழிக்கச் செல்லும்போது பூநூலை வலது காதில் சுற்றிக் கொள்ளவேண்டும். சில சமயங்களில் நாம் அப்படி செய்யாமல் இருந்து விடுவோம், அது ஒரு பெரிய குற்றம் என்ற பயத்தில் சிலர் பூநூல் அணிவதில்லை. ஆரம்ப காலத்தில்தான் இந்த குறை இருக்கும். காலப்போக்கில் இது ஒரு இயற்கையான பழக்கமாக வந்துவிடும். இதற்காக பயந்து பூநூல் அணியாமலே இருப்பது சிறப்பல்ல. பூநூலை காதில் சுற்றிக் கொள்வதன் நோக்கம் அதில் அசுத்தம் படக்கூடாது என்பதுதான். ஆரம்ப காலத்தில் பூநூலை கழுத்துப் பட்டையில் ஒரு சுற்றுசுற்றி அணிந்து கொண்டால், பூநூல் இடுப்புக்கு மேல்தான் இருக்கும். அதில் அசுத்தம் பட வாய்ப்பே இருக்காது. காதில் சுற்றிக்கொள்ளும் பழக்கம் வந்த பிறகு பூநூலை கழுத்தில் சுற்றிக் கொள்ளும் பழக்கத்தை விட்டுவிடலாம்.

இளம் சிறுவர்களுக்கு ஞாபக மறதி அதிகம். அவர்களுக்கு கழுத்தில் மாலை அணிவது போல் 'காந்தி' (யக்ஞோபவீதத்தில் மூன்றில் ஒரு பங்குள்ள பூநூல்) அணிந்தால் போதும். சிறுவர்களும், பாமரர்களும் பூநூலை தினமும் சுத்தம் செய்யத் தவறிவிடக் கூடும். அதனால்

பூநூலில் வியர்வை படிந்து அழுக்கும், நாற்றமும் ஏற்படும். அதைக் தடுக்க காந்தியில் துளசிமணி அல்லது ருத்ராட்சத்தைத் கோர்த்துப் போட்டுக் கொள்ளலாம். இதனால் எந்தக் குறையும் இல்லை. இந்த மாலைகளை எல்லோரும் எப்போதும் அணிந்திருக்கலாம்.



# 11. காயத்ரி மந்திரத்தின் பொருள்

காயத்ரி மந்திரத்தில் உள்ள சொற்களை ரிஷிகள் தேர்ந்தெடுத்து பொருத்தமாக வரிசைப்படுத்தி அமைத்து இருக்கிறார்கள். அதனால் (1) அது ஆழ்ந்த பொருள் உள்ள மந்திரமாக அமைந்துள்ளது. (2) அதை ஜபிக்கும் பொழுது உண்டாகும் அதிர்வலைகள் மிகுந்த ஆற்றலைக் கொடுக்கின்றன.

அதன் பொருள் : பரம்பொருள் நம் அறிவொளியைத் தூண்டி நம்மை நேரான புனிதப் பாதையில் செலுத்துவதாக. இது ஒரு நீதிக் கருத்து. நேர்மையான வழியைக் காட்டும் ஞானம். இந்த ஞானத்தை ஒருவன் அடைந்து விட்டால் அவன் பின்னர் நடக்கப்போவதை சிந்தித்து செயல்படுவான். அதனால் தனக்கு துன்பம் வராமல் பார்த்துக் கொள்வான். அவன் சிந்தனை சரியான முறையில் அமைவதால் மிகப் பெரிய சிக்கல்களும் அவனுக்கு சாதாரண விஷயமாகிவிடும். அவன் முட்டாள்தனமாக தவறான முடிவுகளை மேற்கொண்டு வீண்வம்பை விலைக்கு வாங்க மாட்டான். காயத்ரி ஜபசாதனை இவ்வாறு ஒருவனை சரியாக சிந்தனை செய்து பின்னர் வருவதையும் முன்னரே உணர்ந்து அதற்கேற்ப தெளிவான முடிவெடுத்து

உறுதியுடன் செயல்பட்டு வெற்றிகாணச் செய்கிறது.

## காயத்ரி மந்திரம்

ॐ भूर्भुवः स्वः तत्सवितुर्वरेण्यं भर्गोदेवस्य
धीमहि धियो यो नः प्रचोदयात्॥ ( यजु० 36.3 )

ஓம் பூர் புவஹ ஸ்வஹ தத் சவிதுர்வரேண்யம்
பர்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோ நஹ ப்ரசோதயாத்.

OM BHUR BHUVA SWAHA
THATH SAVITHUR VARENYAM
BHARGO DEVASYA DHEEMAHI
DHIYO YO NAHA PRACHODHAYAATH

## பதவுரை

| | | |
|---|---|---|
| ஓம் | : | பரம்பொருளாகிய கடவுள் |
| பூர் | : | (நம்முடைய) உயிராற்றலாகவும் |
| புவஹ | : | துன்பங்களை நீக்குபவராகவும் |
| ஸ்வஹ | : | இன்பமே வடிவானவராகவும் (உள்ளார்) |
| யோ | : | எது |
| நஹ | : | நம்முடைய |
| தியோ | : | அறிவை |
| ப்ரசோதயாத் | : | தூண்டுகிறதோ |
| தத் | : | அந்த |
| சவிதுர் | : | சூரியனைப் போன்ற ஒளிமயமானதும் |
| வரேண்யம் | : | தனக்கு மேலாக வேறு ஒன்றும் இல்லாததும் |
| பர்கோ | : | நம்முடைய பாபங்களை போக்கி நம்மைப் புனிதமாக்குவதும் (ஆன) |
| தேவஸ்ய | : | பரம்பொருளை |
| தீமஹி | : | மனதில் இருத்தி தியோனிப்போமாக |

காயத்ரி மந்திரத்தின் வேராக உள்ள ஓம் பூர் புவ: "அதன் முப்பெரும் கிளைகளாக உள்ள மூன்று வ்யாஹ்ருதிகள் (பூர், புவ, ஸ்வஸ) ஆகியவற்றின்

விளக்கவுரை:

**பரம்பொருளாகிய கடவுள் நம்முடைய உயிராற்றலாகவும், நம்முடைய துன்பங்களை நீக்குபவராகவும், இன்பமே வடிவானவராகவும் உள்ளார்.**

மேற்கண்ட காயத்ரி கற்பக விருட்சகத்தின் முப்பெரும் கிளைகளான வ்யாஹ்ருதிகளினின்று வெளிப்பட்ட 9 காயத்ரி மந்திரச் சொற்களின் தெளிவுரை:

எது நம்முடைய அறிவைத் தூண்டுகிறதோ அந்த சூரியனைப் போன்ற ஒளிமயமானதும், தனக்கு மேலாக வேறு ஒன்று இல்லாததும், நம்முடைய பாபங்களைப் போக்கி நம்மை புனிதமாக்குவதும் ஆன பரம்பொருளை மனதில் இருத்தி தியானிப்போமாக.

மேற்கண்ட பொருள்பட காயத்ரியை தியானிப்பவன் தெய்வாம்சம் பொருந்தியவன் ஆகிறான். காயத்ரி மந்திரத்தை ஜபிக்க தொடங்கும் முன் கீழ்கண்டவாறு மூன்று சங்கல்பங்களையும் செய்ய வேண்டும். சங்கல்பங்களை கண்களை மூடிக்கொண்டு தியான நிலையில் அமர்ந்து மனதிற்குள் செய்யவேண்டும்.

சங்கல்பங்கள் :

1. பிரணவப் பொருளான ஆண்டவன் பூலோகம், புவர்லோகம், ஸ்வர்க்கலோகம் ஆகிய மூன்று உலகங்களிலும் பரவியுள்ளான். அவன் எங்கும் நிறைந்தவன். இந்த உலகங்கள், படைக்கப்பட்டுள்ள பொருள்கள், பிரபஞ்சம் ஆகிய யாவுமே பரம்பொருளின் புறவடிவங்கள். அந்த ஆண்டவன் ஒவ்வொரு அணுவிலும் பரமாணுவிலும் இருக்கிறான். நான் அவனை எல்லா இடங்களிலும் காண்கிறேன். நான் தீய எண்ணங்களையும், தீய செயல்களையும் என்னிடம்

நெருங்கவிடமாட்டேன். ஆண்டவனால் படைக்கப்பட்ட பிரபஞ்சம் முழுவதும் இன்பமும் அழகும், அமைதியும் வளர்வதற்கு என் முழு ஒத்துழைப்பையும் தருவதன் மூலம் நான் உண்மையாக கடவுளை வணங்குகிறேன்.

2. இந்தக் கடவுள் ஒளிமயமானவர்; தனக்கு மேலோக வேறு ஒன்று இல்லாதவர்; பாபங்களைக் கடந்தவர்; ஆதி பரம்பொருளானவர். இவரை நான் என் மனதில் நிறுத்தி தியானிக்கிறேன். அவ்வாறு தியானிப்பதன் மூலம் நானும் ஒளிமயமாகவும், புனிதனாகவும், பாவமற்றவனாகவும், தெய்வாம்சம் பொருந்தியவனாகவும் மாறுகிறேன். ஒவ்வொரு வினாடியும் இந்தப் புனிதப் பண்புகள் என் மனம், மூளை, உடல் ஆகியவற்றை ஆக்கியுள்ள ஒவ்வொரு அணுவிலும் வளர்ந்து கொண்டே வருகின்றன. கடவுளின் குணங்களாக இந்த நற்பண்புகளுடன் நான் ஒன்றாக இணைந்துள்ளேன்.

3. அந்தக் கடவுள் நம் அறிவைத் தூண்டி நம்மை நேர்மையான பாதையில் நடத்திச் செல்வாராக. நம்முடைய அறிவும் நம் குடும்பத்தினரின் அறிவும் தூய்மை அடையட்டும்; நாம் எல்லாவற்றிற்கும் தாயாக உள்ள தெய்வீக ஞானத்தைப் பெற்று இந்த வாழ்க்கை யிலேயே நித்யானந்தத்தைப் பெற்று பிறவிப் பயனை அடைவோமாக.

இந்த மூன்று சங்கல்பங்களையும் மனதில் நினைத்து தியானிக்கும் பொழுது : 1. ஒவ்வொரு சொல்லையும் மெதுவாகவும் ஒரு சொல்லுக்கும் மற்றொரு சொல்லுக்கும் இடையில் ஒரு நொடி இடைவெளிவிட்டும் சொல்ல வேண்டும். ஒரு சொல்லை சொல்லும்பொழுது அதன் உருவத்தை கற்பனையில் காணவேண்டும்.

முதல் சங்கல்பத்தை நினைக்கும் போது கடவுள் இந்த மண்ணுலகிலும், பிறகு சுவர்க்கத்திலும் இருப்பதாகவும், பிறகு பாதாள லோகத்தில் இருப்பதாகவும் கற்பனை செய்ய வேண்டும். ஒவ்வொரு உலகத்திலும் கடவுள் ஒளி வடிவிலும், வெப்பமாகவும், மின் அலைகளாகவும், பிராணவாயுவாகவும் இருப்பதாக கற்பனை செய்யவேண்டும். இந்த பிரபஞ்சக் காட்சிகள் எல்லாமே கடவுளின் உருவங்கள்தான். அர்ஜுனன் கண்ணனின் விஸ்வரூப தரிசனத்தைக் கண்டது போல் கடவுளின் உருவம் எங்கும் நிறைந்திருப்பதாகக் கற்பனை செய்து பார்க்கவேண்டும். சாதகன், கடவுள் தன்னைச் சுற்றி எங்கும் நிறைந்து இருப்பது போலவும், கடவுளின் வயிற்றில் தான் இருப்பது போலவும் கற்பனை செய்யவேண்டும். அதோடு, "சர்வ வல்லமையுள்ள கடவுளின் முன்பாக என் மனதிலும், உடலிலும் எப்படி கெட்ட எண்ணங்களும் கெட்ட செயல்களும் நிலைத்து இருக்க முடியும்?" என்ற வினாவை மனதில் எழுப்ப வேண்டும். மேலும், "பிரபஞ்சம் முழுவதும் உள்ள ஒவ்வொரு சிறு அணுவும் கூட வணங்கி வழிபடத்தக்க கடவுளின் அங்கமே. எனவே இந்த பிரபஞ்சத்திற்கும், இதில் வாழும் மனித குலத்திற்கும் தொண்டு செய்வதன் மூலம் இந்த உலகமாகிய கடவுளின் நந்தவனத்தை அழகுபடுத்துவதே என் வாழ்க்கை" என்றும் சாதகன் எண்ணவேண்டும்.

இரண்டாவது சங்கல்பத்தை நினைக்கும் போது சாதகன், ஒளிமயமான, தனக்கு ஒப்பில்லாத புனிதமான கடவுள், தன் இதயமாகிய அரியணையில் உட்கார்ந்திருப்பது போல் எண்ணிப் பார்க்கவேண்டும். அந்த உருவத்தை விராட் புருஷன் உருவத்தில் (1000 தலைகள், 2000

கைகள் கொண்ட உருவத்தில் கற்பனை செய்து பார்க்கலாம். அல்லது 2. ஸ்ரீராமன், கிருஷ்ணன், திருமால், காயத்ரி, சாவித்ரி, முருகன், கருமாரி இப்படி ஏதாவது ஒரு உருவத்தில் ஆண் தெய்வமாகவோ அல்லது பெண் தெய்வமாகவோ மானசீகமாகக் கண்டு தரிசிக்கலாம். அல்லது 3. எரியும் விளக்காகவோ, மெழுகுவர்த்தி யாகவோ கூட மனக் கண்களில் காணலாம். அல்லது 4. தன் தந்தை தாய் அல்லது குரு (விருப்பமான ஆசிரியர்) உருவத்திலும் மனதில் நினைத்து வழிபடலாம். காயத்ரி சாதகர்கள் சர்வ வல்லமையுள்ள கடவுளை காயத்ரி மாதா வடிவில் காண்பதையே விரும்புகிறார்கள். எந்த உருவில் கடவுளைக் கண்டாலும் அந்தக் கடவுள் (அந்த அழகிய புனிதமான தெய்வீக ஆற்றல்) நிலையாக தன் மனதில் வாழ்வதாகவும், மனதில் இருந்து உடல் முழுவதும் பரவுவதாகவும் கற்பனை செய்யவேண்டும்.

மூன்றாவது சங்கல்பத்தை நினைக்கும் பொழுது காயத்ரி என்னும் தெய்வீக ஆற்றல் நம் அறிவிலும், உணர்விலும், தலையிலும், இதயத்திலும் நிறைந்திருந்து அவைகளை நேர்மையான, கடமை உணர்வுடன் கூடிய தொண்டு நெறியில் கொண்டு செல்கிறது என்று உணரவேண்டும். இந்த மூன்று சங்கல்பங்களும் ஞான யோகம், பக்தியோகம், கர்மயோகம் ஆகிய மூன்று யோகங்களின் புறச் சின்னங்கள் ஆகும். உண்மையில் காயத்ரியைப் பொருள் உணர்ந்து தியானிப்பது மேற்கண்ட மூன்று யோகங்களின் திரிவேணி சங்கமத்தில் மூழ்குவதற்கு ஒப்பாகும்.

இவ்வாறு சங்கல்பம் செய்வதால் காயத்ரி மந்திரத்தின் முழுமையான பொருள் சாதகனின் இதயத்தோடு இரண்டறக் கலந்து விடுகிறது. அதன் விளைவாக ஜபசாதனை ஆரம்பித்த ஒரு சில நாட்களிலேயே சாதகனின் மனம் கெட்ட எண்ணம், கெட்ட செயல் முதயலியவற்றிலிருந்து விடுபட்டு நல்லதையே நினைத்து நல்லதையே செய்யத் தொடங்கி விடுகிறது. ஆரம்பத்தில் இந்த மாற்றம் மிகவும் குறைவாகவே தெரியும். நாளடைவில் ஆன்மீக பலம் வளர வளர அவன் புனிதனாக மாறி படிப்படியாக தெய்வ நிலைக்கு உயர்ந்து கொண்டிருப்பதை உணர்வான் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை.



## 12. காயத்ரி தியானம்

மனித மூளை மிகவும் ஆச்சர்யமான பொறி அமைப்பு : அது மிகவும் சக்தி வாய்ந்தது; காந்தத்தைப் போல் ஈர்க்கும் பண்பும் உடையது. மூளையின் ஒவ்வொரு நுண்பகுதியிலும் உள்ள வீரியம், இயக்க முறை, செயலாற்றல் ஆகியவை அறிவியல் மேதைகளையும் பிரமிப்பில் ஆழ்த்தக் கூடியவைகளாய் உள்ளன. இந்த நுண்பகுதிகளை எந்த வழியில் செயல்படச் செய்தாலும் சரி, அந்த செயலுக்கு வேண்டிய ஆற்றல் அங்கு மிகுதி யாக உற்பத்தியாகிறது. இவ்வாறு ஒரு மனிதனின் உடலில் உற்பத்தியாகும் ஆற்றல் முழுவதும் அவனுடைய ஆசை களை நிறைவேற்றிக் கொள்வதற்கே பயன்படுத்தப்படுகிறது.

மன எழுச்சிகள் முதலில் மனதில்தான் தோன்றுகின்றன. குறிப்பிட்ட ஒரு தீவிர உணர்ச்சியில்

(பொங்கி எழும் ஆசையில்) மனம் ஒருமுகப்படும்போது அதிலிருந்து ஒரு காந்தசக்தி தோன்றி அந்த ஆசையுடன் சம்பந்தப்பட்ட பிரபஞ்ச உணர்வுகளை தன்பால் ஈர்த்துக் கொள்கிறான். இதுதான் தியானத்தின் அறிவியல் அடிப்படை. இந்த அடிப்படையில் ஒரு சாதகன் காயத்ரியிடம் மனதை ஒருமுகப்படுத்தி தியானம் செய்யும்போது பிரபஞ்ச வெளியில் இயற்கை முழுவதும் வியாபித்துள்ள ஆதிசக்தி காயத்ரியை தன்பால் ஈர்த்துக் கொள்கிறது. இதன் மூலம் தன்னால் ஈர்த்து சேமிக்கப்பட்ட ஆற்றல் முழுவதையும் தன்னுள் வைத்துக் கொள்ளும் ஆற்றலையும் அவன் அடைந்து விடுகிறான். இனி காயத்ரி தியான முறையின் பல படிகளைக் காண்போம்.

காயத்ரியை தினமும் ஜபிக்கவேண்டும். எந்த நேரத்திலும் ஜபிக்கலாம். அதற்கு சாதகன், நிசப்தமான சந்தடியற்ற ஒரு தனியிடத்தில் தியானம் செய்ய உட்காரவேண்டும். அப்போது மனம் சலனமற்று அமைதியாக இருக்கவேண்டும்; உடல் மிகவும் சாதாரண ஓய்வுநிலையில் எந்தவித சங்கடமும் இல்லாத நிலையில் இருக்கவேண்டும். தியானம் செய்ய கால்களை மடக்கி சம்மணம் போட்டு உட்காரவேண்டும். எளிதாக உட்கார முடிந்தால் பத்மாசனம் அல்லது அர்த்த பத்மாசன நிலையில் உட்காரலாம். நாற்காலியில் கூட உட்காரலாம். எப்படி உட்கார்ந்தாலும் முதுகும் தலையும் நேராக செங்குத்தாக நிமிர்ந்து நிற்கவேண்டும். கண்களை மூடிக்கொண்டு கைகளைத் தொடையின் மேல் வைத்துக் கொண்டு எங்கு பார்த்தாலும் நீலநிற ஆகாய வெளியா கவே இருப்பதாக மனதில் பாவனை செய்து கொள்ள வேண்டும். நினைவலைகள் முழுவதிலும் ஆகாயத்தைத் தவிர (வெட்ட வெளியைத் தவிர), வேறு எதுவும் இல்லை என்ற நிலையை அடைந்தவுடன், அந்த வானவெளியில் சூரியனைப் போன்ற ஒரு ஒளி வட்டம் ஒரு பிரகாசமான

நட்சத்திரம் வெகு தொலைவில் தெரிவதாக பாவித்து அதை கவனிக்க வேண்டும். தியானத்தில் மன ஒருமைப் பாடு வளர வளர, வெகு தொலைவில் தெரியும் அந்த ஒளிவட்டம் கொஞ்சம் கொஞ்சமாக அருகில் வருவதும், படிப்படியாக அதன் பேரொளி வளர்ந்து வருவதும் தெரியும். இது காயத்ரி தியானத்தின் முதல் நிலை.

அடுத்து வருவது இரண்டாம் நிலை. ஒரு நிமிடம் சூரியனையோ அல்லது சந்திரனையோ கூர்ந்து கவனித்தால் அவற்றின் நடுபாகத்தில் கரும்புள்ளிகள் இருப்பதைக் காணலாம். அதே போல் நம் மனதில் காணும் ஒளி வட்டத்தின் நடுவில் மங்கலாக காயத்ரி மாதாவின் திருவுருவம் இருப்பதாக பாவனை செய்யவேண்டும். காலப்போக்கில் அந்த உருவம் தெளிவாகத் தெரியும்; புன்முறுவல் செய்யும்;சாதகனுடன் மற்ற மனிதர்கள் பேசுவதைப்போல் கனிவாகப் பேசும். இந்த இரண்டாம் நிலை தியானத்தைத் தொடங்கும் முன்னர் காயத்ரி மாதாவின் திருவுருவப்படம் ஒன்றை எதிரில் வைத்துக் கொள்ளவேண்டும். தினமும் தியானம் தொடங்கும் போது அந்தப் படத்தை நன்றாக பக்தி உணர்வுடன் உற்றுப்பார்க்கவேண்டும். படத்தில் உள்ள ஒவ்வொரு அங்க அடையாளத்தையும் கவனித்து நன்றாக மனதில் பதியவைத்துக் கொள்ளவேண்டும். அதன் பிறகே அந்த ஒளிவட்டத்திற்குள் காயத்ரி மாதாவை மானசீகக் காட்சியாகக் காண முயற்சி செய்யவேண்டும். சாதகன் எந்த அளவுக்கு மன ஒருமைப்பாட்டுடன் இப்படி தியானம் செய்கிறானோ அந்த அளவுக்கு விரைவான காலத்தில் ஒளிவட்டத்தினுள் காயத்ரி தரிசனம் தெளிவாகக் கிடைக்கும். மன ஒருமைப்பாடு குறைவாக இருப்பதன் காரணமாக காயத்ரி தரிசனம் கிடைக்க சிறிது கால தாமதம் ஆகலாம். ஆனால் எந்த சாதகனுக்கும் தரிசனம் கிடைக்காமல் போகாது.

முதல் இரண்டு நிலைகள் வரையில் சாதகன் முயற்சி

தேவைப்படுகிறது. மூன்றாவது நிலை தெய்வ சங்கல்பமாக தானகவே நிகழ்கிறது. இந்த நிலையில், ஒருவன் சூரியனின் மேல் உட்கார்ந்தால் எப்படி வெப்பத்தை உணர்வானோ, அதுபோல் காயத்ரி தேவி சாதகனின் ஆன்மா, உடல், மனம் ஆகிய எல்லா பகுதிகளையும் தெய்வீக ஒளியால் நிரப்புகிறாள். இரும்பு, நெருப்பில் இட்டு காய்ச்சப்படும் போது எவ்வாறு வெப்பத்தால் சிவந்து காணப்படுகிறதோ அதுபோல காயத்ரி சாதகன், தியானம் செய்யும் போது காயத்ரி ஒளி வெள்ளத்தில் மூழ்கி தானே ஒளிமயமாக இருப்பதை உணர்கிறான். இதையே வேறுவகையாகக் கூறினால், காயத்ரி தியானத்தில் இறை நிலை அடைந்தவன் பரப் பிரம்மத்துடன் ஒன்றி விடுகிறான்; ஒரு ரிஷியாக மாறிவிடுகிறான்; பிரம்ம தேஜஸால் நிறைவுற்று தானே நட்சத்திரம் போல் ஒளிவிடுகிறான்; அவன் தன் உடல் முழுவதும் தங்கத்தைப் போல் சிவந்து விட்டதாகவும், தன்னுள் சூரியனைப் போல் தெய்வீக ஒளிவீசிக் கொண்டிருப்பதாகவும் உணர்கிறான். இந்த ஒளியில் அவனுடைய பாபங்களும், வினைப் பதிவுகளும் கருகி அழிந்து விடுகின்றன. அதன் பிறகு அவன் பற்றற்றவனாக, அச்சமற்றவனாக முழுவதும் தூய்மையடைந்த புனிதனாக, தானே கடவுளைப்போல் இருப்பதை உணர்கிறான்.

நான்காம் நிலையில் சாதகன் தியானத்தில் வெற்றி கண்டுவிட்டான் என்பதை குறிக்கும் பல அடையாளங்கள் தோன்றுகின்றன. முதலில் பல வண்ணங்களில் ஒளி தோன்றுகிறது. சில சமயங்களில் சிறிதும் பெரிதுமாக பல வண்ண விண்மீன்கள் ஒளியுடன் தோன்றி மறைகின்றன, அந்த விண்மீன்கள் பல திசைகளிலும் அவை செல்வது போல் காட்சி அளிக்கின்றன. சில சமயங்களில் அவை வட்டமாகச் சுற்றி வருகின்றன. வேறு சில சமயங்களில் வில்லிலிருந்து புறப்பட்ட அம்பைப்போல் நேராகப்

பாய்ந்து சென்று மறைகின்றன. இவையாவும் ஆன்மாவில் காயத்ரி ஆற்றல் வளர்ந்து வருவதன் பல்வேறு நிலைகள் ஆகும்.

ஐந்தாவது நிலை, தியானத்தின் முழுமையான கடைசிநிலை. இதுதான் சாதகன் சித்தி அடைந்த நிலை. இந்த நிலையில் மூளை, இதயம் ஆகிய இரண்டு இடங்களில் நிலைபெற்று விடுகிறது. அப்போது காயத்ரி பிராணனும், அவனுடைய பிராணனும் ஒன்றாகி விடுகின்றன. அவன் ஜீவபிரம்ம ஐக்கிய நிலையை அடைகிறான். அந்த நிலையில் அவன் எண்ணம், சொல், செயல் யாவிலும் தன்னலமற்றவனாக இயங்கத் தொடங்கிவிடுகிறான். உலகம் நன்றாக இருக்க வேண்டும் என்பதே அவன் நோக்கமாகி விடுகிறது. மனிதனிடம் காணப்படும் விலங்கு மனம், முழுவதுமாக அவனை விட்டு அகன்றுவிடுகிறது. அவன் தெய்வாத்மாவாக மாறிவிடுகிறான்.

இதுவே மிகவும் உயர்ந்த காயத்ரி தியானம். சாதகன் காயத்ரியை ஒளிவடிவமாக தியானிக்கும் போது அதன் ஒளிக்கதிர்கள் தெய்வீக ஞானம், ஒழுக்கம், ஆற்றல் அனைத்தையும் தன் மீது வீசி படியவைப்பதாக உணரவேண்டும். தியானம் முடிந்து எழும்பொழுது அவன் தன்னிடம் ஞானம், தூய்மை, மனத் தெளிவு முதலியவை முன்பிருந்ததைவிட அதிகமாகி இருப்பதை உணர்வான். இப்படி தினமும் கொஞ்சம், கொஞ்சமாக உயர் பண்புகள் வளர்ந்து வருமானால் காலப் போக்கில் அவனுடைய உடல், மனம், ஆன்மா ஆகிய யாவும் பிரம்பதேஜசால் நிறைந்துவிடும். இது அவனுக்கு ஆன்மீக செல்வத்தையும், உலகியல் வளங்களையும் வற்றாது வாரிவாரி வழங்கிக்கொண்டே இருக்கும்.



# 13. ப்ரக்யா யோக சாதனை

பொதுவாக தொன்றுதொட்டு மக்களாலும், ரிஷிகளாலும், தேவர்களாலும் வழிபாடு செய்யப்படும் தெய்வம் ஆதிசக்தி காயத்ரி. யுகதர்மப்படி தற்காலத்தில் அந்த சக்தி வழிபாடு தனிச்சிறப்பும் முக்கியத்துவமும் பெற்றுள்ளது. அது ஒரு சாதகனுடைய குணம், செயல்கள், சுபாவம் ஆகிய மூன்றையும் களங்கம் அற்றவைகளாக மாற்றுகிறது.காயத்ரி சாதனை ஆன்ம ஒளி (ஓஜஸ்), தெய்வீக ஒளி (தேஜஸ்), வீரியம் (வர்ச்சஸ்) ஆகிய மூன்றையும் அளிக்கிறது. ஆன்மபலம் பெறுவதற்கு உள்ள ஒரே வழி சாதனைதான். அதிலும் "ப்ரக்யா யோக சாதனை" கல்பசாதனையின் ஒரு அங்கம். ஆன்மாவின் முழுமையான வளர்ச்சிக்கு பிரக்யா யோகத்தை காயத்ரி சாதனையுடன் இணைத்து செய்யவேண்டும். உடல் வளர்ச்சிக்கு உணவு எவ்வளவு அவசியமோ அந்த அளவுக்கு காயத்ரி சாதனை ஆன்ம வளர்ச்சிக்கு அவசியம். உடல் வளர்ச்சியில் உணவு எவ்வளவு அவசியமோ அந்த அளவுக்கு தண்ணீர், காற்று, தூக்கம், உடை, கழிவுகள் வெவ்ளியேற்றம் ஆகியவைகளும் அவசியமல்லவா? அதேபோல் ஆன்ம வளர்ச்சிக்கு காயத்ரி சாதனை எந்த அளவுக்கு இன்றியமையாததோ அந்த அளவுக்கு ப்ரக்யா யோகமும் முக்கியம் வாய்ந்ததாகும்.

பூதவுடல், சூட்சும சரீரம், காரண சரீரம் ஆகிய மூன்று உடல்களும் தூய்மை அடைய குறைந்தது மூன்று மாலைகள் (ஒரு மாலை = 108 ஜபம்) காயத்ரி ஜபம் செய்யவேண்டும். இவ்வாறு மூன்று மாலைகள் ஜபம் செய்வது ப்ரக்யாயோகம் எனப்படும். 108 மாலைகள் ஜபம் செய்வது ஒரு அனுஷ்டானம். இவ்வாறு ஒரு மாத காலம் இடைவிடாது அனுஷ்டானம் செய்வது ஒரு கல்பசாதனை.

இவ்வாறு ஜபசாதனை செய்யும் சவிதாவை (பொன் நிறத்தில் சூரியன் உதிப்பதுபோன்ற உருவத்தை) மனதில் கற்பனை செய்து, தியானிக்க வேண்டும். அதே நேரத்தில் உடல், மனம், ஆன்மா ஆகிய மூன்றும் தெய்வீக ஒளியால் நிறைந்திருப்பதாகவும் உணரவேண்டும்.

ஞானயோகம் : ப்ரக்யா யோகத்தை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். 1. ஞான யோகம். 2. கர்ம யோகம். ஞானயோகத்தில் காலையில் எழுந்தவுடன் ஆத்மபோதசிந்தனை செய்யவேண்டும். அந்த சிந்தனையில் 'மனிதப்பிறவி கடவுள் நமக்களித்துள்ள மிகப் பெரிய நன்கொடை. இப்பிறவி, நமக்கு நன்மை செய்து கொள்வதுடன் உலகத்திற்கும் நன்மை செய்வதற்காகவே அளிக்கப்பட்ட பிறவி' என்று எண்ண வேண்டும். ஒவ்வொரு நாளையும் திட்டமிட்டு பயனுள்ள வகையில் கழிக்க வேண்டும். ஒவ்வொரு நாளும் செய்ய வேண்டிய பணிகளில் ஆத்மபோத சிந்தனைக்கு என்று 15 நிமிடங்களை ஒதுக்கிவிட வேண்டும்.

தினமும் இரவில் தூங்குவதற்காக படுக்கையில் படுத்தவுடன், "மரணம் தவிர்க்க முடியாதது ; மரணம் அடைந்தவுடன் கடவுளின் அரசாங்கத்தை அடையப் போகிறோம். அங்கே, கடவுள் நமக்கு அளித்த செல்வத்தை முறையாக பயன்படுத்தினோமா அல்லது வீண் செலவு செய்து பாழாக்கினோமா? என்பதற்கு விளக்கம் கூற வேண்டும். நாம் அலட்சிய புத்தியில் மற்றவர்களுக்கு தீங்கிழைத்தால் தாழ்ந்த பிறவிகள் எடுத்து அப்பிறவிகளில் சித்திரவதை அனுபவிக்க நேரிடுமே?" என்றெல்லாம் எண்ணிப் பார்க்க வேண்டும். மரணத்திற்குப் பின் துன்பங்கள் வருவதைத் தவிர்ப்பதற்காக நாம் இது வரை செய்த தீங்குகள், நம் வாழ்க்கையில் கொண்டிருந்த தீய பழக்கவழக்கங்கள் ஆகியவற்றை நினைந்து மனம்

வருந்த வேண்டும். இன்றை விட நாளைய தினம் நல்ல நாளாக அமைய வேண்டும் என்று மனதில் உறுதி செய்து கொண்டு உறங்கத் தொடங்கவேண்டும்; நாம் மரணத்தைத் தழுவுகிறோம் என்ற எண்ணத்தில் தூங்கவேண்டும். இந்த உறக்கத்திற்கு சீர்-நித்திரை என்று பெயர். காலையில் ஆத்மபோதத்திற்கு ஒதுக்கியது போல் இந்த சீர்நித்திரை தியானத்திற்கும் 15 நிமிடங்களை ஒதுக்கவேண்டும்.

இவற்றோடு நான்கு வகை கட்டுப்பாடுகளை வாழ்க்கையில் கடைபிடிக்க வேண்டும். அவைகளுக்கு சான்யங்கள் என்று பெயர். 1. இந்திரிய-சான்யம் : சுவை உணர்ச்சியையும், பால் உணர்ச்சியையும் வரம்பு மீறாமல் பார்த்துக் கொள்ளுதல், 2. சாம்ய சான்யம் : ஒவ்வொரு நாளின் பணிகளையும் திட்டமிட்டு செய்தல் ; ஒரு நிமிடத்தைக் கூட வீணாக்காமல் பயன்படுத்தல். 3. அர்த்த சான்யம் : வரவுக்கு ஏற்றபடி திட்டமிட்டு செலவு செய்தல் ; செலவுத் திட்டத்தில் மற்றவர்களுக்காக ஒரு பகுதியை ஒதுக்குதல். நாம் ஒவ்வொருவரும் நாம் வாழும் சமூகத்திற்கு ஏதோ ஒரு வகையில் கடன்பட்டவர்களே; மற்றவர்களுக்கு உதவுவதன் மூலம் அந்தக் கடனைத் தீர்க்கும் கடமையும் நம் வாழ்க்கையின் ஒரு முக்கிய பகுதியாகும். 4. விசார சான்யம் : தவறான எண்ணங்களும், சமூக விரோதச் செயல்களைத் தூண்டும் எண்ணங்களும், பயனற்ற எண்ணங்களும் மனதைவிட்டு அகலவேண்டும்; பயனுள்ள உணர்ச்சிகளும், கற்பனைகளும், செயல் திட்டங்களும் மட்டுமே மனதில் இடம்பெற வேண்டும். இந்த நான்கு கட்டுப்பாடுகளையும் அமைத்துக் கொண்டு வாழ்வதற்கு "அனுபவ தவ சாதனை" என்று பெயர்.

தியானம் (மனனம்) நான்கு அங்கங்களைக் கொண்டது. அவை 1. ஆத்ம சிந்தனை, 2, ஆத்ம சுதார், 3.

ஆத்மநிர்மாணம், 4. ஆத்ம விகாசம் என்பனவாகும்.

1. ஆத்மசிந்தனை என்பது ஒரு சாதகன் தன் மனநிலையைத் தானே ஆய்வது; தன் எண்ணங்களில் நேர்மையானவை, முறையற்றவை எவையெவை என்று பகுத்துப் பார்ப்பது. 2. ஆத்ம சுதார் என்பது தன்னிடமுள்ள கேடு விளைவிக்கும் தீயபழக்கங்களிலிருந்து எப்படி விடுபடுவது என்று ஆராய்தல். 3. ஆத்ம நிர்மாணம் என்பது வாழ்க்கை வளம் பெறத் தேவையான நெறிமுறை களைக் கடைபிடிக்கத் தொடங்குதல்; அவற்றை வளர்த்து வாழ்க்கையை அறவாழ்வாக உயர்த்துதல். 4. ஆத்ம விகாசம் என்பது "இந்த உலகம் முழுவதும் ஒரே குடும்பம். அந்தக் குடும்பத்தில் நான் ஒரு அங்கம்" என்று கருதுவது. வசுதேவ குடும்பகம் என்னும் இந்தக் கொள்கையை அனுபவத்திலும் பின்பற்றி நடக்கவேண்டும். குறுகிய மனப்பான்மையால் வரும் பேராசையையும், பொறாமை யையும் தகர்த்தெறிய வேண்டும். "எல்லோருடைய ஆன்மாவும், என்னுடைய ஆன்மாவும் ஒரே ஆன்மாதான்" என்ற,கருத்துடன் மற்றவர்களுடைய இன்பங்களையும், துன்பங்களையும் ஆர்வத்துடன் பகிர்ந்து கொள்ள வேண்டும். இது நடை முறை வாழ்க்கையில் பயிலும் யோக சாதனை, வீடு பேற்றை அடைய உதவும் சிந்தனையே தவம்; தியானமே யோகம். இவை இரண்டும் சேர்ந்ததே ப்ரக்யாயோகம். ப்ரம்மவித்தை என்பதும் இந்த தவயோகமே ஆகும்.

கர்மயோகம் : கிரியாயோக வழிபாட்டின் முக்கிய அங்கம் நித்யகர்மம் (ஒவ்வொரு நாளும் செய்யும் காரியங்கள்.) தினமும் காலையில் குளித்துவிட்டு ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் மனதில் எந்தவித சலனமும் இன்றி உட்காரவேண்டும். அந்த நிலையிலிருந்து கலையாமல் குறைந்தது மூன்று மாலை காயத்ரி ஜபம் செய்யவேண்டும்.இந்த வழிபாடு

அரைமணி நேரத்தில் முடிந்துவிடும். கர்மயோகத்தின் மொத்த அங்கங்கள் ஐந்து. அவை: 1. ஆத்மசோதனை, 2. தேவி பூஜை, 3. ஜபம், 4. தியானம், 5. விசர்ஜனம்.

1. ஆத்ம சோதனை : காலை மடக்கி உட்கார்ந்து கொண்டு கீழ்க்கண்ட கிரியைகளை செய்யவேண்டும். 1. பவித்ரீகரணம்: உடலில் நீரைத் தெளித்துக்கொள்ளுதல். 2. ஆசமனம்: மூன்று முறை வலக்கரத்தில் நீர் எடுத்து குடித்தல் வேண்டும். 3. ஷிகா வந்தனம்: தலையின் உச்சி முடியைத் தொடவேண்டும். 4. பிராணாயாமம்: மெதுவாக மூச்சை உள்ளிழுத்து வெளிவிட வேண்டும். 5. நியாசம்: இடது உள்ளங்கையில் சிறிது தண்ணீரை எடுத்துக் கொண்டு அதை வலதுகை விரல்களால் தொட்டு கண்கள் முதலான உடல் பகுதிகளில் ஒற்றிக் கொள்ளவேண்டும் இந்த ஐந்து கிரியைகளையும் செய்துவந்தால் தீய எண்ணங்களும் உணர்வுகளும் நீங்கி தூயபக்தியும் நேர்மை உணர்வும் வளர்ந்து வரும். தூய பக்தியும் ஞானமும் உள்ளவர்களே கடவுளின் அரசாங்கத்தை அடைய முடியும்; அவருடைய அருளைப் பெறமுடியும். ஆகையால் தன்னை உணரும் பாதையில் செல்ல விரும்புபவர்கள் தங்கள் முதல் கடனாக ஆத்மசோதனை செய்தே தீரவேண்டும்.

2. தேவி பூஜை : ஞான விளக்கம் பெற்ற ஆன்மாக்கள் ஒவ்வொருவரும் மகாப்ரக்யையை (ரிதாம்பர காயத்ரியை) தங்கள் வழிபடு தெய்வமாகக் கொள்ள வேண்டும். மகாப்ரக்யையின் அடையாளமாக காயத்ரி மாதாவின் படத்தை ஒரு அலங்கரிக்கப்பட்ட பீடத்தின் மேல் வைத்து கை கூப்பியும், சிரம் தாழ்த்தியும், காலில் விழுந்தும் வணங்க வேண்டும்.

சாதகன், தேவியிடம் தனக்குள்ள உறவை உறுதி செய்து கொள்ள பாவனையாக ஐந்து வகை உபசாரங்கள்

செய்ய வேண்டும். தேவி தன் எதிரில் இருப்பதாக பாவித்துக் கொண்டு 1. நீர், 2. அட்சதை (அரிசி), 3. மலர்கள், 4. தூபதீபம், 5. நைவேத்யம் ஆகியவற்றை சமர்ப்பணம் செய்ய வேண்டும். (ஒரு பாத்திரத்தில் பக்தி சிரத்தையுடன் இடவேண்டும்). இதற்கு பஞ்சோபசாரம் என்று பெயர். இவைகளில் தண்ணீர் அடக்கத்தையும் இரக்க குணத்தையும் குறிக்கிறது. அட்சதை அழகு, வளம் பெருகுதல், மகிழ்ச்சி ஆகியவற்றைக் குறிக்கிறது. தூபதீபம் தன்னையே அர்ப்பணம் செய்வதன் மூலம் தியாக ஒளி பரவுவதைக் குறிக்கிறது. நைவேத்யம் உயர்ந்த இனிய பண்புகளையும் பழக்கவழக்கங்களையும் குறிக்கிறது.

3. ஜபம்: தினமும் மூன்று மாலை காயத்ரி ஜபம் செய்ய வேண்டும். எவ்வளவு அதிகமாக ஜபம் செய்கிறோமோ அந்த அளவுக்கு நலம் பெருகும். இதுவே ஆன்மாவை சுத்தி செய்யும் முறை. ஆன்மா சுத்தி அடைந்தால் கடவுள் அந்த ஆன்மாவுடன் ஒன்றுகலந்து வாழ்க்கையின் எல்லா செயல்களிலும் வெளிப்படுவார்.

4. தியானம்: ஜபம் செய்யும் போது மனம் பரம்பொருள். தத்துவத்திலேயே நிலை பெற்றிருக்க வேண்டும். சகர தியானத்தில் காயத்ரி மாதாவிடம் சரண் அடைந்துவிட வேண்டும். தொடர்ந்து அவளுடைய அன்பும் ஆதரவும் தன் ஆன்மா, மனம், உடல் யாவிலும் பெருக்கெடுத்து ஒடிக் கொண்டிருப்பதாக உணர வேண்டும். நிரங்கார தியானத்தில் சூரியன் உதிப்பதை மனக்கண்ணில் காண சூரியனின் பொன்னிறக் கிரணங்கள் தன் உடல், மனம், ஆன்மா எங்கும் ஊடுருவிப் பாய்வதாக உணரவேண்டும். இது மனஒருமைப் பாட்டுடன் நிஷ்டையில் நிலைத்து நிற்க உதவிபுரியும்.

5. சூரிய அர்க்யாதானம்: கலச நீரை துளசிச் செடிக்கு ஊற்ற வேண்டும். நீர் ஊற்றுவதை சூரியன் இருக்கும்

திசையை நோக்கி ஊற்ற வேண்டும். தண்ணீர் ஆன்மாவையும் சூரியன் எங்கும் நிறைந்துள்ள விராட் பிரம்மத்தையும் குறிக்கின்றன. சூர்யார்க்யதானம் என்பது ஆன்மா தன்னை விராட் பிரம்மத்திற்கு அர்ப்பணிப்பதைக் குறிக்கிறது.

வாரத்தில் ஏதேனும் ஒரு நாளில் ஒருவேளை மட்டும் உணவு அருந்தவேண்டும். ஞாயிற்றுக்கிழமையும், வியாழக்கிழமையும் ஒரு பொழுது விரதம் இருக்க ஏற்ற நாட்கள். அந்த விரத நாளில் உணவில் உப்பு சேர்த்துக் கொள்ளக் கூடாது; பிரம்மச்சரிய விரதம் கடைபிடிக்க வேண்டும். அன்று காலைப் பொழுதில் இரண்டு மணிநேரம் மௌன விரதம் அனுஷ்டிக்க வேண்டும்.

இமாலயத்தில் கண்களுக்குப் புலப்படாத ஒரு இடத்திலிருந்து காலை சந்தியிலும் மாலை சந்தியிலும் ஒரு தெய்வீக ஆற்றல் எங்கும் பரவுகிறது. அந்த ஆற்றல் உலகெங்கும் உள்ள விழிப்படைந்த ஆன்மாக்களை ஊக்குவித்து யுக தர்மப்படி தாங்கள் ஆற்ற வேண்டிய கடமைகளைச் செய்ய வைக்கிறது; அவர்கள் அந்த கடமைகளைச் செய்வதற்கு வேண்டிய வலிமை யையும் அவர்களுக்கு அளிக்கிறது. சாந்திகுஞ்சில் உள்ள ஒரு சிலருக்கு இந்த ஆற்றல் தினமும் கிடைக்கிறது; பிரக்யா பரிஜனகள் அனைவருக்கும் வாரம் ஒருமுறை கிடைக்கிறது. இந்த ஆன்மீக ஆற்றலை மேற்கண்ட விரத நாளில் சாதகன் கீழ்க்கண்ட முறையில் விராட பிரம்மத்தை வேண்டிப் பெற வேண்டும்.

அதற்கு 1. முதலில் தியான முத்திரையில் உட்கார வேண்டும். அப்போது முதுகுத்தண்டு நேராக இருக்க வேண்டும்; உடல் அசையக் கூடாது; கண்கள் மூடியிருக்க வேண்டும். மடியில் இடதுகை மேல் வலதுகையை

வைத்துக் கொள்ளவேண்டும். 2. ஒரு அமைதியான இடத்தில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் கிழக்கு நோக்கி உட்கார வேண்டும். 3. அந்த நிலையில் மனம் சிறிதும் சலனமற்று இருக்க வேண்டும். 4. இமயமலை மீது இரண்டு பனி மூடிய சிகரங்களுக்கு இடையில் தங்க நிறத்தில் சூரியன் உதிப்பதாகவும் அதன் பொன் நிறக் கதிர்கள் எங்கு பார்த்தாலும் பரவியிருப்பதாகவும் கற்பனை செய்ய வேண்டும். 5. அந்தக் கதிர்கள் தன் உச்சந்தலை வழியாக தன் பருவுடல் முழுவதும் பரவுவது போலவும், தன் புருவ மத்தியின் வழியாகத் தன்னுள் சென்று தன் சூட்சும உடல் முழுவதும் பரவுவது போலவும், தன் இதயத்தின் வழியே ஊடுருவிச் சென்று தன் காரண சரீரம் முழுவதையும் நிரப்புவது போலவும் சாதகன் உணர்ச்சி பூர்வயாக எண்ணவேண்டும். தெய்வீக ஒளி உடல் முழுவதும் பரவிய மாத்திரத்தில் சாதகன் தன் உடலே ஒளிமயாமாக இருப்பதை உணர்கிறான். அவன் ஒளிமயமான ஆண்டவனுடன் இரண்டறக் கலந்து விடுகிறான். தான் முற்றிலும் ஆண்டவனிடம் சரணாகதி அடைந்து விட்டதையும், ஆண்டவன் தனக்கு அருளை எல்லையில்லாது வழங்கிக் கொண்டிருப்பதையும் உணர்கிறான். அமுதம் உண்ட பேரின்பநிலையை அடைகிறான். இந்த தியானத்தை ஆரம்ப காலத்தில் ஒரு நாளைக்கு 15 நிமிடநேரம் செய்யவேண்டும். ஒரு வாரத்திற்கு ஒரு நிமிடம் வீதம் அதிகரித்துக் கொண்டே செல்ல வேண்டும். ஒரு நாளைக்கு அரைமணிநேரம் தியானம் செய்யும் நிலை வந்தவுடன் அதிகரிப்பதை நிறுத்திக் கொள்ளவேண்டும். தியான முடிவில் மனதிற்குள்.

**ॐ तमसो मा ज्योतिर्गमय। असतो मा सद्गमय।**
**मृत्योर्मा अमृतंगमय।।**

தமசோ மா ஜோதிர் கமய. அசதோ மா

ஸட்கமய ம்ருத்யோர் மா அம்ருதங்கமய.

என்று கூறிவிட்டு, அம்ருதங்கமய ஓம், ஓம், ஓம், ஓம், ஓம், என்று ஐந்து முறை ஒலியெழுப்பி தியானத்தை நிறைவு செய்யவேண்டும்.

பிரக்யாயோகத்திற்கு ஜபம், தியானம் ஆகிய இரண்டும் எவ்வளவு முக்கியமோ அந்த அளவுக்கு அக்னி ஹோத்ரமும் முக்கியமாகும். சாந்தி குஞ்ச், காயத்ரி தீர்த்தத்தில் தினமும் யாகம் நடக்கிறது. சாந்தி குஞ்சிலுள்ள சாதகர்கள் தங்கள் யோக சாதனை நிறைவு பெற இந்த யாகங்களில் கலந்து கொள்ளலாம்.

அனுஷ்டானத்தில் ஜபம், யக்ஞம், பிரம்ம போஜனம் என்பன முக்கிய பகுதிகளாகும். பிரம்ம போஜனம் என்பது தகுதி உள்ளவர்களுக்கு உணவு வழங்குதல் (அன்னதானம்). தகுதி உள்ளவர்கள் யார் என்று கண்டுபிடிப்பது கஷ்டமாகையால் அவரவர்கள் சக்திக்கு உகந்தவகையில் சாந்திகுஞ்சிற்கு பொருள் வழங்கி இங்கு ஏற்படும் உணவுப் பற்றாக்குறையைப் போக்கலாம். இத்தொகை சாதகர்களுக்கும், இங்கு திருத்தல யாத்திரை வருபவர்களுக்கும் இலவச உணவு வழங்கப் பயன்படும். இவை அனைத்தும் சேர்ந்துதான் பிரக்யா யோக சாதனை.



# 14. காயத்ரி சாதனையின் முக்கிய அங்கங்கள்

## மன ஒருமைப்பாடு

காயத்ரி சாதனை செய்யும் போது சாதகனுடைய மனதில் எந்த எண்ணமும் இருக்கக் கூடாது. மனம் குடத்தில் இட்ட தீபம் போல் அசையாமல் ஜபத்திலேயே ஒன்றி இருக்க வேண்டும். மனம் அலைந்து கொண்டு இருந்தால் ஜபம் செய்வது எவ்வித பலனையும் அளிக்காது. இதற்கு நம்பிக்கையும், தீவிர பக்தியும் அவசியம். தெய்வத்திடம் பயமும் மரியாதையும் மனதில் உண்மை யாகவே இருக்குமானால் சாதனைக் காலத்தில் மனம் பிற எண்ணங்களில் செல்லாது.

சிலர் "நான் ஒரு லட்சம் தடவை மந்திர ஜபம் செய்கிறேன். ஆண்டவனே, நீ எனக்கு இந்த நன்மையைச் செய்யவேண்டும்" என்று சங்கல்பம் செய்து கொண்டு ஜப சாதனைகள் செய்வார்கள். இதுவும் பயன் அளிக்காது. இவர்கள் மந்திரம் சொல்வதற்காக தெய்வம் ஏங்கிக் காத்துக் கொண்டிருப்பது போல் எண்ணுவது அறியாமை. இது சாதகர்களுக்கு தெய்வத்திடம் நம்பிக்கை இல்லை என்பதையே புலப்படுத்துகிறது. தெய்வ நம்பிக்கை இல்லாமல் காயத்ரி சாதனை செய்யும் ஒருவர் கூட, தினமும் ஒருமைப்பாட்டுடன் ஜப சாதனை செய்து வருவாரானால், அவருக்கு தானாகவே தெய்வத்திடம் நம்பிக்கையும், பக்தியும் உண்டாகிவிடும். அதற்கு சிறிது காலதாமதமாகும்; அவ்வளவுதான். சிலருக்கு தெய்வ நம்பிக்கையும், ஆழ்ந்த பக்தியும் இருந்தும், ஜபம் செய்யும் போது மன ஒருமைப்பாடு உண்டாவதில்லை. அவர்கள்

தொடர்ந்து நம்பிக்கையும், விடா முயற்சியும் கொண்டு ஜபசாதனை செய்வதால், சிறிது காலத்தில் மனம் ஒருமுகப்பட்டுவிடும்.

## காயத்ரி சாதகர்கள் கடைபிடிக்க வேண்டிய ஒழுக்கநெறிகள்

1. சாதகம் செய்ய உட்காரும் முன்னர் குளித்து முழுகி உடலை சுத்தமாக வைத்துக் கொள்ளவேண்டும். உடல்நலக்குறை ஏற்படின் கை, கால்களைக் கழுவிக் கொண்டு, உடலை ஈரத்துணியால் துடைத்துக் கொள்ள வேண்டும்.

2. ஆடைகளை தளர்ச்சியாக உடுத்த வேண்டும். எந்த அளவுக்கு குறைந்த ஆடைகள் உடுத்த முடியுமோ அந்த அளவுக்குக் குறைவாக உடுத்த வேண்டும். குளிர் அதிகமாக இருந்தால் போர்வைகள் போர்த்திக் கொள்ளலாம்.

3. சாதகம் செய்யும் இடம் திறந்தவெளியில் தனி இடமாக இருக்கவேண்டும். அங்கு அமைதியான சூழ்நிலை வரவேண்டும். வயல்புறம், தோட்டம், ஆற்றங்கரை, ஏரிக்கரை, கோவில் முதலிய இடங்கள் சாதகம் செய்வதற்கு ஏற்ற இடங்கள். அப்படி ஒரு இடம் கிடைக்கவில்லை என்றால் வீட்டிலேயே ஒரு சுத்தமான, அமைதியான பகுதியில் உட்கார்ந்து ஜபம் செய்யலாம்.

4. ஜபசாதனை செய்யும்போது துவைத்த தூய ஆடை அணிந்திருப்பது நல்லது.

5. கால்களை மடக்கி வசதியாக உட்கார்ந்து சாதகம் செய்யவேண்டும். ஜபம் முடியும்வரை ஒரே நிலையில் உட்கார்ந்திருப்பது நல்லது.

6. முதுகுத்தண்டு நேராக இருக்கும்படி நிமிர்ந்து உட்கார வேண்டும். அப்போதுதான் பிராணசக்தி

மூலாதாரத்திலிருந்து சுஷும்ணா நாடி வழியாக மேலே செல்ல முடியும்.

7. வெறும் தரையில் உட்கார்ந்து காயத்ரி சாதனை செய்யக்கூடாது. அப்படி உட்கார்ந்தால் சாதனை மூலம் கிடைக்கும் ஆற்றலையெல்லாம் பூமி ஈர்த்துக்கொள்ளும். குஷன் அல்லது பஞ்சு மெத்தை மீது உட்கார்ந்து சாதகம் செய்வது மேலானது. சாதாரணமாக கோரைப்பாயின் மேல் உட்காரலாம். தாந்த்ரீகத் தொழிலில் ஈடுபவர்கள் கம்பளம், தோல் முதலியவற்றை உபயோகிப்பார்கள்.

8. ஜபம் செய்ய துளசிமணி மாலையையோ சந்தனக் கட்டை மணிமாலையையோ உபயோகிக்கலாம். தாந்த்ரீகத் தொழிலுக்கு ருத்ராட்ச மாலை, சிவப்பு சந்தனக்கட்டை மணிமாலை அல்லது சங்கு மணிமாலையை உபயோகிப்பர்.

9. காலையில் சூரிய உதயத்திற்கு இரண்டு மணி நேரம் முன்பாகவே ஜபம் செய்யத் தொடங்கிவிட வேண்டும். மாலையில் சூரியன் மறைந்து ஒரு மணி நேரம் கழிந்த பிறகுதான் ஜப சாதனையை நிறைவு செய்ய வேண்டும். தாந்த்ரீக சாதகர்கள் நடு இரவில் சாதனை செய்யவேண்டும்.

10. காயத்ரி சாதனை செய்வதில் நான்கு விஷயங்களிலும் தனி கவனம் செலுத்த வேண்டும். 1.காயத்ரி ஜபம் செய்யும் போது மனம் அங்கும் இங்கும் அலையக் கூடாது. மனதில் பல்வேறு எண்ணங்கள் எழுந்தால் காயத்ரி மாதாவின் அழகிய உருவத்தை மனக்கண்ணில் காண முயற்சி செய்யவேண்டும். 2. காயத்ரி மாதாவிடம் அசைக்க முடியாத நம்பிக்கை வைக்கவேண்டும். நம்பிக்கையின்மை, சந்தேகம் இரண்டுக்கும் இடம் கொடுத்தால் சாதனையின் பயனை அடைவது கடினம். 3. சாதகன் தளராமல் உறுதியுடன் சாதகம் செய்ய வேண்டும். உற்சாகக் குறைவு,

மனத்தளர்ச்சி, உடனே பலன் கிடைக்க வில்லையே என்ற ஏக்கம், உடல்நலக் குறைவு, வாழ்க்கையில் வரும் பிற துன்பங்கள் ஆகியவை சாதனைக்கு தடைகளாக அமைகின்றன. இத்தகைய மனக்குறைகளைப் பற்றி கவலைப்படாமல் சாதனையே வாழ்வென்று இருப்பவன் அதிவிரைவில் வெற்றி காண்கிறான். 4. சாதனையை தினமும் தவறாமல் குறிப்பிட்ட நேரத்தில் செய்ய வேண்டும் இடைவெளி விட்டு விட்டு செய்யக்கூடாது. இடையில் இடர் பாடுகள், வேலைகள், அசந்தர்ப்பங்கள் போன்றவை எவ்வளவு வந்தாலும் சாதகம் செய்வதை மட்டும் நிறுத்தவே கூடாது. சாதகம் செய்யும் நேரத்தையும் அடிக்கடி மாற்றிக் கொண்டிருக்கக் கூடாது.

11. தினமும் குறைந்தது ஒரு மாலை (108 முறை) ஜபம் செய்யவேண்டும். அதிக ஜபம் செய்வது மிகவும் நல்லது.

12. குரு முகமாக சாதனையைத் தொடங்க வேண்டும். அவர் எப்படி சாதனை புரியவேண்டும் என்று கூறுகிறாரோ அந்த முறையில்தான் காயத்ரி சாதனை செய்யவேண்டும்.

13. காலையில் கிழக்கு முகமாகவும், மாலையில் மேற்கு முகமாகவும் உட்கார்ந்து சாதகம் செய்யவேண்டும்.

14. ஒரே நிலையில் உட்கார்ந்து சாதகம் செய்வது கஷ்டமாக இருந்தால் உட்காரும் நிலையை மாற்றிக் கொள்ளலாம். எனினும் அடிக்கடி மாறிமாறி உட்காரக்கூடாது. எப்படி உட்கார்ந்தாலும் நிமிர்ந்து உட்கார்வது அவசியம்.

15. ஜபம் செய்து கொண்டிருக்கும் போது தவிர்க்க முடியாத காரணத்தால் இடையில் எழுந்து போக நேரிட்டால் மீண்டும் முகம், கை, கால்களை சுத்தம்

செய்துகொண்டு உட்கார வேண்டும். இடையில் ஏற்பட்ட தடங்கலுக்குப் பிராயச்சித்தமாக ஒரு மாலை அதிகமாக ஜபம் செய்யவேண்டும்.

16. ஒரு நாள் ஜபம் செய்வதற்கு முடியாமல் போய்விட்டால் அடுத்தநாள் இரண்டுநாள் ஜபத்தையும் சேர்த்து செய்யவேண்டும்.

17. வீட்டில் தீட்டு, துக்கம் (குழந்தை பிறப்பு, மரணம், மாதர்களின் மாதவிலக்கு போன்றவை) சம்பந்தப் பட்ட நாட்களில் காயத்ரி சாதனை செய்யக் கூடாது. அனுஷ்டானம் செய்யும் காலத்தில் - அதாவது ஒன்றேகால் லட்சம் ஜபம் செய்யத் தொடங்கி யக்ஞும், தீபயக்ஞும் போன்றவை நடந்து வரும் காலத்தில் இப்படி ஒரு தீட்டு அல்லது துக்க சம்பவம் நிகழ்ந்துவிட்டால் சாதனையை துக்க காலம் முடியும் வரை நிறுத்திவைக்க வேண்டும். மீண்டும் சாதனையைத் தொடரும் போது 1000 முறை அதிக ஜபம் செய்யவேண்டும். இந்த 1000 ஜபங்கள் தூய்மைக் கேட்டை விலக்குவதற்காக செய்யும் ஜபசாதனை.

18. நோய்வாய்ப்பட்டுள்ள போது குளிக்க முடியாது. பயண காலங்களில், குளிக்க வசதி இருக்காது. அக்காலங்களில் மனதிற்குள்ளேயே ஜபம் செய்ய வேண்டும். நோயாளிகள் படுத்தநிலையில் இருந்தே ஜபம் செய்யலாம்.

19. சாதகர்கள் சாத்வீக உணவையே உண்ண வேண்டும். தூய்மையானவர்களால் சமைக்கப்பட்ட, எளிதில் செரிக்கக்கூடிய எளிய உணவையே உண்ண வேண்டும். மிளகாய், மசாலா வகைகள், ஏலக்காய், கிராம்பு போன்ற வாசனைப் பொருள்கள் எண்ணெயில் வறுத்த உணவுகள், இனிப்புப் பண்டங்கள், முதல் நாள் செய்த பழைய அல்லது உலர்ந்த உணவுப் பண்டங்கள், மாமிச உணவு, மயக்கம் தரும் மதுவகைகள். தகாத

வழியில் சம்பாதிப்பவர் அளிக்கும் உணவு, விருப்பமில்லாமல் அளிக்கப்படும் உணவு முதலியவற்றை உண்ணக் கூடாது.

20. எப்போதும் பிரம்மச்சரிய விரதத்தைக் கடை பிடிப்பது நல்லது. அது இயலாது என்றால் காயத்ரி அனுஷ்டான காலத்தில் மனக்கட்டுப்பாட்டுடன் இருந்தே தீரவேண்டும்.

21. அனுஷ்டான காலத்தில் கடைபிடிக்க வேண்டிய நெறிகள்: 1. முடி வெட்டிக் கொள்ளக்கூடாது. 2. கட்டிலில் படுத்து உறங்கக் கூடாது. தரையில் அல்லது ஒரு மரப்பலகையில் தான் உறங்க வேண்டும். 3. தோலால் ஆன காலணிகள் அணியக் கூடாது. 4. முடிந்தால் ஒரு நாளைக்கு ஒருவேளை சாப்பிடுவது நல்லது. மாலையில் பழங்களும் பாலும் சாப்பிடலாம். 5. சாதகன் தன் வேலைகளைத் தானே செய்து கொள்ள வேண்டும். கூடியவரையில் தன் உடலையும், ஆடைகளையும் மற்றவர்கள் தொடாமல் பார்த்துக் கொள்ளவேண்டும்.

22. ஜபம் செய்யும்போது ஜபமாலையின் தலை பாகத்தில் உள்ள சுமேரு என்னும் பெரிய மணியைத் தாண்டி, மணிகளை உருட்டக்கூடாது. ஒரு மாலை ஜபம் செய்து முடித்தவுடன், சுமேருவை எடுத்து இரு கண்களிலும் நெற்றியிலும் ஒற்றிக்கொள்ள வேண்டும். பிறகு முதல் மணியில் தொடங்கி அடுத்த மாலை ஜபம் செய்ய வேண்டும். வழிபாட்டிற்கு உரிய பொருள்களை எல்லாம் மற்றவர்களின் கைபடாத இடத்தில் வைத்திருக்க வேண்டும்.

23. உடலையும், ஆடைகளையும் சுத்தமாக வைத்திருப்பதுடன் வழிபாட்டிற்குரிய இடத்தையும் பொருள்களையும் கூட சுத்தமாக வைத்திருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட இடத்தில், ஒரு குறிப்பிட்ட நேரத்தில்,

ஒரு குறிப்பிட்ட அளவு ஜபம் செய்வது மிகவும் பயன்தரவல்லது. எங்கு வேண்டுமானாலும் எந்த நேரத்திலும் ஏனோதானோ என்று அக்கறையின்றி ஜபம் செய்வது எவ்வித நன்மையையும் அளிக்காது.

ஒவ்வொரு மந்திர சாதனைக்கும் தனித்தனி சட்ட திட்டங்களும் நெறிமுறைகளும் உள்ளன. அவற்றின்படி செய்யத் தவறினால் நன்மை வருவதற்கு பதிலாக தீமையே விளையும். எனினும் காயத்ரி சாதனை எந்த நேரத்திலும் எவ்வித தீமையையும் விளைவிக்காது. இருந்தபோதிலும் அனுஷ்டானங்களும், புறஸ்சரணங்களும் செய்யும் போது காயத்ரி சாதனைக்கு உரிய விதிமுறைகளைக் கடை பிடித்தே ஆகவேண்டும். அவ்வாறு கடை பிடிக்காமல் இருந்தால் நன்மைக்கு பதிலாக தீமை விளையவும் கூடும். விதிமுறைகளை ஒழுங்காக கடை பிடிக்காமல் வேத மந்திரங்களை ஓதிய சிலர் பைத்தியமாகியிருக்கிறார்கள்; சிலர் தம் சொத்துக்களை எல்லாம் இழந்து கொடிய வறுமைக்கு ஆளாகி இருக்கிறார்கள். சிலர் உயிரையும் இழந்திருக்கிறார்கள். வேதமந்திரங்களை சரியாக உச்சரிக்காததால் இந்திரனே பல துன்பங்களுக்கு ஆளானான் என்று புராணங்கள் கூறுகின்றன.

மற்ற மந்திரங்களைப்போல் காயத்ரி மந்திரத்தையும் சரியான உச்சரிப்புடனும் அதற்குரிய வேத இசை நயத்துடனும் சொல்வதுதான் சரியான முறை. இருப்பினும் காயத்ரி சாதனையில் எந்த குறைபாடுகள் இருந்தாலும் அவற்றால் எவ்வித தீமையும் விளையாது. இது காயத்ரி மந்திரத்திற்கு மட்டும் உள்ள தனிச்சிறப்பு. சாதகனின் பக்தி ஈடுபாட்டிற்கு உகந்த வகையில் அவனுக்கு நன்மைகளே விளையும். சாதகன் ஒரு குழந்தையைப் போன்றவன். காயத்ரி மாதா அவனை நன்றாக அறிந்துள்ள, பாசம் மிகுந்த தாய். அதானல் காயத்ரி மந்திரத்தால் நன்மைகள்

மட்டும்தான் கிடைக்கும். காயத்ரி மாதா உலகில் வாழும் தாய்களுக்கெல்லாம் மேலான தாயல்லவா?

கீதையில் கண்ணன், "ஒரு நல்ல காரியத்தை செய்யத் தொடங்கினால் அது பாதகம் செய்யாது. நல்ல எண்ணத்தோடு செய்யும் காரியங்கள் நன்மையே செய்யும். ஒருவர் செய்யும் மிகச் சிறிய புண்ணிய காரியமும் அவரை பெரிய ஆபத்திலிருந்து காப்பாற்றும்" என்று கூறியுள்ளார்.

ஒருவன் காயத்ரி சாதனை செய்யத் தொடங்கி விட்டால் அவன் மனதை அந்த சாதனை மிகவும் கவர்ந்து விடுகிறது. ஏதோ ஒரு தவிர்க்க முடியாத காரணத்தால் அவன் அந்த சாதனையைச் செய்யமுடியாமல் நிறுத்தி விட்டாலும் அவன் மனதில் "மீண்டும் சாதனையைத் தொடங்க வேண்டும்" என்ற எண்ணம் எழுந்து கொண்டே இருக்கும். அடிக்கடி அவன் மனதில் இந்த எண்ணம் எழுவதால் அவன் மீண்டும் காயத்ரி சாதனையைத் தொடங்கி விடுகிறான். புதிய ஆர்வத்துடனும் மன எழுச்சியுடனும் அவன் செய்யும் சாதனை விரைவிலேயே அவன் விரும்பிய பயனையும் அளிக்கிறது.

## காயத்ரி சாதனை வேறுபாடுகளைக் கடந்தது

கடவுள் படைப்பில் எல்லோரும் சமம். சூரியன், சந்திரன் முதலான படைக்கப்பட்ட பொருள்கள் யாவும் யாவருக்கும் சொந்தம். காயத்ரி மந்திரம் கடவுள் தன்னை வெளிப்படுத்திக் கொண்ட ஒரு நிலை. அது பிரம்மா மூலம் வேதங்களுக்கு வந்து நான்கு வேதங்களின் வாயிலாக மக்களுக்கு அளிக்கப்பட்டது. இது எல்லா மக்களின் நன்மைக்காக அமைந்த கடவுளின் ஒரு புற வடிவமே. ஆதலால் இதை எல்லா ஜாதி சமயத்தினரும் ஆண்களும் பெண்களும் சொல்லலாம். உயர்ந்த ஜாதி, தாழ்ந்த ஜாதி,

ஆண் உயர்ந்தவன், பெண் தாழ்ந்தவள் என்ற வேறுபாடுகள் யாவும் இடைக்காலத்தில் வந்தவை. சூத்திரர் என்று சிலரையும் பெண்களையும் தாழ்த்தி அடிமைகளாக ஆக்கிவிட்டனர். அவர்களுக்குரிய உரிமைகளைப் பறித்து விட்டனர். இது அறிவு வளர்ந்த காலம். எல்லோருக்கும் சம உரிமை உள்ள காலம். எனவே உலகில் உள்ள ஆண், பெண் அனைவரும் காயத்ரி மந்திரம் சொல்ல உரிமை உண்டு. அதனால் யாவரும் காயத்ரி சாதனை புரியலாம்.



# 15. காயத்ரி அனுஷ்டானம்

## அளவிட முடியாத ஆன்மீக ஆற்றல்

காலை, நண்பகல், மாலை என்னும் சந்தியா காலங்களில் காயத்ரி வழிபாடு செய்ய வேண்டும் என்று வேதநூல்கள் கூறுகின்றன. எனினும் எவ்வளவு அதிகம் ஜபம் செய்கிறோமோ அந்த அளவுக்கு அதிக நன்மைகள் விளையும். சில குறிப்பிட்ட நோக்கங்கள் நிறைவேற, மிக அதிகமான ஆன்மீக ஆற்றல் தேவைப்படும். அவ்வாறு அதிக ஆற்றலைப் பெறவேண்டி பெரிய அளவில் காயத்ரி ஜபசாதனை புரிவதே அனுஷ்டானம். சமூகத்தையே பாதிக்கும் கொள்ளை நோய் போன்ற பெருந்துன்பங்களில் இருந்து ஒரு பகுதி மக்களைக் காத்தல், ஒரு பெரிய காரியத்தை வெற்றிகரமாக செய்து முடித்தல் போன்ற தனிச்சிறப்பு வாய்ந்த பொதுத் தேவைகளைப் பூர்த்தி செய்ய பலரும் சேர்ந்து செய்யும் கூட்டு ஜபசாதனை அனுஷ்டானம் எனப்படும்.

மனிதமுயற்சி தோல்வி அடையும் போது, வரும்

நெருக்கடியை தவிர்க்க முடிவதில்லை; தோல்வியால் மனம் தளர்ந்துவிடுகிறது. எதிர்காலம் எப்படி இருக்குமோ என்ற அச்சம் சூழ்ந்து கொள்கிறது. அந்த மிகக்கொடிய துன்பநிலையில் அறிவுகூட சரியாக வேலை செய்வதில்லை. அப்போதுள்ள ஒரே நம்பிக்கை - ஒரே பலம், கடவுளின் திருநாமமே. கஜேந்திர மோட்சம், திரௌபதி துகில் உரிதல், பிரகலாதன் வாழ்க்கை ஆகியவை இந்த உண்மைக்கு சிறந்த எடுத்துக்காட்டுகளாக உள்ளன. மனிதமுயற்சி முற்றிலும் தோல்வி அடைந்த போது பரம்பொருள் நாமம் ஒன்றை மட்டுமே உறுதியாகப் பற்றினால் துன்ப இருள் விலகி வாழ்வில் விடிவெள்ளி முளைக்கத் தொடங்குகிறது. புதிய சூர்யோதயம் நேரான பாதையைக் காண்பித்து நல்வழி காட்டுகிறது. இத்தகைய நெருக்கடியான சந்தர்ப்பத்தில் சாதகனின் இதயத்திலிருந்து வெளிப்படும் அபயக்குரலும் அந்த குரலுக்கு செவிசாய்த்த இறைவனின் அனுக்ரகமும் இணைந்த ஒன்றே அனுஷ்டானம் ஆகும்.

1. உலக நெருக்கடிகள், 2. மன உளைச்சல்கள், 3. அமைதியற்ற நிலை இவற்றிலிருந்து மனித முயற்சிக்கு அப்பாற்பட்ட நிலையில் விடுதலை அளித்து அமைதி காண உதவுவதே காயத்ரி அனுஷ்டானம். அப்படி என்றால் காயத்ரி மாதா ஒரு தங்கக்குடம் நிறைய பொன் நாணயங்களைப் போட்டு உங்களிடம் கொண்டுவந்து கொடுப்பாள் என்று நினைக்கிறீர்களா? நிச்சயமாகக் கொடுக்க மாட்டாள். வேறு எந்த வகையில் காயத்ரி சாதனை துன்பத்தைப் போக்குகிறது? காயத்ரி சாதனையால் வெளிப்படும் தெய்வீக ஆற்றல் மனித மனங்களின் அடிப்படைத் தன்மைகளையே மாற்றி விடுகிறது. மனமாற்றம் ஏற்பட்ட மாத்திரத்தில் துன்பத்தைப் போக்குவதற்கு மிகவும் பொருத்தமான வழி புலனாகிறது. அந்த வழியில் சென்று செயல்படுவதற்கு

வேண்டிய ஞானம், தூரதிருஷ்டி, திறமை போன்ற எல்லா சாதனங்களையும் சாதகன் கைவரப் பெறுகிறான். அவன் தான் பெற்ற தகுதியையும் திறமையையும் பயன்படுத்தி எல்லா துன்பங்களையும் தீர்த்துக் கொள்கிறான். வேறுசிலரின் வாழ்க்கை குழப்பமும், துன்பமும் நிறைந்ததாக உள்ளது. முரண்பட்ட எண்ணங்கள், வேண்டாத ஆசைகள், வரட்டுப் பிடிவாதம் போன்றவைகள் அவர்களின் மனதைக் குழப்பி விடுகின்றன. அதனால் அவர்கள் தேவையற்ற துன்பத்திற்கு ஆளாகிறார்கள். காயத்ரி சாதனை செய்யத் தொடங்கிய சிறிது காலத்திலேயே அவர்கள் அர்த்தமற்ற ஆசைகளும், வேண்டாத பிரச்சினைகளுமே தங்கள் மனதைப் பிடித்து உலுக்கிக் கொண்டிருந்தன என்பதை உணரத் தொடங்கி விடுகிறார்கள். அவர்களுக்கு மனத்தெளிவு ஏற்படுகிறது. அவசியமற்ற சிக்கல்களில் மாட்டிக்கொண்டு அவஸ்தைப் படும் நிலை மாறி, அவர்கள் வாழ்க்கை அமைதியும், மகிழ்ச்சியும் நிறைந்ததாக அமைகிறது.

அனுஷ்டானம் செய்வதால் இத்தகைய பெரிய மாற்றங்கள் மிகக் குறுகிய காலத்திலேயே ஏற்படுகின்றன. 1,25,000 காயத்ரி மந்திரஜபம் செய்வதே அனுஷ்டானம். இந்த அனுஷ்டானத்தை குறிப்பிட்ட முறைப்படி காலவரைக்குள் செய்து முடிக்க வேண்டும்.

## அனுஷ்டானம் செய்வதற்கு உரிய வரைமுறைகள்

அனுஷ்டானம் தொடங்கிய நாள் முதல் முடியும் நாள் /வரை காலையில் வழிபாட்டைத் தொடங்கும் முன்னர் காயத்ரி மாதாவைப் பணிவுடன் வணங்கி அழைக்க வேண்டும். அன்றைய வழிபாட்டை முடிக்கும் போதும் காயத்ரி மாதாவை வணங்கி வழியனுப்ப வேண்டும். அம்மையை வரவேற்பதற்கும் வழியனுப்புவதற்கும் தெய்வீகப் பாடல்களைப் பாடவேண்டும். அந்தப்பாடல்கள்

சமஸ்கிருத மொழியிலும் இருக்கலாம்; தமிழ் முதலான பிற மொழிகளிலும் இருக்கலாம். அந்தப் பாடல்களைப் பாடும் போது பக்தர்கள் "தேவி நம் அழைப்பை ஏற்று வந்துள்ளாள்; நம் வேண்டுகோளை ஏற்று பிரிந்து செல்கிறாள்" என்று உறுதியாக நம்ப வேண்டும்.

அனுஷ்டானத்தில் தர்ப்பணம், யக்ஞம் இரண்டும் அவசியம் என்று புனித நூல்கள் கூறுகின்றன. தாந்திரீக காயத்ரி அனுஷ்டானம் செய்பவர்கள் மொத்த ஜபத்தில் பத்தில் ஒரு பங்கு விண்ணவர்களுக்கு என்று செய்ய வேண்டும். (இதில் கடவுள்கள், சித்தபுருஷர்கள், சூட்சும சரீரத்தில் வாழும் ரிஷிகள் ஆகியோர் அடங்குவர்). அப்போது உணவு தானியங்கள், உணவுப் பொருள்கள் போன்றவற்றை விண்ணவர்களுக்கு அர்ப்பணம் செய்து புனித ஹோமத் தீயில் போடவேண்டும். இதற்கு தர்ப்பணம் என்று பெயர் தர்ப்பணம் செய்வதில் பத்தில் ஒரு பங்கு உணவுப் பண்டங்களை பிராமணர்களுக்கு உணவாக அளிக்க வேண்டும். பொதுவாக எல்லோரும் செய்யும் அனுஷ்டானம். வேத யோக அனுஷ்டானம். இந்த அனுஷ்டானத்திற்கு தர்ப்பணம் தேவையில்லை. அனுஷ்டான முடிவில் 108 ஆகுதிகள் புனிதத் தீயில் போடவேண்டும். ஆகுதிகள் 108-க்கும் அதிகமாகலாமே தவிர குறையக்கூடாது. அதே போல் குறைந்தது மூன்று பிராமணர்களுக்காவது உணவு வழங்கவேண்டும். அவர்களுக்கு தட்சிணை அவரவர் விருப்பம் போல் கொடுக்கலாம்.

அனுஷ்டானத்தில் நிராகர வழிபாடு என்று ஒரு முறை உள்ளது. அதற்கு சக்திபீடம் ஒன்று அமைத்து அதன் மீது பகவதி காயத்ரியை மானசீகமாக பிரதிஷ்டை செய்ய வேண்டும். அன்னை பீடத்தையும் மலர்களால் அலங்கரிக்க வேண்டும். இதைத்தவிர சாகர வழிபாடு

என்று மற்றொரு முறையும் உள்ளது. அந்த முறையில் பகவதி தேவியின் படத்தையோ உருவச் சிலையையோ வைத்து அதை மலர்களால் அலங்கரிக்க வேண்டும். (பீடத்தின் மேல் விளக்கேற்றி வைத்து விளக்கின் தீபத்தையே பகவதிதேவியாகக் கொண்டும் வழிபடலாம்) அன்னையை வழியனுப்பும் நிகழ்ச்சியில் படம் அல்லது சிலையை படுக்கவைத்து அன்னையைத் தூங்கச் செய்துவிட்டு, பீடத்திற்கும் அன்னையின் உருவத்திற்கும் சாத்தியிருந்த மலர்களையெல்லாம் கொண்டுபோய் ஆற்றிலோ, குளத்திலோ அல்லது புனிதமான ஒரு இடத்திலோ விட்டுவிட வேண்டும். விளக்கின் தீபத்தை நிறைவுசெய்து எரிந்து கொண்டிருந்த திரியையும் ஆற்றில் விட வேண்டும். ஒரு நாள் எரிந்து அணைந்த திரியை அடுத்த நாள் உபயோகிக்கக் கூடாது.

காயத்ரி வழிபாட்டிற்கு முக்கியமாக ஐந்து மங்கலப் பொருள்கள் தேவை. 1. ஊதுபத்தி, சாம்பிராணி (நறுமணப் பொருள்), 2. விளக்கேற்றி வைத்தல், (தீபம்), 3. உணவு முதலியவற்றை வைத்து படைத்தல் (நைவேத்தியம்), 4. சந்தனம் பூசுதல் (காப்பிடுதல்), 5. அட்சதையை நாற்புறமும் போடுதல். தீபத்தையே காயத்ரிதேவியாக பிரதிஷ்டை செய்தால் ஒரு கெண்டியில் தண்ணீர் வைக்க வேண்டும்.

## வழிபடும் முறை

காலையில் தரையை சுத்தம் செய்து அதன்மேல் ஒரு விரிப்பைப் போட்டு விரிப்பின்மேல் சாதகன் கிழக்கு முகமாகப் பார்த்து உட்காரவேண்டும். அருகில் தீர்த்த பாத்திரத்தில் தண்ணீர் வைத்துக் கொள்ள வேண்டும். தீபத்தை ஏற்றிவைத்து ஊதுபத்தி கொளுத்தி வைக்க வேண்டும். ஜபம் முடியும்வரை ஊதுபத்தி புகைந்து கொண்டிருக்க வேண்டும். இடையில் விளக்கு அணைந்து

விட்டால் புதிய திரிபோட்டு ஏற்றவேண்டும்.

காயத்ரி மாதாவை வீட்டுக்கு அழைத்து பீடத்தில் பிரதிஷ்டை செய்தவுடன் ஜபம் செய்யத் தொடங்க வேண்டும். ஜபகாலத்தில் ஈஸ்வர பக்தியில் மனம் அசையா திருக்க வேண்டும். இடையில் வேறு எண்ணங்கள் வந்தால் அவைகளைக் கட்டுபடுத்தி, மனதை தெய்வ சிந்தனையில் ஒருமுகப்படுத்த வேண்டும் படிப்படியாக மனம் அலைவது குறைந்து கடைசியில் தெய்வ சிந்தனையில் நிலைத்து நிற்கப் பழகிவிடும். இவையாவும் தினசரி செய்யவேண்டிய கிரியைகள்.

1,25,000 மந்திர ஜபங்களை 40 நாட்களில் செய்து முடிக்கவேண்டும் என்பது தொன்று தொட்டு இருந்து வரும் மரபு. 40 நாட்களில் செய்ய முடியாதவர்கள் எப்படியும் இரண்டும் மாதங்களில் செய்து முடித்துவிட வேண்டும். ஒவ்வொரு நாளும் செய்யும் ஜப அளவு சமமாக இருக்க வேண்டும். 40 நாட்களில் முடிப்பவர்கள் ஒரு நாளைக்கு 3125 ஜபம் செய்யவேண்டும். (அதாவது 29 மாலைகள்). 2 மாதங்களில் முடிப்பவர்கள் ஒரு நாளைக்கு 20 மாலைகள் ஜபம் செய்ய வேண்டும்.

**காயத்ரி தேவியை வணங்கி அழைக்கும் மந்திரம்**

**ॐ आयातु वरदे देवि त्र्यक्षरे ब्रह्मवादिनी।**
**गायत्रिच्छन्दसां माता ब्रह्मयोनिर्नमोस्तुते।।**

**ஆயாது வரதே தேவி த்ரயக்ஷரே ப்ரஹ்மவாதினீ**
**காயத்ரிச்சந்தஸாம் மாதா ப்ரஹ்மயோனிர் நமோஸ்துதே**

காயத்ரி அன்னையை பணிவுடன் வழியனுப்பி வைக்கும் மந்திரம்:

**ॐ उत्तमे शिखरे देवि भूम्यां पर्वतमूर्धनि।**
**ब्रह्मणेभ्योह्यनुज्ञातं गच्छ देवि यथासुखम्॥**

**உத்தமே ஷிகரே தேவி பூப்யாம் பர்வதமூர்த்தனி**

ப்ரஹ்மணேப்யோ ஹ்யனுக்ஜ்ஞாதம் கச்ச தேவி யதாஸுகம்

அனுஷ்டானத்தின் முடிவில் யக்ஞம் வளர்க்க வேண்டும். முடிந்த அளவு சுவர்ண தானம் (பணம், நன்கொடை போன்றவை) செய்யவேண்டும். அதோடு பிராமணர்களுக்கு உணவு அளிக்கவேண்டும் (பிரம்ம போஜனம்). இந்த தானமும், போஜனமும் உண்மையான பக்தியுள்ளவர்களுக்கு மட்டுமே அளிக்கவேண்டும். தகுதியற்றவர்களுக்கு தானம் கொடுக்கவே கூடாது.

## நவதுர்கா காயத்ரி சாதனை

உண்மையில் பர்வகாலங்கள் இரண்டுதான். அவை: (1) கோடைகாலம், (2) குளிர்காலம். கோடை முடிந்து குளிர்காலம் தொடங்கும் காலத்திற்கும், குளிர்காலம் முடிந்து கோடைகாலம் தொடங்கும் காலத்திற்கும் நவதுர்கா என்று பெயர். இந்த இரண்டு காலங்களும் ஆண்டின் சந்தியா காலங்கள். "கோடை குளிர்கால சந்தி", "குளிர்கால கோடை சந்தி" ஆகிய சந்தியாக காலங்கள் ஒவ்வொன்றும் 9 நாட்கள். இந்த 9 நாட்களுக்கு நவதுர்கா என்று பெயர். இந்த நவதுர்கா வழிபாடு வடநாட்டில் சித்திரை மாதத்தில் ஸ்ரீராம நவமியை ஒட்டியும் ஆஸ்வின் மாதத்தில்(துலாயன மாதத்தில்) விஜயதசமியை ஒட்டியும் நடைபெறுகிறது. தமிழகத்தில் பங்குனி மாதம் சுக்கில பட்சம் பிரதமை திதி முதல் நவமி திதிவரை உள்ள 9 நாட்களும் நவராத்திரி கொண்டாடப்படுகிறது. பத்தாவது நாள் விஜயதசமி இவ்விழாவின் நிறைவு தினமாகக் கொண்டாடப்படுகிறது. ஆண்டின் இந்த இரண்டு சந்தியா காலங்களும் காயத்ரி சாதனைக்கு மிகவும் பொருத்தமான காலங்கள். ஒவ்வொரு சந்தியா காலத்திலும் (9 நாட்களில்) ஒரு பொழுது விரதம்

இருந்து 24,000 காயத்ரி மந்திர ஜபம் செய்யவேண்டும். இந்த சிறிய காயத்ரி சாதனை ஒரு பெரிய அனுஷ்டானம் செய்ததற்கு சமமாகும்.

இந்த நவராத்திரி தினங்களில் ஒருவேளை சோறும் மற்ற வேளைகளில் பால், பழம் போன்றவைகள் சாப்பிட வேண்டும். சாதகர்கள் தினமும் காலையில் 3 மணிக்கே எழுந்து குளித்து பிரம்ம முகூர்த்தத்தில் (காலை 4.30 முதல் 6.00 மணி வரை) ஜபம் செய்யத் தொடங்கி விட வேண்டும். ஒரு நாளைக்கு 25 மாலை வீதம் 9 நாட்களும் ஜபம் செய்யவேண்டும். இதை நான்கு மணி நேரத்தில் முடித்துவிடலாம். ஒரே முறையில் 25 மாலை ஜபிக்க முடியாவிட்டால் பெரும் பகுதியை காலையில் முடித்து விட்டு மீதியை மாலையில் செய்து முடிக்கலாம். 9-வது நாள் 25 மாலை முடித்தவுடன் யக்ஞம் வளர்ந்து 108 ஜபம் சொல்லி ஆகுதிகளை புனிதத்தீயில் போடவேண்டும். பிறகு பண நன்கொடை, பிராமண போஜனம் போன்ற காரியங்களை முடிக்கவேண்டும்.

ஒவ்வொரு சாதகனும் இந்த சிறிய ஒன்பது நாள் அனுஷ்டானத்தை வருடத்திற்கு இரண்டு முறை தானே செய்யவேண்டும். தன்னால் செய்ய முடியவில்லை யென்றால், ஒரு தகுதி வாய்ந்த பிராமணரைக் கொண்டும் செய்யலாம். இத்தகைய சிறிய அனுஷ்டானங்களை இரண்டு நவராத்திரி காலங்களில் செய்வதுடன் சந்ர்ப்பம் கிடைக்கும்போது வேறு சில காலங்களிலும் செய்யலாம். நவதுர்கா அனுஷ்டானங்களை அதிகரிக்க அதிகரிக்க, துன்பங்கள் குறையும்; ஆசைகள் நிறை வேறும்; தவவலிமை பெருகும்.

பஞ்சாட்சரி மந்திரம்

கல்வி அறிவில்லாத பெண்களாலும் குழந்தைகளாலும் காயத்ரி மந்திரத்தை முழுமையாக சொல்ல முடியாது. அவர்கள் பிரணவத்துடன் வியாஹ்ருதிகள் மூன்றையும் சேர்த்து "ஓம் பூர் புவ ஸ்வஹ" என்று கூறிவந்தால் போதுமானது. கல்வி வளர்ச்சி குறைந்தவர்களுக்கு இது மிகவும் பயன் அளிக்கவல்லது. இதில் ஐந்து உயிர் எழுத்துக்கள் வருவதால் இதற்கு "பஞ்சாட்சரி மந்திரம்" என்று பெயர்.



## 16. பெண்களுக்கு உகந்த தனிப்பட்ட சாதனைகள்

நேர் மின்னூட்டு, எதிர் மின்னூட்டு இரண்டும் சேரும்போதுதான் மின்னோட்டம் நிகழ்கிறது. ஒரு புரோட்டானுடன் ஒரு எலக்ட்ரான் இணையவில்லையென்றால் அணுவே இல்லை. அணுச்சேர்க்கை இல்லை என்றால் உயிரோட்டமே இல்லை. இவற்றைப் போல் ஆண் தன்மை, பெண் தன்மை இரண்டில் பெண்தன்மை மட்டும் இல்லையென்றால் மரம், செடி கொடிகளில் கூட உயிரின உற்பத்தியே இல்லை. எனவே சமுதாய வளர்ச்சிக்கு ஆண்கள் எவ்வளவு முக்கியமோ, பெண்களும் அவ்வளவு முக்கியம்; சமூகத்தில் ஆண்களுக்கு எவ்வளவு உரிமை உண்டோ, அவ்வளவு உரிமை பெண்களுக்கும் உண்டு; குறிப்பாக வேதமாதா காயத்ரியை வழிபட ஆண்களைப் போல் பெண்களும் உரிமை உள்ளவர்களே. காயத்ரி மந்திரத்தை சொல்லும்

உரிமை பெண்களுக்கு கிடையாது என்று சிலர் கூறுவது தவறு. பழங்கால பெண் ரிஷிகள் பலர் வேதமந்திரங்களையே உள்ளுணர்வில் கண்டு வெளியிட்டவர்கள். அப்படியிருக்க பெண்கள் காயத்ரி சாதனை செய்யக்கூடாது என்று கூற ஆண்களுக்கு என்ன உரிமை இருக்கிறது?

குடும்பப் பெண்களும் காயத்ரி வழிபாடு செய்யலாம். அவர்களுக்கு வீட்டு வேலை, குழந்தைகளை கவனித்துக் கொள்ளுதல் போன்ற பல வேலைகள் இருப்பதால் அவர்கள் காயத்ரி சாதனையை முழுமையாக செய்யமுடிவதில்லை. எனவே அவர்கள் பஞ்சாட்சரி மந்திரம் (ஓம் பூர் புவ ஸ்வஹ) சொன்னாலே போதுமானது. மாதவிலக்குக் காலத்தில் மந்திரம் சொல்வதை நிறுத்தி வைக்கவேண்டும். அனுஷ்டானம் செய்யும் காலத்தில் மாதவிலக்கு வந்துவிட்டால் அனுஷ்டானத்தை நிறுத்திவைத்து விலக்கு காலம் முடிந்த பிறகு மீண்டும் தொடர்ந்து செய்யலாம்.

குழந்தைகள் இல்லாத பெண்கள், கன்னிப் பெண்கள், விதவைகள், குழந்தைகள் வளர்ந்த பின் குடும்பப் பொறுப்பு குறைந்த பெண்கள் ஆகியோர் ஆண்களைப் போலவே காயத்ரி சாதனை செய்யலாம். காயத்ரி அனுஷ்டானம், அல்லது தனிப்பட்ட சாதனை செய்யும் போது பிரம்மச்சரியம் கடைபிடிக்க வேண்டும்.

### தன்னை அறிவதற்கான சாதனை (விதவைகளுக்கு)

குறிப்பாக விதவைகள் தன்னடக்கம், புலக் கட்டுப்பாடு, உண்மை ஞானம் பெறுதல் போன்றவற்றைப் பெற காயத்ரி சாதனை செய்யவேண்டும். அவர்கள் சாதனை தொடங்கிய அன்றே மனதில் அமைதியும் தெளிவும் தோன்ற ஆரம்பிப்பதை உணர்வார்கள்.

நாளடைவில் அவர்கள் மனதில் ஏற்படும் சலனம் அகன்று, ஆசைகள், சுவைகள், செயல்கள், உணர்ச்சிகள் ஆகிய அனைத்தும் தூய்மை அடைந்து புனிதமாகிவிடும். அவர்களிடம் சத்வ குணம் தோன்றி விடுவதால், அவர்கள் மனதில் தவமியற்றியும், சமயநெறி வழுவாது வாழ்ந்தும் கடவுளைக் காணவேண்டும் என்ற ஆர்வம் தோன்றும். காலப்போக்கில் அந்த பெண்மணி ஒரு தபஸ்வினி யாகவோ ப்ரம்மவாதினியாகவோ மாறி விடுவாள். அப்போது அவள் காயத்ரிதேவி வடிவத்தில் கடவுளைக் காண்பாள். அந்த நிலையில் அவளுக்கு குடும்ப வாழ்க்கை ஒரு பொருட்டாகவே தெரியாது.

சாதனை செய்யும் பெண்கள் காலையில் குளிப்பது அவசியம். குளிக்கும் நீர் அதிக சூடாகவோ, அதிக குளிர்ச்சியாகவோ இருக்கக்கூடாது. பக்கத்தில் ஒரு கெண்டியில் தண்ணீர் வைத்துக் கொண்டு ஒரு விரிப்பின்மேல் உட்கார்ந்து சாதனை செய்ய வேண்டும். விரிப்பு மெத்தென்றிருப்பது நலம். ஜபம் செய்ய மணிமாலை அல்லது துளசிமணி மாலையைப் பயன்படுத்தலாம். காயத்ரி மாதாவை புன்முறுவல் பூத்த ஒரு நடுத்தர வயதுடைய பெண்மணியாக மனக்கண்ணில் கண்டு தியானம் செய்யவேண்டும். தெய்வத்தை நான்கு கைகள் உடையதாகவும், நான்கு கரங்களிலும் ஜபமாலை, கமண்டலம், புத்தகம், தாமரை மலர் முதலியவற்றை வைத்திருப்பது போலவும், அன்னை வெள்ளைப் புடவை உடுத்தி காளை மாட்டின்மேல் உட்கார்ந்திருப்பது போலவும், கற்பனைக் காட்சியில் காணவேண்டும்.

இந்தத் தியானம் மனதைக் கட்டுப்படுத்தவும் நேர்மையை வளர்த்துக் கொள்ளவும் மிகவும் பயனுள்ள தியான முறை, ஜபம் செய்யும் போது தொண்டை யிலிருந்து ஒலி வரவேண்டும்; உதடுகள் அசைய

வேண்டும்; ஆனால் என்ன சொல்கிறோம் என்பதை பக்கத்தில் உள்ளவர்கள் கூட புரிந்த கொள்ள முடியாத அளவுக்கு மிகவும் மெதுவாக ஜபிக்கவேண்டும். தினமும் காலை மாலை வேளைகளில் தவறாது ஜபம் செய்யவேண்டும். இவற்றோடு இடையில் நேரம் கிடைக்கும் போதெல்லாம் உட்கார்ந்து ஜபம் செய்தால் பலன் விரைவில் கிடைக்கும். வாழ்க்கையை தவநெறியில் அமைத்துக் கொண்டால் நல்லது.

## கன்னிப் பெண்களுக்கு உரிய சாதனை

கன்னிப்பெண்கள் அமைதியும் மகிழ்ச்சியும் நிறைந்த மணவாழ்க்கை அமைய பகவதிதேவியை வழிபட வேண்டும். நாரத முனிவர் கூறியபடி பார்வதி தேவி தவம் செய்து, தான் விரும்பிய கணவனை அடைந்தார். சீதாதேவி கௌரிபூஜை செய்து தான் விரும்பிய கணவனை அடைந்தார். நவராத்திரியின் போது கன்னிப் பெண்கள் காயத்ரி சாதனை செய்தால் அவர்களுக்கு எல்லா நன்மைகளும் உண்டாகும்.

ஒரு மேடை அல்லது பலகையின் மேல் காயத்ரி படத்தையும் அதன் அருகில் சந்தனம், ஊதுபத்தி, விளக்கு, அட்சதை (அரிசி), நவதானியங்கள், மலர்கள், இனிப்புப் பண்டங்கள் முதலியவற்றையும் வைக்கவேண்டும். எண்ணெய் தீபம் அல்லது கற்பூர தீபத்தை தேவிக்கு சுற்றிக் காண்பித்து தீபாராதனை செய்யவேண்டும். தேவியின் நெற்றியில் சந்தனப் பொட்டு வைக்கவேண்டும். உட்கார்ந்து கண்களை மூடிக்கொண்டு மனதிற்குள் காயத்ரி ஜபம் சொல்ல வேண்டும். குறைந்தது 24 முறை காயத்ரி மந்திரம் சொல்ல வேண்டும். இந்த சாதனை நல்ல கணவனையும், வளமான வாழ்க்கையையும் அடைய உதவும். (காயத்ரி மாதாவின் படம் இந்த நூலை வெளியிடுபவர்கள், விற்பவர்கள் ஆகியோரிடம் கிடைக்கும். ஞாயிற்றுக் கிழமைகளில் காயத்ரி

ஹோமம் நடைபெறும் இடங்களிலும் கிடைக்கும்).

## திருமணமான பெண்களுக்குரிய சாதனை

கணவன்மார்கள், தங்களுடைய தீய எண்ணங்கள், கெட்ட நடத்தை முதலியவற்றைக் கைவிட்டு குடும்பத்தில் பற்று கொள்ளச் செய்யவும் அவர்கள் இன்பமாகவும், எல்லா வளங்களுடனும் நீண்டகாலம் வாழவேண்டும் என்பதற்காகவும், திருமணமான பெண்கள் காயத்ரி வழிபாடு செய்யலாம். மேலும் அவர்கள் தங்களுக்கோ அல்லது தங்கள் குடும்பத்தில் உள்ளவர்களுக்கோ, உடல்நலம் பாதிக்கப் பட்டால், வந்த நோய் நீங்கி நோயுற்றவர் நலம்பெற வேண்டும் என்பதற்காகவும் காயத்ரிதேவியை வழிபடலாம். குடும்பத்தில் ஏற்படும் பணக்கஷ்டம், தகராறுகள் போன்றவை நீங்கி நல்ல வாழ்வு அமையவும் தங்களுடைய மாங்கல்யபலம் பெருகவும் கூட இந்த வழிபாட்டைச் செய்யலாம்

சாதனையை காலை வேளையில் நண்பகலுக்கு முன்னர் செய்து முடிக்கவேண்டும். சாதனை முடியும்வரை உணவு உண்ணக்கூடாது; தண்ணீர் அருந்தலாம். சாதகி உடல், உடை, மனம் மூன்றையும் தூய்மை செய்துகொண்டு கிழக்கு முகமாகப் பார்த்து உட்காரவேண்டும். சந்தனத்தையும், குங்குமப் பூவையும் குழைத்து நெற்றியிலும், தொண்டைப் பகுதியிலும், மார்பிலும் பூசிக் கொள்ளவேண்டும். மஞ்சள் நிற மலர்கள், மஞ்சள் கலந்த அட்சதை, குங்குமப்பூ கலந்த சந்தனக் குழம்பு, லட்டு ஆகியவற்றை நிவேதனமாக வைத்து வழிபடவேண்டும். மங்கல ஆரத்தி (மஞ்சள், வெற்றிலை போட்ட திரவம்)யில் கற்பூர தீபம் காட்ட வேண்டும். வாசனைக்கு சந்தன ஊதுபத்தியைக் கொளுத்தி வைக்க வேண்டும். கண்களை மூடிக்கொண்டு காயத்ரி மாதா மஞ்சள் நிற ஆடை உடுத்தி, மஞ்சள் நிறப் புலிவாகனத்தின் மேல் மஞ்சள் நிற வானவெளியில்

தோன்றியுள்ளதுபோல் மனதில் பாவனை செய்து கொண்டு அன்னையை தியானிக்க வேண்டும். எல்லாவற்றிற்கும் மஞ்சள் நிறம் முக்கியம் என்வபதை மறந்த விடக் கூடாது. இந்த நிலையில் அமர்ந்து மனஒருமைப் பாட்டுடன் 24 முறை காயத்ரி ஜபம் செய்யவேண்டும். ஒவ்வொரு நாளிலும் ஒய்வு கிடைக்கும் போதெல்லாம் காயத்ரிதேவியை மனக்கண்ணில் காண முயற்சி செய்யவேண்டும். ஒவ்வொரு பௌர்ணமியன்றும் உணவருந்தாமல் விரதம் இருக்கவேண்டும். ஒவ்வொரு நாள் உணவிலும் ஏதாவது ஒரு மஞ்சள்நிறப் பொருளை சேர்த்துக் கொள்ளவேண்டும். குளிக்கும் போது உடல் முழுவதும் மஞ்சள் தேய்த்து குளிப்பது சிறப்புடையது. இன்பமான குடும்ப வாழ்க்கை அமைய இது சிறந்த சாதனையாகும்.

## குழந்தைச் செல்வத்தை அடைவதற்குரிய சாதனை

சில பெண்களுக்கு குழந்தை பிறப்பதில்லை; சில பெண்களுக்கு அடிக்கடி கருச்சிதைவு ஏற்பட்டு குழந்தைகள் குறை மாதத்திலேயே அழிந்துவிடுகின்றன; சிலருக்கு குழந்தைகள் குறைமாதங்களில் பிறந்து பிறந்தவுடனேயே இறந்துவிடுகின்றன; சிலருக்கு மனவளர்ச்சி குன்றியவர்களாகவோ, அங்கஹீனர்களாவோ குழந்தைகள் பிறந்து அவர்களுக்கு ஆயுள்முழுவதும் ஒரு சுமையாக அமைந்து விடுகின்றனர். சில குழந்தைகள் தீயபோக்கு, தீயோர் நட்பு, கெட்ட நடத்தை போன்ற தகாத வழிகளில் சென்று தாங்களும் துன்புறுகிறார்; தாய் தந்தையர்களுக்கும் வேண்டாத பிரச்சினைகளை உண்டாக்கிவிடுகின்றனர். இவ்வகை சிக்கல்களிலிருந்து விடுபடவும், இப்படிப்பட்ட துன்பங்கள் வராமல் பார்த்துக் கொள்ளவும் காயத்ரி வழிபாடு ஒரு சிறந்த சாதனமாக உள்ளது.

கர்ப்பிணியாக உள்ள தாய்மார்கள் தங்கள் கர்ப்பத்தில் சூரியன் ஒளிமயமாக பிரகாசித்துக் கொண்டிருப்பதாக கற்பனை செய்து தியானித்து வந்தால் பிறக்கும் குழந்தை நல்ல அறிவுள்ள குழந்தையாகப் பிறக்கும்; அது நல்ல பெயரும் புகழும் பெற்று நீண்டகாலம் வாழ்ந்திருக்கும்.

குழந்தை இல்லாத பெண்கள் குளித்து முழுகி ஈரத்துணியுடன் உட்கார்ந்து தியானம் செய்யவேண்டும். அவர்கள் கண்கள் மூடியநிலையில் காயத்ரி மாதாவை சூரியனைப்போல் ஒளிமயமாக தங்கள் கற்பனையில் காணவேண்டும். அந்த காயத்ரி பேரொளி தங்கள் கருவாய் வழியாக தங்கள் கருப்பைக்குள் செல்வது போல் பாவித்து தியானம் செய்யவேண்டும். (குந்தி இந்த முறையில் தியானம் செய்துதான் கர்ணனை ஈன்றெடுத்தாள். இந்த தியானத்தை கன்னிப் பெண்கள் செய்யக்கூடாது.) தியானம் முடிந்தவுடன் வலது உள்ளங்கையில் சிறிதுநீரை எடுத்து "இது சூரியனுக்கு அர்ப்பணம்" என்று மனதிற்குள் சொல்லிக்கொண்டு அதை தரையில் விட்டுவிட வேண்டும். பிறகு சிறிது நீரை உள்ளங்கையில் ஊற்றி கோவிலில் தீர்த்தம் அருந்துவது போல் பருகவேண்டும். இந்த தியானத்தால் மலட்டுத்தன்மையும், கருச்சிதைவும் குழந்தை இறந்து பிறத்தலும், குழந்தை பிறந்தவுடன் இறத்தலும் நீங்கும்.

நோய்வாய்ப்பட்ட, குறும்புத்தனமுள்ள அல்லது தீய எண்ணங்களையும் நண்பர்களையும் வளர்த்துக் கொண்டுள்ள பிள்ளைகளின் தாய்மார்கள் தங்கள் குழந்தைகள் உடல் நலமும், மனநலமும் பெற்று திருந்திவர கீழ்க்கண்டவாறு காயத்ரி உபாசனை செய்யவேண்டும். காயத்ரி மாதா ஒரு அன்னத்தின்மேல் அலங்காரமாக இதழ் விரிந்துள்ள செந்தாமரை மலரின்மேல் உடகார்ந்திருப்பது போலவும், தூக்கிய வலதுகையில் சக்கரமும் இடதுகையில் சங்கும் வைத்திருப்பது போலவும் மனக்கண்ணில் கண்டு

தியானம் செய்யவேண்டும். தியானம் முடிந்தவுடன் சிறிது நீரை சூரியனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டு சிறிது நீரை குழந்தையின் தலையில் தெளிக்க வேண்டும். இந்த தியானம் குழந்தையின் உடலிலும், மனதிலும் அற்புதமான மாற்றங்களை உண்டாக்கி குழந்தையை நலம்பெறச் செய்து நல்வழிப்படுத்தும்.

## தனிப்பட்ட காரணங்களுக்கான சாதனை

வரவிருக்கும் தீமையை வராமல் தடுப்பதற்கும், தொடங்கும் காரியங்களுக்கு தடங்கல் வராமல் இருப்பதற்கும் காயத்ரி சாதனை பெருந்துணை புரியும். உடனடியாக ஒரு காரியம் நிறைவேற வேண்டுமானால் 40 நாள் அனுஷ்டானம் செய்யவேண்டும். அது முடியா விட்டால் 9 நாள் அனுஷ்டானம் செய்யவேண்டும். தன்னால் செய்ய முடியாவிட்டால் உண்மையான பக்தியுள்ள ஆச்சார்யர்களைக் கொண்டு செய்யவேண்டும். அப்போது பிரம்மச்சரியம் காத்து தவ வாழ்க்கை வாழவேண்டும். ஓராண்டு இடைவிடாமல் காயத்ரி உபாசனை செய்தால் எல்லா ஆசைகளும் நிறைவேறும்.



# 17. குடும்ப பாரத்தைத் தாங்கும் பெண்களுக்கு எளிய சாதனை

குடும்பத் தலைவியாக உள்ள பெண்களுக்கு நாள் முழுவதும் ஓயாது வேலை இருந்து கொண்டே இருக்கும். சுத்தம் செய்தல், சிற்றுண்டி, உணவு தயாரித்தல், காலையில் அவசர அவசரமாக குழந்தைகளையும், கணவனையும் வேலைக்கு அனுப்புதல், மாலையில் பள்ளியிலிருந்து குழந்தைகளும் பணியிலிருந்து கணவனும் வந்தவுடன் அவர்களை கவனித்தல் இப்படி ஏதாவது ஒரு வேலை இருந்து கொண்டே இருக்கும். அதிலும் குறிப்பாக காலை, மாலை வேளைகளில் அவர்கள் ஓய்வைப் பற்றி நினைத்துப் பார்க்கக்கூட முடியாது. அவர்கள் பகல் 12.00 மணிக்கும் பிற்பகல் 3.00 மணிக்கும் இடையில் அனுஷ்டானம் செய்யலாம். விடியற்காலையில் குளித்தவுடன் ஒரு மாலை மந்திரஜபம் செய்யலாம்.

அவர் மந்திர ஜபம் செய்துகொண்டே உணவு சமைத்தால், அந்த உணவை அருந்தும் எல்லோருக்கும் அது நன்மை பயக்கும். மாத விலக்கு வரும் காலங்களில் ஜபம் செய்யக்கூடாது. எப்போதும் ஜபம் செய்து கொண்டே வேலைகளை கவனிப்பது மிகுந்த பயனை அளிக்கும். வீட்டினுள் தெய்வீக சூழ்நிலையை உருவாக்கினால் அது வீட்டிலுள்ள ஆன்மீக நெறியில் பற்றுள்ள மற்றவர்களை நன்னெறியில் செல்ல ஊக்குவிக்கும். காலையில் குளித்து முழுகியவுடன் பெரியவர்களை வணங்குதல், காயத்ரி மாதாவை அலங்கரித்து வழிபடுதல் வீட்டின் நிலை கதவுகளில் மஞ்சள் குங்குமம் வைத்தல், தினமும் எண்ணெய் (அல்லது நெய்) விளக்கை சுத்தம் செய்து ஏற்றி வைத்தல், மஞ்சள் தேய்த்துக் குளித்து நெற்றிக்கு குங்குமம் இடுதல் போன்றவை தெய்வீக சூழ்நிலையை

உருவாக்கும். ஐந்து முறை மந்திர ஜபம் செய்து காயத்ரி மாதாவின் காலில் விழுந்து வழிபட வேண்டும்.

மாலையில் ஓய்வாக குழந்தைகளுடன் உள்ள நேரத்தில் அவர்களுக்கு ஆர்வத்தை ஊட்டி பண்பை வளர்க்கக்கூடிய தெய்வீகக் கதைகளைச் சொல்லலாம்; படித்தும் காட்டலாம். யுக நிர்மாண் யோஜனாவில் பிரக்ய புராணத்தை நான்கு பகுதிகளாக அச்சிட்டு வெளியிட்டு உள்ளார்கள். பகவத் கீதையையும், ராமயாணத்தையும் படிப்பதுபோல் இந்த பிரக்யா புராணத்தையும் தினமும் படித்து வருவது நல்லது. ஒரு நாளைக்கு 10 பக்கங்கள் வீதம் படித்துவந்தால் கூட ஒரு சில மாதங்களில் இந்த நான்கு பகுதிகளையும் படித்து முடித்து விடலாம். ஒருமுறை படித்து முடித்துவிட்டால் அதோடு நிறுத்தி விடக் கூடாது. இப்புராணப் பகுதிகளைத் திரும்பத் திரும்பப் படித்துக் கொண்டே இருக்கவேண்டும்.

இக்காலத்தில் மக்களுக்கு வேலைகள் அதிகம். சிலர் நிற்கக்கூட நேரமில்லாமல் வேலை செய்து கொண்டும் ஓடிக்கொண்டும் இருக்கிறார்கள். பக்தி ஈடுபாட்டுடன் வழிபாடு செய்ய நேரம் கிடைப்பதே அரிதாகிவிட்டது. அதனால் பெண்கள் சமையல் அறையிலேயே வழிபாடு செய்யலாம்; சமையலையே வழிபாடாக மாற்றிக் கொள்ளலாம். ரொட்டி, அப்பம், இட்டிலி போன்றவை தயாரித்தால், முதல் ரொட்டி அல்லது இட்லியை 5 பாகங்களாக்கி 5 முறை காயத்ரி மந்திரம் சொல்லி அடுப்பில் உள்ள நெருப்பில் போடவேண்டும். சோறு சமைத்தால் சோறு, பக்குவம் செய்த காய்கறி, குழம்பு முதலியவற்றில் சிறிதளவு எடுத்து எல்லாவற்றையும் கலந்து அவற்றை ஐந்து பாகங்களாக்கி நெருப்பில் இடவேண்டும். இது தெய்வங்களுக்கு யக்ஞம் மூலமாக அர்ப்பணம் செய்வதாகும். குழந்தைகளுக்கு பால் கொடுத்துக் கொண்டிருக்கும் போது சவிதாவை (சூரியனைப் போன்ற

பேரொளிப் பிழம்பை) மனதில் நினைத்து கண்களை மூடிக்கொண்டு தியானம் செய்வதுடன் காயத்ரி மந்திர ஜபமும் செய்துவந்தால் குழந்தை அழகும், அறிவும், ஒழுக்கமும் நிறைந்ததாக வளர்ந்துவரும்.

## தினசரி வாழ்க்கையில் பஞ்சசீலங்கள்

பஞ்சசீலங்கள் என்பவை வாழ்க்கையில் கடைபிடிக்க வேண்டிய ஐந்து புனிதமான கடமைகள். இந்த பஞ்சசீலங்களுடன் கூடிய வாழ்க்கையே ஒரு புனித யாகமாகும்.

### 1. உடல்நலம் பேணும் பஞ்சசீலங்கள்

1. சைவ உணவை (சாத்வீக உணவை) அளவோடு உண்ணுதல், 2. சுத்தமான தண்ணீரை போதுமான அளவு பயன்படுத்தல், 3. திறந்தவெளியில் பிராணாயாமம் செய்தல், 4. சக்திக்கு இயன்ற அளவு உழைத்தல், 5. இரவில் எந்த சிந்தனையும் இன்றி எல்லாவற்றையும் மறந்துவிட்டு கவலையற்று தூங்குதல்.

### 2. மனநலம் பேணும் பஞ்சசீலங்கள்

1. விளையாட்டு வீரனின் மன உணர்வு, 2. எப்பொழுதும் புன்முறுவலுடன் இருத்தல், 3. தன்னடக்கம், 4. உழைப்பின் உயர்வை மனதில் கொண்டு முழுமனதோடு உழைத்தல், 5. வளர்ச்சியில் ஆர்வமும் திருப்தி அடையும் தன்மையும்.

### 3. சமூக பஞ்சசீலங்கள்

1. நேர்மை, 2. பொறுப்புணர்ச்சி, 3. பணிவுடைமை, இன்சொலன் ஆதல், 4. பிறர் சொல்லுக்கு மதிப்பு கொடுத்தல், 5. கூட்டுறவு மனப்பான்மை.

### 4. குடும்ப பஞ்சசீலங்கள்

1. பெரியோருக்கு தொண்டு செய்தல், மற்றவர்களின்

உழைப்பில் பங்கு கொள்ளுதல், எதிலும் கடமை உணர்ச்சி, 2. இளையவர்களிடம் அன்பு கொண்டு ஒற்றுமையாக வாழ்தல், 3. கணவனும் மனைவியும் ஒருவரை ஒருவர் ஆழ்ந்த அன்புடன் நேசித்தல், 4. நேர்மை பண்புகளை உயர்ந்த செல்வமாக மதித்து நடத்தல், 5. குழந்தைகளை அளவோடு பெற்று வளமோடு வாழ்தல்.

## 5. சமயப் பஞ்சசீலங்கள்:

1. அறநூல்கள் கூறும் ஒழுக்கநெறிகளைக் கடைபிடித்தல், 2. தீயநெறிகளையும், நடைமுறைகளையும் எதிர்த்துப் போராடுதல், 3. மற்றவர்களின் துன்பங்களைப் போக்க முழுமனதுடன் பாடுபடுதல், 4. உயர்ந்த குறிக்கோளில் உறுதியாய் இருத்தல், 5. கடமையும் கண்ணியமும்.

## 6. அகில உலக பஞ்சசீலங்கள்

1. ஒற்றுமை, 2. சமத்துவம், 3. கூட்டாட்சி, 4. பொறுமையும், சகிப்புத்தன்மையும், 5. பெருந்தன்மையும் ஈடுபாடும்.

## 7. ஆன்மீகப் பஞ்சசீலங்கள்

1. வினைப்பயனை அளிக்கும் தெய்வீகக்கொள்கையில் (கர்மா கொள்கையில்) நம்பிக்கை, 2. தன்னம்பிக்கை, 3. வரவுக்கு மேற்படாமல் செலவு செய்து எளிய வாழ்க்கை வாழ்தல், வரவில் சிறிது. மீதப்படுத்தி பிறருக்கு உதவி செய்தல், 4. ஆன்மசாதனை நெறியில் ஆர்வமும் ஈடுபாடும், 5. பரந்த மனப்பான்மை.

இந்த ஏழுவகை பஞ்சசீலங்களையும் கடைபிடித்து வந்தால் அது தனிமனிதனை உயர்த்தும்; நாட்டைக் காக்கும்; உலக அமைதிக்கு வழிவகுக்கும்.



# 16. காயத்ரி கீதை

காயத்ரி மந்திரம் மிகவும் சிறியது; 24 எழுத்துக்களே கொண்டது. ஆனால் அதன் பொருள் எல்லையற்றது; முழுமையானது; தூய்மையானது. ஒருவன் அதைத் தெளிவாகப் புரிந்து கொண்டு வாழ்க்கையில் பயன்படுத்தி வந்தால் அவனுக்கு முழு நிறைவுபெற்ற அமைதியும், மகிழ்ச்சியும் நிறைந்த வாழ்வாக அமையும். காயத்ரி கீதையில் காயத்ரி மந்திரத்தின் பொருள் சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்கப்பட்டுள்ளது. காயத்ரி கீதை ஸ்லோகங்களும் அவற்றின் பொருளும் வருமாறு:

**ॐ ओमित्येव सुनामधेयमनघं विश्वात्मनो ब्रह्मणः।**
**सर्वेष्वेव हि तस्य नामसु वसोरेतत्प्रधानं मतम्॥**
**यं वेदानिगदन्ति न्यायनिरतं श्रीसच्चिदानन्दकम्।**
**लोकेशं समदर्शिनं नियमनं चाकारहीनं प्रभुम् ॥ 1॥**

ஓமித்யேவ ஸுநாமதேயமனகம் விஷ்வாத்மனோ ப்ரஹ்மண:
ஸர்வேஷ்வேவ ஹி தஸ்ய நாமஸு வஸோரேதத்ப்ரதானம் மதம்.
யம் வேதானிகதந்தி நித்யாயநிரதம் ஸ்ரீ ஸச்சிதாநந்தகம்.
லோகேக்ஷ ம் ஸமதர்ஷிநம் நியமனம் சாகாரஹீனம் ப்ரபும். 1

**பொருள்:** 'ஓம்' என்பது சிறந்த, பாபமற்ற, புனிதமான தியானத்திற்கு உகந்த சொல்; அது கடவுளின் திருநாமங்களிலேயே மிகவும் உயர்ந்த நாமம். வேதங்கள் ஆண்டவனை "நேர்மையானவன்; சமநோக்குடையவன்; உருவமற்றவன்; சச்சிதானந்த சர்வேஸ்வரன்" என்று கூறுகின்றன. அவனே பிரபஞ்சத்தின் ஆன்மாவாகவும் தலைவனாகவும் உள்ளான்; அவனே பிரபஞ்சத்தை நெறிபிறழாமல் நடத்திச் செல்கிறான்.

**விளக்கம்:** கடவுளை திருப்தி செய்வதற்கும், அவனை அடைவதற்கும் உரிய வழி, ஆண்டவனால் வகுக்கப்பட்ட நெறிகளைப் பின்பற்றுவதே ஆகும். அவன் நம்முடைய போற்றுதலுக்கும், தூற்றுதலுக்கும் அப்பாற்

பட்டவன். மனிதன் தான் செய்த வினைகளின் பயனாலேயே இன்ப துன்பங்களை அனுபவிக்கிறான். 'கடவுள் எங்கும் நிறைந்துள்ளார்; அவருக்குத் தெரியாமல் நம்மால் எதையுமே செய்ய முடியாது' என்பதை உணர்ந்து ரகசியமாகச் கூட பாவச் செயல் புரியக்கூடாது. மனித குலத்திற்கு தொண்டு செய்வதே கடவுள் வழிபாடு. கடவுள் இருக்கிறார் என்பதை ஆத்மார்த்தமாக உணர வேண்டும். அந்த உணர்வு ஆன்மாவை தூய்மைப்படுத்தி அதற்கு சச்சிதானந்த நிலையை (சத், சித், ஆனந்தம் ஆகிய மூன்றையும்) அளிக்கும்.

**भूर्वै: प्राण इति ब्रुवन्ति मुनयो वेदान्त पारम्गता: ।**
**प्राण: सर्वविचेतेनेषु प्रसृत: सामान्यरूपेण च ॥**
**एतेनैव विसिद्ध्यते हि सकलं नूनं समानं जगत् ।**
**द्रष्टव्य: सकलेषु जन्तुषु जनैर्नित्यं ह्यसुश्चात्मवत् ॥ 2 ॥**

பூர்வை ப்ராண இதி ப்ருவந்தி முநயோ வேதாந்த பாரம் கதா:.
ப்ராண: ஸர்வவிசேதனேஷு ப்ரஸ்ருத: ஸாமாந்யரூபேண ச.
ஏதேனைவ விஸித்தயதே ஹி ஸகலம் நூநம் ஸமானம் ஜகத்.
த்ரஷ்டவ்ய: ஸகலேஷு ஜந்துஷு ஜனைர்நித்யம் ஹ்யசுஷ்ராத்மவத்.2

**பொருள்:** முனிவர்கள் பிராணனை 'பூஹ' என்று கூறுவர். இந்தப் பிராணன் எல்லா உயிர் இனங்களுக்கும் உண்டு. அதனால் உயிரினங்கள் யாவும் ஒன்றே. அதனால் மனிதன் பிறரையும், மற்ற உயிரினங்களையும் தன்னைப் போலவே கருதவேண்டும்.

**விளக்கம்:** துன்பம் தன்னை பாதிப்பதுபோலவே மற்றவர்களையும் பாதிக்கும். அதனால் மற்றவர்களுக்கு துன்பம் செய்யக்கூடாது. பிறர் நம்மிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று விரும்புகிறோமோ அது போலவே நாமும் மற்றவர்களிடம் நடந்து கொள்ள வேண்டும். எல்லோரையும் சமமாகக் கருதவேண்டும். சாதி, சமயம், இனம், குடும்பம், நாடு, ஆண், பெண் வேறுபாடு இவற்றின் காரணமாக எவரையும் உயர்வாகவோ தாழ்வாகவோ கருதக்கூடாது. இது நல்லது;

இது கெட்டது என்ற பாகுபாட்டிற்கே மனதில் இடம் கொடுக்கவேண்டும்.

भुवो नाशो लोके सकल विपदां वै निगदितः ।
कृतं कार्यं कर्त्तव्यमिति मनसाचास्य करणम् ॥
फलाशां मर्त्या ये विदधति न वै कर्मनिरताः ।
लभन्ते नित्यम् ते जगति हि प्रसादं सुमनसाम् ॥ 3 ॥

புவோ நாஷோ லோகே ஸகல விபதாம் வை நிகதித:
க்ருதம் கார்யம் கர்த்தவ்யமிதி மனஸா சாஸ்ய கரணம்
பலாஷாம் மர்த்யா யே விதததி நவை கர்மநிரதா:
லபந்தே நித்யம் தே ஜகதிஹி ப்ரஸாதம் ஸுமனஸாம். 3

**பொருள்:** உலகத் துன்பங்களின் அழிவு 'புவஹ' என்று கூறப்படும். எந்த வேலையையும் கடமை உணர்ச்சியுடன் செய்யவேண்டும். பிரதிபலனை எதிர்பார்க்காமல் கடமையைச் செய்து வருபவர்கள் எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் இருப்பார்கள்.

**விளக்கம்:** மனிதனின் கடமை பணி செய்வதே. பலனைக் கொடுப்பது கடவுள் செயல். ஒரு குறிப்பிட்ட பொருளை அடைவதில்தான் இன்பம் இருக்கிறது என்ற எண்ணத்தை விட்டுவிட்டு கடமையைச் செய்வதே இன்பங்களுக்கெல்லாம் ஆதாரமாக உள்ளது என்று எண்ணவேண்டும். தன் கடமையையே குறிக்கோளாகக் கொண்டவன் தான் கர்மயோகி. அவன் எப்பொழுதும் மகிழ்ச்சியாக இருப்பான். நாம் எப்பொழுதும் ஏதாவது ஒரு நற்பணி செய்துகொண்டே இருக்க வேண்டும். இதுவே கீதை கூறும் கர்மயோகம்.

स्वरेषो वै शब्दो निगदति मनः स्थैर्यकरणम् ।
तथा सौख्यं स्वास्थ्यं ह्यपदिशति चित्तस्य चलतः ॥
निमग्नत्वं सत्यव्रत सरसि चाचक्षति उत ।
त्रिधां शान्ति ह्येतां भुवि च लभते संयमरतः ॥ 4 ॥

ஸ்வரேஷா வை ஷப்தோ நிகததி மன: ஸ்தைர்ய - கரணம்
ததா ஸௌக்யம் ஸ்வாஸ்த்யம் ஹ்யுபதிஷதி சித்தஸ்ய சலத:

நிமக்னத்வம் ஸத்யவ்ரத ஸரஸி சாசஷுதி உத.
த்ரிதாம் ஷாந்திம் ஹ்யேதாம் புவி ச லபதே ஸம்யமரத: 4

**பொருள்:** ஸ்வஹா என்ற சொல் மன இயக்கத்தை ஒழுங்குபடுத்தி அந்த ஒழுங்குமுறையில் நிலைபெறச் செய்கிறது. அலையும் மனதை ஒரு நிலைக்கு கொண்டு வருகிறது. ஒரு மனிதன் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு சத்தியப் பாதையில் சென்றால் அவன் மூன்று வகைகளில் அமைதி காண்கிறான்.

**விளக்கம்:** துன்பம், கோபம், பகையுணர்வு, வறுமை, ஏமாற்றம், மனக்கிலேசம், அச்சம், நஷ்டம் இவைகள் வரும் போது மனிதனுக்கு வாழ்க்கையில் எவ்வித பிடிப்பும், பற்றுக்கோடும் இல்லாமல் போகிறது; அந்த நிலையில் அவன் மன அமைதியை இழந்து விடுகிறான். சூழ்நிலை அவனுக்கு சாதகமாக அமையும் போது தன்முனைப்பு, அகங்காரம், முறைகேடு, பணம் சேர்க்கும் வெறி இவற்றிற்கு ஆளாகி தவறான பாதையில் செல்லத் தொடங்குகிறான். இந்த இரண்டு நிலைகளுமே மனிதனின் அறிவுக்கண்களை குருடாக்கி விடுகின்றன. பேரழிவை உண்டாக்குகின்ற இந்த இரண்டு சூறாவளிகளி லிருந்தும் ஆன்மாவைக் காப்பாற்ற மனித மனம் உண்மை, சமநோக்கு, ஒழுங்கில் நிலைத் திருத்தல் ஆகிய மூன்று பண்புகளும் நிலையாக தங்கியிருக்கும் இடமாக மாறவேண்டும். அப்பொழுதுதான் அந்த மனிதன் உடல்நலம், மனநலம், ஆன்ம நலம் ஆகிய மூன்று நலங்களையும் அடைந்து உண்மையான அமைதியைப் பெறுகிறான்.

**ततो वै निष्पत्तिः स भुवि मतिमान् पण्डितवरः ।**
**विजानन् गुह्यं यो मरणजीवनयोस्तदखिलम् ॥**
**अनन्ते संसारे विचरति भयासक्तिरहित।**
**स्तथा निमार्णं वै निजगतिविधीनां प्रकुरुते ॥ 5 ॥**

ததோ வை நிஷ்பத்தி: ஸ புவி மதிமான் பண்டிதவர:

விஜானன் குஹ்யம் யோ மரணஜீவனயோஸ்த்ததகிலம்.
அநந்தே ஸம்ஸாரே விசரதி பயாஸகிதிரஹி த.
ஸ்ததா நிர்மாணம் வை நிஜகதிவிதினாம் ப்ரகுருதே. 5

**பொருள்:** 'தத்' என்ற சொல் பிறப்பு, இறப்பு ஆகியவற்றின் ரகசியத்தை அறிந்தவனே அறிவாளி என்பதைக் குறிக்கிறது.

**விளக்கம்:** 'எப்பொழுதும் மனிதன் மரணத்தின் பிடியில் தான் இருக்கிறான்; எந்த நேரத்திலும் சாவு வரக்கூடும்' என்ற எண்ணத்துடன், கிடைத்தற்கரிய மனிதப் பிறவியை நல்ல முறையில் பயன்படுத்த வேண்டும். சிறிது காலமே வாழக்கூடிய இந்த மனித வாழ்க்கையில் சில நொடிகளே நிலைத்திருக்கும் அற்ப சந்தோஷத்திற்காக பாபங்களைச் செய்து நீண்டகாலம் துன்பத்திலேயே உழன்று கொண்டிருப்பது அவசியம் தானா என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

அறிவு வளர்ச்சி, சமூக நலம், சமயத் தொண்டு ஆகியவற்றில் ஈடுபடுபவர்களின் வாழ்க்கை தெய்வீக வாழ்க்கை. இந்தப் பணிகள் இந்தப் பிறவியில் முற்றுப் பெறாவிட்டால் அடுத்த பிறவியில் நிறைவேறிவிடும். இந்த வாழ்க்கையை சிறந்த முறையில் பயன்படுத்துபவன் அடுத்த பிறப்பிலும் இன்பமான வாழ்க்கையைப் பெறுவான். தற்போதைய வாழ்க்கையைத் தவறான வழியில் நடத்துபவனுடைய எதிர்காலம் இருள் சூழ்ந்ததாக அமைந்துவிடும். ஆகையால் இதுவரை நடந்தவைகளை எண்ணி வருந்திக் கொண்டிருக்காமல், இப்போதே திட்டமிட்டு எஞ்சியுள்ள வருங்கால வாழ்வை பயனுள்ளதாக கழிக்க வேண்டும்.

**सवितुस्तु पदं वितनोति ध्रुवं।**
**मनुजो बलवान् सवितेव भवेत्॥**
**विषया अनुभूति परिस्थितयोस्तु**
**सदात्मन एव गणेदिति सः ॥ 6॥**

ஸவிதுஸ்து பதம் விதநோதி த்ருவம்.
மனுஜோ பலவானன் ஸவிதேவ பவேத்:.
விஷயா அனுபூதிபரிஸ்திதயோஸ்து.
ஸதாத்மன ஏவ கனேதிதி ஸ:. 6

**பொருள்:** மனிதன் சூரியனைப் போல் வலிமையுள்ள வனாக இருக்கவேண்டும் என்பதையும், எல்லா பொருள்களும் அனுபவங்களும் தன் ஆன்மாவுடன் தொடர்பு கொண்டவை என்ற உண்மையை அவன் அறிந்து கொள்ளவேண்டும் என்பதையும் "சவிதா" என்ற சொல் உணர்த்துகிறது.

**விளக்கம்:** சூரியனுக்கு 'வீரியம்' என்று பெயர்; பூமிக்கு 'ராஜ்யம்' என்று பெயர். உலகம் சூரியனுடைய ஆற்றலினாலேயே இயங்குகிறது. ஆன்மா பல்வேறு வகையான சந்தர்ப்பங்களையும் சூழ்நிலைகளையும் உண்டாக்கிக் கொண்டு செயல்படுகிறது. விதி என்பது முன் செய்த வினையின் விளைவு. ஆகையால் நாம் நல்ல சூழ்நிலைகளை உருவாக்கி கொண்டு நல்லவைகளையே செய்து வரவேண்டும். ஒருமனிதன் தன் விதியை தானே தான் உருவாக்கிக் கொள்கிறான். ஆகையால் மனிதர்கள் ஒவ்வொருவரும் அவரவர்களின் ஆன்ம பலத்தை உயர்த்திக் கொள்ளவேண்டும். ஒருவனுடைய அக வளர்ச்சிக்கு ஏற்பவே புற உதவிகளும் கிடைக்கின்றன.

மனிதன் அறிவுள்ளவனாகவும், வலிமையும், சுய உழைப்பினால் முன்னேறும் ஆர்வம் உடையவனாகவும் இருக்கவேண்டும். 1. உடல் நலம், 2. அறிவு, 3. செல்வம், 4. தனித்திறமை, 5. நிர்வாகத் திறம், 6. புகழ், 7. தைரியம், 8, உண்மை ஆகிய எட்டு வகை ஆற்றல்களையும் வளர்த்துக் கொள்வதில் எப்பொழுதும் கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டும்.

वरेण्यं चैतद्वै प्रकटयति श्रेष्ठत्वमनिशम् ।
सदा पश्चेच्छ्रेष्ठं मननमपि श्रेष्ठस्यविदधेत् ॥

तथा लोके श्रेष्ठं सरल मनसा कर्म च भजेत्।
तदित्थं श्रेष्ठत्वं व्रजति मनुजः शोभितगुणैः ॥ 7 ॥

வரேண்யம் சைத்வை ப்ரகடயதி ஷ்ரேஷ்டத்வமநிஷம்
ஸதா பஷ்சேச்ரேஷ்டம் மநநமபி ஷ்ரேஷ்டஸ்ய விததேத்
ததா லோகே ஷ்ரேஷ்டம் ஸரலமனஸா கர்ம ச பஜேத்
ததித்தம் ஷ்ரேஷ்டத்வம் வ்ரஜதி மநுஜ: ஷோபிதகுணை: 7

**பொருள்:** வரேண்யம் என்ற சொல் உன்னதமான நிலையை நோக்கி முன்னேறவேண்டும் என்பதைக் குறிக்கிறது. ஒரு மனிதன் நல்லவற்றையே பார்க்க வேண்டும்; நல்லவற்றைப் பற்றியே சிந்திக்க வேண்டும்; நல்லவையே செய்யவேண்டும். இம்மூன்றையும் செய்தால் அவன் நிச்சயமாக உன்னத நிலையை அடைவான்.

**விளக்கம்:** ஒருவன் என்ன நினைக்கிறானோ அதுவாகவே மாறுகிறான்; அவன் எண்ணங்கள் எப்படி அமைகின்றனவோ அப்படியே அவனுடைய வாழ்க்கையும் அமைகிறது. நம் எண்ணங்கள் எப்படி அமைகின்றனவோ அவற்றிற்கு ஏற்பவே நமது ஆர்வமும் அமைகிறது; நம் மனப்பான்மைக்கு உகந்த எண்ணம் உள்ளவர்களே நண்பர்களாக அமைகிறார்கள். அதனால் நாம் உயர்ந்தவர்கள் ஆக விரும்பினால், உயர்ந்த பண்புள்ளவர்களுடன் உறவு வைத்துக் கொள்ளவேண்டும். நல்ல எண்ணங்களை வளர்த்துக் கொள்ளவேண்டும். நல்ல நிகழ்ச்சிகளைக் காணவேண்டும். அவற்றில் பங்கு கொள்ளவும் வேண்டும்; உன்னத நிலையை அடைந்தவர்களின் வாழ்க்கையைப் பின்பற்ற வேண்டும்.

भर्गोव्याहरते पदं हि नितरां लोकः सुलोकोभवेत्।
पापे पापविनाशने त्वविरतं दत्तावधानोवसेत्॥
दृष्ट्वा दुश्कृतिदुर्विपाक निश्चयस्तेभ्यो जुगुप्सेद्धि च।
तन्नाशाय विधीयतां च सततं संघर्षमेभिः सह ॥ 8 ॥

பர்க்கோவ்யாஹரதே பதம் ஹி நிதராம் லோக: சுலோகோபவேத்
பாபே பாப விநாஷனேத்வவிரதம் தத்தாவதானோ வஸேத்
த்ருஷ்ட்வா துஷ்க்ருதிதுர்விபாக நிஷ்சயஸ்தேப் யோஜுகுப்ஸேத்தி
ச. தன்னாஷாய விதீயதாம் ச ஸததம் ஸகர்ஷமேபி: ஸஹ. 8

**விளக்கம்:** உலகத் துன்பங்களுக்குக் காரணம் பாபச் செயல்கள். பலர் இப்பிறப்பிலும் முற்பிறப்பிலும் செய்த வினைகளின் விளைவாக சிறைச்சாலைளிலும் மருத்துவ மனைகளிலும் நரகவேதனைப்படுவதைக் காண்கிறோம். ஞானிகளும், துறவிகளும் மற்றவர்களை திருத்த வேண்டும் என்பதற்காக அவர்களுடைய துன்பச் சுமைகளைத் தாங்கள் ஏற்றுக்கொண்டு அவதிப் படுகிறார்கள். யார் துன்பத்தை அனுபவித்தாலும் சரி, துன்பத்திற்குக் காரணம் பாபங்களே. ஆகையால் துன்பங்கள் வருவதை விரும்பாதவர்கள் இதுவரை செய்த பாபங்களுக்கு கழுவாய் தேடவேண்டும். இனி பாபங்களே செய்யாமல் இருக்கவேண்டும். பாபச்சுவடுகளே இல்லாத நிலையில்தான் உண்மையான மகிழ்ச்சி நிலவுகிறது.

**देवस्येति तु व्याकरोत्यमरतां मर्त्योपि संप्राप्यते।**
**देवानामिव शुद्धदृष्टिकरणात् सेवोपचाराद् भुवि॥**
**निःस्वार्थं परमार्थकर्म करणात् दीनाय दानात्तथा।**
**बाह्याभ्यन्तरमस्य देवभुवनं संसृज्यते चैव हि॥ ९॥**

தேவஸ்யேதி து வியாகரோத்யமரதாம் மர்த்யோபி ஸம்ப்ராப்யதே.
தேவானாமிவஷுத்தத்ருஷ்டி கரணாத் ஸேவோபசாராத் புவி.
நி:ஸ்வார்த்தம் பரமார்த்தகர்ம கரணாத் தீநாயதானாத்ததா.
பாஹ்யாப்யந்தரமஸ்ய தேவபுவனம் ஸம்ஸ்ஜ்ருயதே சைவஹி

**பொருள்:** 'தேவஸ்ய' என்ற சொல் அழியக்கூடிய மனிதன் மரணமிலாப் பெருவாழ்வை அடையலாம். அதாவது தெய்வீக நிலையை அடையலாம் என்பதைக் குறிக்கிறது. ஒரு மனிதன் புனிதமான கருத்துக்களைக் கொண்டிருப்பதன் மூலமும் ஏழைகளுக்கு உதவுவதன் மூலமும், எல்லா உயிர்களுக்கும் தொண்டு செய்வதன் மூலமும் தன் இதயத்திலும், தான், வாழும் உலகத்திலும் ஒரு சுவர்க்கத்தையே படைக்கிறான்.

**விளக்கம்:** கடவுளால் படைக்கப்பட்டவை யாவும்

புனிதமானவை; இன்பமயமானவை. கடவுளின் படைப்புகளான இயற்கைப் பொருள்களைக் கண்டு களித்தல், மனிதனின் படைப்புகளில் உள்ள குறைகளை நீக்குதல், தெய்வீக நிலையை வளர்த்தல் ஆகியவை இறைபணியாகும். தெய்வீகக் காட்சியில் நிலைத்திருக்கும் மனம் உள்ளவன் தேவாத்மாவாகவே மாறிவிடலாம். இந்த உடல் நானல்ல; ஆன்மாவே நான், என்பதை அறிந்தவனுக்கு மரணபயமில்லை. எல்லா உயிரினிங்களிடத்திலும் அன்பு காட்டல், தூய பண்புள்ளவனாய் இருத்தல், ஏழைகளையும், பின்தங்கியவர்களையும் மேல் நிலைக்குக் கொண்டுவர தன்னால் முடிந்ததையெல்லாம் செய்தல் ஆகியவை சேர்ந்ததே தெய்வீக நிலை. இந்த நற்பண்புகளைப் பெற்றவர்களுக்கு இந்த மண்ணுலக வாழ்க்கையே ஸ்வர்க்கலோக வாழ்க்கையாக இருக்கும்.

**धीमहि भवेम सर्वविधं शुचि।**

**शक्रिचयं वयमित्युपदिष्टा: खलु ॥**

**नो मनुजो लभते सुखशान्ति। अनेन विनति वदन्ति हि वेदा: ॥10॥**

தீமஹி பவேம ஸர்வவிதம் ஷுசிமேவ.
ஷக்திசய வயமித்யுபதிஷ்டா: கலு
நோ மனுஜோ லபதே ஸுகஷாந்திம்.
அநேந விநேதி வதந்தி ஹி வேதா: . 10

**பொருள்:** 'தீமஹி' என்ற சொல் நாம் புனிதமான தெய்வீக சக்திகளையெல்லாம் பெற்றிருக்கவேண்டும் என்பதைக் குறிக்கிறது. இந்த ஆற்றல்களைப் பெறாதவன் அமைதிகாண முடியாது என்று வேதங்கள் பறைசாற்றுகின்றன.

**விளக்கம்:** உலக வாழ்க்கையில் மனிதன் பலவகையான ஆற்றல்களைப் பெற்றிருக்கிறான். உடல் வலிமை, பொருள் வளம், உயர் பதவி , அரசியல் செல்வாக்கு, படைவலிமை, சிறந்த அறிவு, திறமை இவை யாவும் உலக வாழ்க்கைக்குத் தேவையான ஆற்றல்கள். எனினும் இவை நிலையானவை அல்ல. இவற்றால் கிடைக்கும் மகிழ்ச்சியை ஒரு சிறு அதிர்ச்சி (கொடிய

நோய் தாக்கியுள்ளதன் அறிகுறி, பெரிய நஷ்டம் போன்றவை) நொடிப்பொழுதில் அழித்துவிடும். தெய்வீக ஆற்றல்கள் என்று போற்றப்படும் புனிதமான நற்பண்புகளில்தான் நிலையான மகிழ்ச்சி உள்ளது. அஞ்சாமை. வருங்காலத்தை யூகித்து அறியும் ஞானம், சலனமற்ற, மனநிலை, தாராள சிந்தை, தன்னடக்கம், கருணை உள்ளம், கற்றலில் ஆர்வம், தவ ஒழுக்கத்தில் ஆழ்ந்த ஈடுபாடு, உண்மை, கொல்லாமை, பணிவுடைமை, பொறுமை, அன்பு, நீதி தவறாமை ஆகியவை யாவும் தெய்வீகச் செல்வங்கள். இவை நிலையான இன்பத்தை அளிப்பவை. உலகில் உள்ள எந்த செல்வமும் இவற்றிற்கு இணையாக மாட்டா. அதனால் மனிதன் தெய்வீக செல்வங்களை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

धियो मत्योन्मथ्यागम निगममन्त्रान् सुमतिमान्।
विजानीयात्तत्त्वं विमलनवनीतं परमिव॥
यतोऽस्मिन् लोके वै संशयगतविचार स्थलशते।
मतिः शुद्धैवाच्छा प्रकटयति सत्यं सुमनसे॥ 11॥

தியோ மத்யோந்மத்யாகம நிகமமந்த்ரான் ஸுமதிமான்.
விஜானியாத்தத்வம் விமலநவநீதம் பரமிவ.
யதோஸ்மின் லோகே வை ஸம்ஷயக விசார ஸ்தலஷதே.
மதி: சுத்தைவாச்சா ப்ரகடயதி ஸத்யம் ஸுமனஸே. 11

**பொருள்:** அறிவுள்ள மனிதன் வேதசாஸ்திரங்களை தெளிவாகக் கற்று அவற்றின் சாரத்தை அறிந்து கொள்ள வேண்டும் என்பதை தியோ என்ற சொல் உணர்த்துகிறது.

**விளக்கம்:** சாஸ்திரங்களில் காணப்படும் கருத்துக்கள் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டவைகளாக உள்ளன. பல்வேறு ரிஷிகளின் எண்ணங்கள் வெவ்வேறாக இருப்பதாலேயே இந்த கருத்து மாறுபாடுகள் ஏற்பட்டுள்ளன. ஒரு காலத்தில் சரியாக இருந்தவை வேறு ஒரு காலத்திற்கு பொருந்தாதவைகள் ஆகிவிடுகின்றன. குளிர்காலத்தில் அணியும் உடைகள் கோடைகாலத்தில்

தேவை அற்றவை ஆகிவிடுகின்றன. அதேபோல் ஒரு காலத்தின் தேவைக்கு மிகவும் பொருத்தமாக இருந்தவை அதற்குப் பிற்பட்ட காலத்தில் உண்டான சூழ்நிலை மாறுபாடுகளால் அந்தக் காலத்திற்குக் கொஞ்சங்கூட பொருத்தமில்லாதவைகளாக மாறிவிடுகின்றன. அதனால் நாம் ரிஷிகளையும், சாஸ்திரங்களையும் குறைகூறிக் கொண்டிருப்பதை விட்டு விட்டு அந்த ரிஷிகள் எழுதி வைத்துள்ள சாஸ்திரங்களில் இந்தக் காலத்திற்கு பொருத்தமுள்ளவைகளாக எவை எவை இருக்கின்றனவோ அவற்றை மட்டும் எடுத்துக் கொள்ளவேண்டும். நாம் எடுக்கும் முடிவுகள் காலத்திற்கு ஏற்றவைகளாகவும், அறிவுக்குப் பொருத்தமுள்ளவைகளாவும் நேர்மையை அடிப்படையாகக் கொண்டவைகளாகவும் இருக்கவேண்டும்.

**योनो वास्ति तु शक्तिसाधनचयो न्यूनाधिकश्चाथवा।**
**भागं न्यूनतमं हि तस्य विदधेमात्मप्रसादाय च॥**
**यत्पश्चादवशिष्टभागमखिलं त्यक्त्वा फलाशां हृदि।**
**तद्धीनेष्वभिलाषवस्तु वितरेद् ये शक्तिहीनाः स्वयम्॥ 12॥**

யோனோ வாஸ்தி து ஷக்திஸாதநசயோ ந்யூநாதிகஷ்சாதவா.
பாகம் ந்யூநதம ஹி தஸ்ய விததேமாத் மப்ரஸாதாய ச.
யத்பஷ்சாதவசிஷ்ட பாகமகிலம் த்யக்த்வா ப்லாஷாம் ஹ்ருதி
தத்தீநேஷ்வபிலாஷவஸ்து விதரேத்யே ஷக்திஹீனா:ஸ்வயம். 12

**பொருள்:** நாம் நம்மிடம் உள்ள ஆதாரங்களில் மிகக் குறைந்த அளவை நம் தேவைகளுக்குப் பயன்படுத்திக் கொண்ட பெரும்பகுதியை தாழ்ந்த நிலையில் உள்ள மக்களை உயர்த்துவதற்காக பயன்படுத்தவேண்டும் என்பதே "யோநஹ" என்பதன் உட்பொருளாகும்.

**விளக்கம்:** கடவுள் நம்மை அவருடைய செல்வக் களஞ்சியங்களாக மதித்து அறிவு, வலிமை, வளமை, முதலான எல்லாச் செல்வங்களாலும் நம்மை நிறைத்து வைத்திருக்கிறார். அவற்றையெல்லாம் நாம் ஆடம்பரமாக செலவு செய்வதற்காகவும் நம் தனிப்பட்ட வசதிகளைப்

பொருக்கிக் கொள்வதற்காகவும் நம்மிடம் கொடுத்து வைக்கவில்லை. அவைகளை ஏழை எளியவர்களுக்கும், மற்றவர்களுக்கும் தேவையானபோது கொடுத்து உதவுவதற்காகவே பத்திரமாக நம்மிடம் கொடுத்து வைத்துள்ளார். அவ்வாறு உதவுவதால் நமக்கு மதிப்பும், புகழும், மகிழ்ச்சியும் கிடைக்கின்றன. கற்றவர்கள், பணக்காரர்கள், வலிமை மிக்கவர்கள் முதலியவர்களின் சிறப்பு அவர்கள் தாங்கள் பெற்றுள்ள செல்வங்களை அறியாமையில் உழல்பவர்களுக்கும். வறியவர்களுக்கும் வலிமையற்றவர்களுக்கும் வாரிவாரி வழங்குவதில்தான் உள்ளது. இதையே தாயுமானவர், "யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையம்" என்று இனிமையாக சுருங்கக்கூறி விளங்க வைத்துள்ளார்.

प्रचोदयात् स्वं त्वितरांश्च मानवान्।
नरः प्रयाणाय च सत्यवर्त्मनि॥
कृतं हि कर्माखिलमित्थमंगिना।
वदन्ति धर्मं इति हि विपश्चितः॥ 13॥

ப்ரசோதயாத்ஸ்வம் த்விதராம்ஷ்ச மானவான்.
நர: ப்ரயாணாய ச ஸத்ய வர்த்மனி.
க்ருதம் ஹி கர்மாகிலமித்த மங்கினா.
வதந்தி தர்மம் இதி ஹி விபஷ்சித:. 13

**பொருள்:** "மனிதன் சத்தியப் பாதையில் செல்வதில் ஆர்வங்காட்டவேண்டும்; மற்றவர்கள் உண்மை நெறியைப் பின்பற்றுவதற்கு அவன் ஒரு தூண்டுகோலாவும் இருக்க வேண்டும்" என்பதுதான் 'ப்ரசோதயாத்' என்பதன் நுட்பப்பொருள். கற்றறிந்த ஞானிகள் இந்தப் பணியையே சமயம் என்று கூறுகிறார்கள்.

**விளக்கம்:** உலகிலேயே மனஎழுச்சிதான் மிகப் பெரிய ஆற்றல். அந்த மன எழுச்சி மட்டும் ஏற்படா விட்டால் எவ்வளவு சிறந்த ஆதாரமும் எதற்கும்

உதவாமல் வீணாகி விடும். மனஎழுச்சியுடன் செயல்படுபவனுக்கு தானாகவே எல்லா வகையான ஆதாரங்களும் கூடிவிடுகின்றன. அவனுக்கு நண்பர்கள் உதவியுடன் தெய்வத்தின் உதவியும் கிடைக்கின்றது. இத்தகைய மனஎழுச்சி மட்டும் இல்லா திருந்தால் காந்தியடிகளால் ஒரு பெரிய மக்கள் இயக்கத்தை உருவாக்கி பாரதத்திற்கே விடுதலை பெற்றுத் தந்திருக்க முடியுமா? அந்த மனஎழுச்சி ஒரு மனிதனையும் அவனைச் சார்ந்தவர்களையும் நேர்மையான பாதையில் செல்ல ஊக்குவிக்கவேண்டும். சுயநலத்தை அடிப்படையாகக் கொண்டதாக அமைந்துவிட்டால் அதே எழுச்சி அவனையும் அவனை நம்பிப் பின் தொடர்பவர்களையும் படுபாதாளத்தில் கொண்டு போய் தள்ளிவிடும். புனிதமான, கருணையால் உருவான நற்பணிகளில் இந்த ஆர்வம் மிகவும் உன்னதமான பலன்களை அளிக்கிறது.

**गायत्री गीतां ह्येतां यो नरोवेत्ति तत्त्वत: ।**
**समुक्तवा सर्वदु:खेभ्य: सदानन्दे निमज्जति ॥ 14 ॥**

காயத்ரீ கீதாம் ஹ்யேதாம் யோ நரோவேத்தி தத்வத:.
ஸமுக்தவா ஸர்வது:க்கேப்ய: ஸதாநந்தே நிமஜ்ஜதி.

**பொருள்:** இந்த காயத்ரி கீதையின் பொருளை முழுமையாக அறிந்தவன் எல்லாத் துன்பங்களில் இருந்தும் விடுபட்டு எக்காலத்திலும் மாறாத இன்ப நிலையை அடைவான்.

காயத்ரி கீதையின் இந்த 14 ஸ்லோகங்களே வேத சாஸ்திரங்கள் அனைத்திலும் உள்ள சாரமாகும். எவன் ஒருவனுடைய வாழ்க்கையுடன் இந்த ஸ்லோகங்களில் கூறப்பட்டுள்ள அறநெறிகள் இரண்டறக் கலந்து விடுகின்றனவோ, அவன் எக்காலத்திலும் துன்பமே இல்லாத பேரின்ப வாழ்வு வாழ்வான்.



# 19. காயத்ரி உபநிஷத்

வேதங்களிலிருந்து பிராமணம் எனப்படும் நூல்கள் வெளிப்பட்டன. ஒவ்வொரு வேதமும் பல க்ரந்தங்களை கொண்டிருந்தன. அவற்றுள் ஒரு சில கிரந்தங்கள்தான் இபபோது கிடைத்துள்ளன. மற்றவை காலவெள்ளத்தில் கண்டுபிடிக்க முடியாத அளவுக்கு மறைந்து போய்விட்டன.

கிடைத்துள்ள பிராமணங்களில் ஷாங்காயனம், எத்ரேயம் ஆகிய இரண்டும் ரிக்வேதத்தைச் சேர்ந்தவை. ஷாங்காயன கிரந்தத்திற்கு கௌபீதகி என்ற பெயரும் உண்டு. யஜுர் வேதத்தைச சேர்ந்த பிராமணங்கள் மூன்று: அவை 1. ஷட்பாதம், 2. கண்வம், 3. தத்தாத்ரேயம் என்பனவாகும். சாமவேத பிராமணங்கள் பதினொன்று. அவை: 1. ஆர்ஷேயம், 2. ஜெய்மினி ஆர்ஷேயம், 3. ஸன்ஹி தோபனிஷத், 4. மந்த்ரா, 5. வான்ஷ், 6. சாம்,7. விதான், 8. ஷட்வின்ஷா, 9. தேவத், 10. தாண்ட்யா, 11. ஜெய்மினய உபநிஷத் என்பனவாகும். கோபாத பிராமணம் என்ற ஒரு பிராமணம் மட்டுமே அதர்வண வேத்திலிருந்து கிடைத்துள்ளது.

கோபாத பிராமணத்தில் 31 ஆம் பத்தி முதல் 38 ஆம் பத்தி வரை உள்ள பகுதிக்கு காயத்ரி உபநிஷத் என்று பெயர். அதில் காயத்ரி பற்றிய முக்கிய ரகசியங்கள் விளக்கப்பட்டுள்ளன. அவை மைத்ரேயர், மௌத்கல்யர் ஆகிய இருவருக்கும் இடையே நடக்கும் உரையாடல் முறையில் விளக்கப்பட்டுள்ளன. காயத்ரி என்ற சொல்லுக்கு சாதாரண பொருள் 'அறிவைத் தூண்டுவதற்கான வழிபாடு' என்பதுதான். ஆனால் இந்த உபநிடதத்தில் ப்ரம்மவித்தை (தெய்வீக ஞானம்), பதார்த்த

வித்தை (உலகியல் அறிவு) ஆகியவை தனிப்பட்ட முறையில் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளன.

காயத்ரி உபநிஷத்தின் தோற்றத்தைப் பற்றி ஒரு வரலாறு உள்ளது. அது வருமாறு: மைத்ரேயர் ஒரு கற்றறிந்த மேதை. அவர் மூன்று வேதங்களைப் பற்றியும் இலக்கியச் சொற்பொழிவு ஆற்றி வருபவர். அவர், 'மௌத்கல்யர்' தன் சீடர்களுக்கு பயனுள்ளவை எவற்றையும் கற்பிக்கவில்லை என்று குறை கூறி வந்தார். தன் சீடர்கள் மூலமாக இதை அறிந்த மௌத்கல்யர், மைத்ரேயரைப் பார்த்து, 'காயத்ரியின் ரகசியங்களைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்?' என்று கேட்டார். இதற்கு மைத்ரேயரால் பதில் கூற முடியவில்லை.

மைத்ரேயர் சிந்தித்தார். அவர் 'காயத்ரி மிகவும் முக்கியமானது. அப்படி இருந்தும் நான் இதுவரை காயத்ரியின் ரகசியத்தைப் புரிந்து கொள்ளவில்லை. அடிப்படை ஆதாரத்தை தெரிந்து கொள்ளாமல் வெளியில் காணப்படும் அடையாள உருவங்களைத் தெரிந்து கொள்வதால் பயன் ஏதும் இல்லை. அதனால் முதலில் காயத்ரியின் ரகசியத்தைத் தெரிந்து கொள்ளவேண்டும்; மற்ற வேலைகள் எல்லாம் அதற்குப் பிறகுதான்' என்று சிந்தித்து உறுதியான முடிவுக்கு வந்தார். அவர் தன் சீடர்களையெல்லாம் அனுப்பிவிட்டு பக்தியுடனும், பணிவுடனும் மௌத்கல்யரை அடைந்து அவருக்கு சீடரானார். பிறகு அவர் தன் குருவிடம் மூன்று வினாக்கள் கேட்டார்.

1. சவிதாவின் வரேண்யம் என்பது என்ன? (இதன் பொருள்: ஒளிமயமான கடவுளை அடைவது எப்படி?)

2. பர்கோ தேவஸ்ய என்பது என்ன? 'தேவ' என்ற சொல் 'எல்லாவற்றிற்கும் மேலானது' என்ற பொருள்படும். 'பர்கோ' என்ற சொல்லுக்கு ஒளி, ஆற்றல், சக்தி என்ற மூன்று பொருள்களும் உண்டு.

3. எதன் மூலமாக கடவுள் தூண்டுகோலாக அமைகிறார்? (இதன் பொருள்: எதன் மூலமாக கடவுளின் திருவருவளை அடைய முடியும்?)

இம்மூன்று வினாக்களுக்கும் மௌத்கல்யர் கீழ்க்கண்ட பதில்கள் கூறினார். 1. வேதமும், சந்தமும் சவிதாவின் வரேண்யம், 2. அன்னம் (உணவுப் பொருள்) தேவனின் பர்கா. 3. தீமஹி என்பதில் வரும் 'தீ' என்ற பதம் கர்மாவைக் குறிக்கிறது. அந்த கர்மாவின் மூலம்தான் கடவுள் நம்மை ஊக்குவிக்கும் தூண்டுகோலாக அமைந்து நம்மை உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்வதும் அந்த கர்மாவின் மூலம்தான். இந்த விடைகளின் விளக்கம் வருமாறு:

1. வேதம் என்பது அறிவு, சந்தம் என்பது அனுபவம், உண்மையில் கடவுள் தன்னைப் பற்றிய அறிவாலேயே உணரப்படுகிறார். இங்கு அறிவு என்பது புத்தகத்தைப் படித்துப் பெறும் அறிவல்ல. ஒருவர் எண்ணற்ற இலக்கியங்களைப் படித்திருக்கலாம்; இலக்கிய சொற்பொழிவுகள் ஆற்றிக் கொண்டிருக்கலாம்; தெய்வங்களின் புராணக் கதைகளை உபன்யாசம் செய்து கொண்டும் இருக்கலாம்; இவற்றால் எவ்வித பயனும் இல்லை. "உண்மைப் பொருள்" என்பது என்ன என்பதைப் பற்றி அறிவை அனுபவத்தின் மூலம்தான் பெற முடியும். நம்முடைய பகுத்தறிவு, தர்க்க ரீதியான ஆய்வு, ஆதாரங்கள், எடுத்துக்காட்டாக வரும் சம்பவங்கள் இவைகள் அனைத்தின் உதவியாலும் 'இதுதான் உண்மை' என்று உறுதி செய்யப்பட வேண்டும். உண்மை இதுதான் என்று தெளிந்தபிறகு அதில் அசைக்க முடியாத நம்பிக்கை வைக்க வேண்டும். அதோடு அந்த நம்பிக்கை தினசரி வாழ்க்கை நடைமுறைகளில் வெளிப்பட வேண்டும். இன்னும் விளக்கமாகக் கூறினால் உண்மை, உதவி செய்யும் மனம், தன்னடக்கம், நேர்மை இவைகள் எல்லாம் "உண்மைப் பொருளின்" வெவ்வேறு வகையான வெளிப்பாடுகள். இவைகள் எல்லாம் உயர்ந்தவைதானா

என்று ஆராய்ந்து பார்க்கவேண்டும். ஆம், உயர்ந்தவைதான் என்று தெரிந்தபின் அவற்றின் மீது முழு நம்பிக்கை வைத்து, அவைகளை வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டும். இவற்றை முழுமனதோடு கடைப்பிடித்து வந்தால் அவற்றில் ஆழ்ந்த ஈடுபாடு - அதாவது பக்தி உண்டாகும். பொய்மையற்ற உண்மையான இந்த பக்தியின் கனிந்த நிலையை அடையும்போது ஒருவன் "கடவுள் உணர்வை" ப்பெறுகிறான். அனுபவத்தில் வராத அறிவு பயனற்றது. அடிப்படை நியதிகளைப் பற்றிய அறிவில்லாமல் பெறும் அனுபவங்கள் ஆதாரமற்ற கட்டிடத்தைப் போன்றவைகளே. ஒருவன் ஆடம்பரம், ஏமாற்றுதல், பகை உணர்ச்சி, உண்மைகளை பிறருக்குத் தெரியாமல் மறைத்தல் போன்ற தீய பண்புகளை எப்பொழுது அறவே விட்டொழிக்கிறானோ அந்த வினாடியே, எப்பொழுது ஒருவனுடைய பக்தி ஈடுபாடு அதன் உச்சகட்டத்தை அடைகிறதோ அந்த நொடியிலேயே, எப்பொழுது ஒருவன் ஒரே தெய்வத்தைத் தேர்ந்தெடுத்து இதுதான் என் தெய்வம், இதுவே எல்லாவற்றிற்கும் மேலான தெய்வம் என்று முழுமையாக நம்பி அந்தத் தெய்வத்திடம் முற்றிலும் சரணாகதி அடைந்து விடுகிறானோ அந்தத் தருணத்திலேயே அவன் கடவுள் உணர்வைப் பெற்று விடுகிறான். இதுவே "உண்மைப் பொருளை" ப்பற்றிய அறிவு - ஞான ஒளி சவிதா என்றெல்லாம் கூறப்படுவது. இவை அனைத்தையும் சுருக்கமாகக் கூறின், "வேதம் (அறிவு) சந்தம் (அனுபவம்) இவை இரண்டும் ஒன்றுபடுவதாலேயே தெய்வத்தை உணரும் நிலை உண்டாகிறது".

2. அன்னம் (உணவுப் பொருள்) தேவனின் பர்கா என்பது இரண்டாவது வினாவிற்குக் கூறப்பட்ட விடை. ஒரு உயர்ந்த மனிதனின் வலிமை அவனிடம் உள்ள ஆதாரங்களே. புவியியல் ஆதாரங்கள் (அன்னம்) இருந்தால்தான் ஒருவனின் உயர்வு அல்லது தனித்தன்மை உறுதியாக நிலைத்து நிற்கும். உலகியல் ஆதாரங்களில்

பணம் ஒரு மாபெரும் சக்தி. அது ஆணவம் கொண்ட அரக்கர்களின் கையில் சிக்கினால் அரக்க குணங்களை அளவுக்கு மீறி வளர்த்து விடுகிறது. அதே பணம், சத்வ குணம் படைத்த மனிதர்களான தேவாத்மாக்களைச் சென்றடைந்தால், தெய்வீகப் பண்புகளை வளர்க்க உதவுகிறது. ஒரு நாட்டை ஆளும் உரிமையும் பணத்தைப் போன்ற ஒரு மிகப் பெரிய சக்திதான். இந்த சக்தி கொடிய மனம் படைத்த தீயவர்களின் கையில் அகப்பட்டுக் கொண்டால் அவர்கள் நாடு முழுவதிலும் அரக்க குணங்களைத்தான் பரவச் செய்வார்கள். இந்த ஆட்சி புரியும் உரிமை நேர்மையான நல்லவர்களிடம் இருந்தால் அவர்களால் ஆளப்படும் நாடு மற்ற நாடுகள் பார்த்து பின்பற்றும் அளவுக்கு, உலகமே போற்றும் அளவுக்கு உயர்ந்த நிலையை அடையும். யோகி அரவிந்தர், “இலக்குமி நல்லவர்களிடம் குடிகொண்டிருந்தால் உலகம் முழுவதிலும் அமைதியும் மகிழ்ச்சியும் நிலவும்; அதே இலக்குமி அரக்கர்களிடம் மாட்டிக்கொண்டாலோ உலகமே துன்பத்தில் உழலும்” என்று கூறியுள்ளார். சத்வ குணமுடைய நல்ல மனிதர்களுக்கு (தேவாத்மாக்களுக்கு) பணம் தேவை; உண்மையில் அவர்களின் தனிப்பட்ட ஆடம்பரம், கேளிக்கை போன்றவைகளுக்கோ அல்லது மற்றவர்களுக்குத் தீங்கிழைக்கவோ அப்பணம் தேவைப்பட வில்லை. தங்களின் நிலையை உறுதிப்படுத்திக்கொண்டு தெய்வீக நிலையை அழியாமல் காப்பதற்காகவும் உலகெங்கும் தெய்வீக உணர்வை வளர்ப்பதற்காகவும் அவர்களுக்கு பணம் தேவைப்படுகிறது. அன்னம் (உணவு)முதலான உலகியல் ஆதாரங்கள் இலக்குமியின் அடையாளச் சின்னங்களாக உயர்ந்தவர்களால் கருதப்படுகின்றன. இவ்வாறு ‘அன்னமே தேவனின் பர்கா’ என்பது, ‘அன்னமே நல்லவர்களின் வலிமை; அன்னம் (பணம் முதலான உலகியல் ஆதாரங்கள் ) இல்லாவிட்டால் சத்வகுணம் படைத்த நல்லவர்கள் தளர்ந்து செயலற்றுப் போய்விடுவார்கள். உலகம்

அமைதியையும் மகிழ்ச்சியும் இழந்துவிடும்' என்ற உண்மையை உட்பொருளாகக் கொண்டுள்ளது.

3. மூன்றாவது விடையான 'தீ' என்ற பதம், கர்மாவைக் குறிக்கிறது. அந்த கர்மாவின் மூலம்தான் கடவுள் நம்மை ஊக்குவிக்கும் தூண்டுகோலாக அமைகிறார். அவர் நம்மை உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்வதும் அந்தக் கர்மாவின் மூலம்தான். இதன் தெளிவுரை, "தீ" என்ற சொல், 'வேலை செய்வதற்கு வேண்டிய ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அளிக்கும் நுண்ணறிவு' என்று பொருள்படும். ஒரு மனிதன் எந்த அளவுக்குக் கடவுள் அருளைப் பெற்றிருக்கிறானோ அந்த அளவுக்குத்தான் அவனுடைய ஞானம் என்னும் மேலான அறிவு அமைகிறது. ஒருவன் எந்த அளவுக்கு ஆர்வத்துடனும், உற்சாகத்துடனும் அக்கறையுடனும் பாடுபட்டு உழைக்கிறான் என்பதைக்கூர்ந்து கவனித்து, அவன் கடவுளின் ஆசிகளைப் பெற்றிருக்கிறானா, இல்லையா என்பதைக் கண்டு கொள்ளலாம். இயற்கையாகவே அவ்வாறு பாடுபடுபவன் கடவுளின் 'தீ' என்ற அம்சத்தை அந்தந்த கடவுளின் திருவருளால் பெற்றவனாவான்.

பல மனிதர்கள் சோம்பேறிகளாயும், பலனற்றவர்களாயும், தாழ்ந்த குணம் உள்ளவர்களாகவும் வாழ்க்கையில் ஏமாற்றம் அடைந்தவர்களாகவும் இருப்பதைக் காண்கிறோம். அவர்கள் எந்த வேலையிலும் ஆர்வம் காட்டுவதில்லை; செய்யும் வேலையையும் அரை மனதுடனேயே செய்வார்கள். ஒரு சிறிய வேலையைச் செய்தால்கூட அவர்கள் களைப்பும், சோர்வும் அடைந்து விடுவார்கள். அவர்களெல்லாம் கடவுளின் 'தீ' என்ற அருள் பிரசாதத்தைப் பெறாதவர்கள். அவர்கள் கடவுளின் திருவருளைப் பெறுவதற்குத் தகுதியற்றவர்கள். அவர்களுக்கு வேலையில் ஆர்வத்தையும் ஊக்கத்தையும் உண்டாக்கக்கூடிய நுண்ணறிவு இல்லாததால் அவர்கள்

துரதிர்ஷ்டசாலிகளாக இருக்கவேண்டியதுதான். இது யாவர்க்கும் எளிதில் புரியும் வெளிப்படையான உண்மை.

'அவர் அதிர்ஷ்டசாலி; வளமாக வாழ்கிறார்; நான் துரதிர்ஷ்டம் பிடித்தவன்; துன்பத்தில் உழல்கிறேன்' என்று குறைப்பட்டுக் கொள்பவர்கள் கடவுள் அருளைப் பெறாதவர்கள். ஆனால் இந்த கடவுள் அருளோ எளிதில் கிடைக்கக்கூடியது. முயன்றால் அதை யார் வேண்டுமானாலும் பெறலாம். யார் "தீ" என்ற அம்சத்தைக் கைக்கொள்கிறார்களோ அவர்கள் கடவுள் அருளை நிச்சயமாகப் பெறுவர். அதாவது யார் ஊக்கத்துடனும் தளராமுயற்சியுடனும் பாடுபட்டு உழைக்கிறார்களோ அவர்கள் எப்படியும் வாழ்க்கையில் முன்னேறுவார்கள். ஏனெனில் கடவுள் முயற்சியுடையார் எவருக்கும் அருளை வழங்காமல் இருப்பதில்லை. இதைத்தான் ஏசுநாதர், "கேள், கொடுக்கப்படும். தட்டு, திறக்கப்படும்" என்றார்.

சவிதா என்பது என்ன? சாவித்ரி என்பது என்ன? இதுதான் மைத்ரேயர் கேட்ட மூன்றாவது வினா. ஒவ்வொரு மந்திரத்திற்கும் ஒரு தேவதை உண்டு. சவிதா என்பது காயத்ரி மந்திரத்தின் தேவதை. சவிதா, சாவித்ரி இரண்டும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாதவை. உண்மையில் அவை இரண்டும் ஒன்றுதான். சவிதா சக்தியின் பிறப்பிடம்; சாவித்ரி சவிதாவிலிருந்து வெளிப்படும் சக்தி. சக்தி வெளிப்பட்டால் ஒழிய அதை அறிந்துகொள்ள முடிவதில்லை. எடுத்துக்காட்டாக ஒவ்வொரு அணுவும் ஒரு சவிதா. ஒவ்வொரு அணுவும் அளவிடமுடியாத சக்தியின் நிலைக்களம். ஒரு அணு வெடிப்பதால் இந்த உலகத்தையே அழித்துவிட முடியும். அந்த அணு வெடிக்கும் போது வெளிப்படும் ஆற்றல் சாவித்ரி. அந்த அணு முதல் பேரண்டம் வரை ஒளிமயமாக வியாபித்துள்ள ஆண்டவனே சவிதா. அந்த ஆண்டவனின் சக்தியே சாவித்ரி. கடவுள் அறிவுக்கு அப்பாற்பட்டவர்; உருவமற்றவர்; பற்றற்றவர். நாம் கடவுளிடமிருந்து பெறும் பயன்களை

எல்லாம் சாவித்ரி மூலமாகவே பெறுகிறோம்.

உபநிடதங்களில் சவிதா, சாவித்ரி இரண்டையும் விளக்க பல எடுத்துக்காட்டுகள் உள்ளன. 1. மனம் சவிதா என்றால் பேச்சு சாவித்ரி. இதேபோல் பூமி சவிதா; அதிலிருந்து வெளிப்படும் தீ சாவித்ரி, வானவெளி சவிதா; காற்று சாவித்ரி; உணவு சவிதா, அதிலிருந்து கிடைக்கும் உயிர் ஆற்றல் சாவித்ரி. வேதம் சவிதா, சந்தம் சாவித்ரி. யக்ஞம் சவிதா, தட்சணை சாவித்ரி. உபநிடதங்கள் இத்தகைய எடுத்துக்காட்டுகளைக் கொண்டு விளக்கும் உண்மை, "எந்த ஒரு பொருளும் தனியாக இல்லை; அப்படி ஒரு பொருள் இருந்தால் அது வெளிப்பட முடியாது. அதன் சக்தி வெளிப்படும்போதுதான் அந்தப் பொருளையே கண்களால் காணமுடிகிறது. மற்ற புலன் உணர்வுகளால் அனுபவிக்க முடிகிறது. கடவுளும் அப்படித்தான். அறிவுக்கு அப்பாற்பட்ட ஆண்டவனை (சவிதாவை) அவரிடமிருந்து வெளிப்படும் சக்தியைக் (சாவித்ரி) கொண்டுதான் அறியமுடிகிறது. இந்த தத்துவத்தை சிவசக்தி ஐக்கியத்தை சவிதா, சாவித்ரி இணைப்பை விளக்கும் உருவமே "அர்த்த நாரீஸ்வரர்" திருவுருவம். லக்ஷ்மி-நாராயணன், சீதா-ராமன், ராதா-கிருஷ்ணன், உமா சங்கரன் முதலான தெய்வப் பெயர்களும் இந்தத் தத்துவத்தின் விளக்கமே ஆகும். மனித உடலில் உள்ள ஆன்மா (ஜீவன்) சவிதாவாகும். அந்த ஆன்மாவின் வெளிப்பாடாக வரும் உணர்ச்சி, எண்ணம், செயல் ஆகியவை (மாயை) சாவித்ரியாகும். மனிதனின் சக்தி எந்த அளவுக்குச் செயல்படுகிறதோ அந்த அளவுக்கு அவனுக்கு வளர்ச்சி இருப்பதை நாம் காணமுடியும். மனிதன் சக்தியின் பிறப்பிடம்(சவிதா) அவனிடமிருந்து வெளிப்பட்டு செயல்களாக உருவாவது சக்தி (சாவித்ரி). சக்தி வாய்ந்தவனிடமிருந்து சக்தியைப் பிரித்து விட்டால் அவன் செயலற்ற ஜடமாக (பிணமாக) ஆகிவிடுகிறான். சக்தி அவனிடமிருந்து வெளிப்படாமல் குளத்து நீரைப்

போல் தேங்கிக் கிடந்தால் அதுவும் பாழாகிவிடுகிறது. எனவே சக்தியுள்ள மனிதனும் அவனிடமிருந்து வெளிப்படும் சக்தியும் சவிதாவும் சாவித்ரியும் ஒன்றை ஒன்று சார்ந்து இருப்பவை; ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாதவை. எவன் ஒருவன் தன்னிடமிருந்து பிரிக்க முடியாதபடி அமைந்துள்ள சக்தியை மதித்து நடக்கிறானோ அவன் தன் சக்தியை தவறான வழியில் பயன்படுத்தி தனக்கே அழிவைத் தேடிக்கொள்ள மாட்டான்; சிந்தித்து தன் சக்தி முழுவதையும் நல்வழிகளில் பயன்படுத்தி தானும் வளர்ச்சி பெறுவான்; மற்றவர்கள் வாழவும் உதவி புரிவான்.



# 20. காயத்ரி சாதனையும் குண்டலினி யோகமும்

மனித உடலில் பல "உயிராற்றலின் ஆதார மையங்கள்" உள்ளன. அவற்றில் ஆன்மீக ஆற்றல்கள் மறைந்து புதைந்துள்ளன. அவற்றை விழிப்படையச் செய்துவிட்டால் மனிதன் தெய்வீக ஆற்றல்கள் சுரக்கும் ஊற்றாக மாறிவிடுவான்.

அந்த மையங்களில் முக்கியமானது முதுகெலும்பு. அது 33 சிறு எலும்புகளை அடுக்கி கோர்த்து வைத்துள்ளது போல் அமைந்துள்ளது. அந்த 33 எலும்புகளும் 33 தேவதைகளின் பிரதிபலிப்புகளாக உடலுக்குள் உள்ளன. அந்த தெய்வங்களாவன : அஷ்ட வசுக்கள் : 8; ஆதித்யர்கள் : 12; ருத்ரர்கள் : 11; .இந்திரன்: 1; பிரஜாபதி :1.

உடற்கூறு அடிப்படையில் முதுகுத்தண்டினுள் பல ஆற்றல்களின் இயக்கம் நடைபெறுகிறது. அவைகளில் இடகலை, பிங்கலை, சுஷும்னா என்பவை முக்கியமானவை. அவை நுண்ணுடலைச் சார்ந்தவை; ஆகையால் அவற்றை கண்களால் (எக்ஸ்ரே, ஸ்கேனிங் முதலியவை மூலம்

தவிர) பார்த்து அறிய முடியாது. உண்மையில் இவை மின்னாற்றலைப் போன்ற கண்களுக்குத் தெரியாத ஆற்றல்கள். மின்னாற்றலில் நேர் துருவம், எதிர் துருவம் என்று இரு துருவங்கள் உள்ளது போல் இவைகளிலும் துருவங்கள் உண்டு. இடகலை என்னும் எதிர்துருவம்; பிங்கலை என்னும் சூரியநாடி நேர்துருவம். இடகலை குளிர் மின்னோட்டம். பிங்கலை வெப்ப மின்னோட்டம். இந்த இரு துருவங்களும் இணையும்போது ஒரு புதிய ஆற்றல் பிறக்கிறது. அதற்கு சுஷூம்னா என்று பெயர்.

பிரயாகையில் கங்கையும், யமுனையும் சந்திக்கும் இடத்தில் சரஸ்வதி என்னும் ஒரு புதிய சக்தி வெளிப்பட்டுள்ளதைப் போன்றது, இந்த சுஷூம்னா, இடகலை, பிங்கலை, சுஷூம்னா ஆகியவற்றின் திரிவேணி சங்கமம் நிகழும் இடம் மூளையின் நடுபாகம். அந்த மூளைப் பகுதிக்கு பிரமரந்திரம் அல்லது சகஸ்ரார கமலம் என்று பொய். இந்த மூளைப் பகுதி ஆண்/பெண் பால் உறுப்புகளின் மையப்பகுதியுடன் நேரடியாக மின்னாற்றல் தொடர்பு கொண்டுள்ளது.

சுஷூம்னா நாடியில் நுண்மையான மூன்று மின்னோட்டங்கள் உள்ளன. அவை 1.வஜ்ரநாடி, 2. சித்ரநாடி, 3. பிரம்ம நாடி என்பனவாகும். வஜ்ரநாடிக்கும், சித்ரானி நாடிக்கும் நடுவில் பிரம்ம நாடி இயக்கம் உள்ளது. இந்த பிரம்ம நாடிதான் சக்திமையம். மற்ற நாடிகள் எல்லாம் இதற்கு பாதுகாப்பாக உள்ளவைகள்தான்.

பிரம்மநாடி பிரமரந்திரத்தை அடைந்தவுடன் 1000 கிளைகளாக பிரிகிறது. அதனால்தான் இப்பகுதியை சகஸ்ரதள கமலம் (ஆயிரம் இதழ் தாமரை) என்று கூறுகிறார்கள். இவ்விடத்தை ஆயிரம் தலை படைத்த ஆதிசேஷன் என்றும் கூறுவார்கள். இந்த சகஸ்ர கமலத்தை மூளையின் ஏரியல் அமைப்பு என்று கூறலாம். இந்த ஏரியல் பிரபஞ்சவெளி முழுவதும் பரவியுள்ள

பரபிரம்மத்தின் தெய்வீக ஆற்றலை ஈர்த்து மனிதனுக்கு வழங்கும் வானொலி ஈர்ப்பு மையமாகும். எவ்வாறு பசியுடன் கூடிய மலைப்பாம்பு மூச்சை உள்ளிழுப்பதன் மூலமே பறக்கும் பறவையையும் இழுத்து வாய்க்குள் கொண்டு வந்து விடுகிறதோ அதைப் போல சகஸ்ர கமலம் என்று அழைக்கப்படும் 1000 படங்களுடைய ஆதிசேஷன் எங்கும் பரந்து விரிந்துள்ள வானவெளி யிலிருந்து தெய்வீக ஆற்றலைக் கவர்ந்து இழுக்கிறது. கோபங்கொண்ட மலைப்பாம்பு சீறும் பொழுது வேகமாக வெளிப்படும் மூச்சு சுற்றுப்புறம் எங்கும் விஷத்தைப் பரப்பி விடுகிறது. அதுபோல ஆன்ம ஒளிபெற்ற சகஸ்ர கமலம் வெளிப்படுத்தும் வலிமையான உணர்வு அலைகள் இந்த உலகில் உள்ள உயிரினங்களையும் அதோடு மற்ற உலகங்களில் வாழ்பவர்களையும் கூட கவர்ந்திழுக்க வல்லவை. அந்த ஆன்ம ஒளி பெற்றவரின் எண்ணங்களை எல்லா உலகங்களிலும் பரப்பவும் வல்லவை.

பிரம்ம நாடியின் அடிபாகம் முதுகுத்தண்டின் கீழ்ப் பகுதியில் உள்ளது. அப்பகுதியில் அறுகோணவடிவில் கருப்பு நிறத்தில் ஒரு சிறிய அணு உள்ளது. அந்த அணுவைச் சுற்றி கயிற்றால் கட்டியிருப்பது போல் இந்த பிரம்ம நாடி சுற்றிப் பிணைத்துள்ளது. இந்த பிணைப்பால்தான் மனித உடலில் பிராணன் தங்கியுள்ளது. இந்த அணு பார்வைக்கு ஆமைபோல் இருப்பதால் இதற்கு கூர்மம் என்று பெயர். கூர்மாவதாரத்தில் உள்ள பரம்பொருளான திருமாலின் மீது நாம் வாழும் பூமி தங்கியுள்ளது என்பது கூர்ம புராணம். ஆதிசேஷன் பூமியைத் தாங்கிக் கொண்டிருக்கிறார் என்ற புராணக் கருத்துப்படி பார்த்தாரல் "கூர்மத்தை சுற்றியுள்ள பிரம்ம நாடிதான் உடலில் உயிரைத் தங்க வைத்துள்ளது; இந்த பிரம்ம நாடியின் பிடி தளர்ந்துவிட்டால் அதோடு மனிதனின் உயிர் வாழ்க்கையும் முடிந்துவிடும்" என்ற உண்மை புலனாகிறது.

எந்த இடத்தில் பிரம்ம நாடி கூர்மத்துடன்

இணைந்து உள்ளதோ அந்த இடத்திற்கு குண்டலினி என்று பெயர். அங்கே பிரம்ம நாடி கூர்மத்தை 3½ சுற்றுகள் சுற்றியுள்ளது. நாடியின் தலைபாகம் கீழே இருப்பதுபோல் சுற்றுக்கள் அமைந்துள்ளன. அதனால்தான் திருமண காலத்தில் மணமகளும், மணமகனும் தலை குனிந்த வண்ணம் மணவறையை 3½ சுற்றுகள் சுற்றிவருகிறார்கள். பிரம்ம நாடியும் கூர்மமும் இணைபிரியாது இருப்பது போல் அந்த தம்பதிகள் ஒன்றுபட்டு வாழ்வார்கள் என்பதே இதன் தத்துவம். குண்டலினி முக்கியமான ஒன்று. ஏனெனில் பிராணன் உடலுடன் இணைந்திருப்பது இந்த குண்டலினி ஆற்றலால்தான்.

தற்கால அணுஇயல் விஞ்ஞானிகள் அணுவைப் பிளந்து எவ்வளவு பெரிய சாதனையையும் புரிந்து விடலாம் என்று நிரூபித்துள்ளார்கள். பழங்கால ரிஷிகளும் இவர்களைப் போல் பெரிய விஞ்ஞானிகளே. அவர்கள், மனித உடலில் விதை உருவில் இருந்த அணுவை ஆராய்ந்தார்கள். ஒரு அணுவைப் பிளப்பதற்கும் இரண்டு அணுக்களை இணைப்பதற்கும் அவற்றின் மூலம் பெரிய மாற்றங்களை உண்டாக்குவதற்கும் மனித உடலில் மிகவும் பொருத்தமான இடம் குண்டலினி மையம்தான் என்ற உண்மையைக் கண்டுபிடித்தார்கள். உடலில் உள்ள உயிர் அணுக்கள் எல்லா இடங்களிலும் வட்டமாகவும், மிருதுவாகவும் உள்ளன. ஆனால் குண்டலினியில் உள்ள உயிரணுக்கள் மட்டும் இரட்டை இரட்டையாக உள்ளன. இந்த இரட்டை அணுக்கள் ஒன்றை ஒன்று இறுகப் பற்றிக் கொண்டுள்ளன. அதனால்தான் அவர்கள் இந்த இடத்தை தேர்ந்தெடுத்தார்கள். யுரேனியம், புளூட்டானியம், உலோகங்களில் அணுக்கள் சாய்வாகவும் ஒழுங்கற்ற முறையிலும் இணைந்திருக்கும். அதனால் மற்ற உலோக அணுக்களை பிளப்பதைவிட, இந்த உலோகங்களின் அணுக்களைப் பிளப்பது எளிது. அதைப்போல் குண்டலினியில் உள்ள அணுக்களை ஒருவர் தன்

விருப்பத்திற்கு உகந்த முறையில் மாற்றி அமைப்பது எளிது. இந்த ஆராய்ச்சிகளின் விளைவாக அக்கால ரிஷிகள் பல ரகசியங்களை கண்டுபிடித்தார்கள். அவைகளே இக்காலத்தில் யோக சாதனையின் அற்புதங்கள் என்று கருதப்படுகின்றன.

குண்டலினியைப் பற்றி மேடம் ப்ளாவட்ஸ்கி "குண்டலினி என்பது எங்கும் பரவியுள்ள நுட்பமான மின்னாற்றல். அது புவி மின் ஆற்றலைவிட மிகவும் சக்தி வாய்ந்தது. அதன் இயக்கம் பாம்பு ஊர்வதைப் போன்று வளைவானது. அதன் உருவ அமைப்பும் பாம்பைப் போன்றதே. ஒளியின் வேகம் ஒரு நொடிக்கு 1,85,000 மைல்; குண்டலினியின் வேகம் நொடிக்கு 3,45,000 மைல்" என்று கூறியுள்ளார். மேலை நாட்டு விஞ்ஞானிகள் அதை "ஆன்மத்தீ" அல்லது "நாகசக்தி" என்று குறிப்பிடுகிறார்கள். சர் ஜான் உட்ராஃப் அதைப்பற்றி விளக்கமாக ஆராய்ந்திருக்கிறார்.

குண்டலினி ரகசிய ஆற்றல்களின் பாதுகாப்புப் பெட்டகம். ஒவ்வொன்றாக 6 பூட்டுகளைத் திறந்து கொண்டு உள்ளே சென்றால்தான் அந்த இரகசிய ஆற்றல்களைப் பெற முடியும். அந்த ஆறு பூட்டுகளுக்கும் ஆறு சக்கரங்கள் என்று பெயர். எல்லா மனிதர் களிடத்திலும் இந்தப் பெட்டகம் புதைந்து கிடக்கும் புதையலைப் போல் செலற்று இருளில் புதைந்து கிடக்கிறது. ஆனால் அதை விழிப்படையச் செய்து விட்டால் அது அந்த இருட்டறையை விட்டு வெளிப்பட்டு ஆன்மீக ஆற்றல்களைப் பெறுவதற்கு புறப்பட்டு விடுகிறது. குண்டலினி விழிப்புணர்ச்சி பெற்ற ஒரு யோக சாதகர், "குண்டலினி தேயின் திருவருளால் எல்லா நற்பண்புகளும் வந்து சேர்கின்றன. எல்லா சித்திகளும் முயற்சியின்றி கிடைத்து விடுகின்றன. இந்த குண்டலினி விழிப்புணர்ச்சி பெற்றவர்கள் நூறாண்டுகாலம் நோயின்றி நல்வாழ்வு வாழலாம். வாழ்க்கையே

இறைவனுக்கு செய்யும் தொண்டாக அமையும். மரணம் அணுகாது. கடவுளின் விருப்பத்திற்கு இணங்க நாமாகவே பூதவுடலை விட்டு விண்ணுலகு செல்லலாம். அச்சமற்ற இன்பவாழ்வு வாழலாம். எப்பொழுதும் அவர் தேவியின் பராமரிப்பில் பத்திரமாக இருப்பதை உணரமுடியும். சுருங்கக் கூறின், குண்டலினி விழிப்பு பெற்றவன் சர்வசக்தி வாய்ந்தவனாகவும், தெய்வீக நோக்குள்ளவனாகவும், நித்யானந்தம் உள்ளவனாகவும் மாறுகிறான்'' என்ற கூறுகிறார்.

மூளைப் பகுதியில் உள்ள சகஸ்ரதளமும் எல்லோருக்கும் இருளில் செயலற்றுதான் இருக்கிறது. குண்டலினியையும் இந்த சகஸ்ர தளத்தையும் விழிப்படையச் செய்தவன் உலகில் எதை வேண்டுமானாலும் அடையும் சக்தியைப் பெறுகிறான் என்று யோக சாஸ்திரங்கள் கூறுகின்றன.



# 21. ஆறு ஆதாரங்கள்

ஆன்மா குண்டலினி ஆற்றல் தோன்றும் இடத்தைச் சென்றடைய ஆறு வாயில்களைத் தாண்டிச் செல்ல வேண்டும். ஒவ்வொரு வாயிலும் ஒரு ஆற்றல் மையம். இந்த ஆறு ஆற்றல் மையங்களும் ஷட் சக்கரங்கள் என்று அழைக்கப்படுகின்றன. இவைகள் ஆறும் சுஷும்னாவின் நடுபாகத்தில் உள்ள பிரம்ம நாடியுடன் தொடர்பு உடையவை. மூலாதாரச் சக்கரம் பால் உறுப்புப் பகுதியில் உள்ளது. சுவாதிஷ்டானச் சக்கரம் தொப்பூழுக்கும் பால் உணர்வுப் பகுதிக்கும் இடைபட்ட பகுதியில் உள்ளது.

மணிபூரகச் சக்கரம் தொப்பூழ் பகுதியில் உள்ளது. அனாஹத சக்கரம் இதயத்திற்கு அருகில் உள்ளது. விஷுத்தாக்ய சக்கரம் கழுத்துக்கு அருகில் உள்ளது. ஆக்ஞைச் சக்கரம் புருவ மையத்தில் உள்ளது. சகஸ்ராரம் ஆக்ஞைச் சக்கரத்திற்கு மேலே உள்ளது.

சுஷும்னாவும் அதனுள் உள்ள வஜ்ரநாடி, சித்ராணி நாடி, பிரம்மநாடி ஆகிய மூன்று நாடிகளும் மிகவும் நுட்பமானவை. அவைகளைக் கண்களால் காண முடியாது. ஆறு ஆதாரங்கள் இந்த மூன்று நாடிகளையும் விட நுட்மானவை. அதனால் இவை இந்த இடங்களில் தான் உள்ளன என்று உறுதியாக வரையறுத்துக்கூற முடியாது. யோகிகள் தங்கள் ஞானக் கண்களால் இவைகளைக் கண்டிருக்கிறார்கள். இந்த ஆறு ஆதாரங்களும் பிரம்மநாடி செல்லும் பாதையில் உள்ள ஆறு முடிச்சுகளை (கிரந்திகளை)ப் போன்றவை. ஒரு சாதகன் இந்த ஆறு ஆதாரங்களிலும் மனதை ஒருமுகப்படுத்தி நிறுத்தினால் அந்த நுட்பமான நிலைகளில் பல புதுமையான அனுபவங்களைப் பெறுவான். இந்த கிரந்திகள் மலர்ந்துள்ள தாமரை மலர்களின் இதழ்களைப் போல் இருக்கும். அவைகளுக்கு பத்ம தளம் என்று பெயர். இந்த சக்கரங்களின் நிறங்கள் அந்தந்த பகுதியில் உள்ள ரத்த ஓட்டத்தைப் பொறுத்து மாறுபடும். அந்த நிறங்கள் இளஞ்சிவப்பு, நீலம், சிவப்பு, புகைவண்ணம் முதலியவை. இந்த வண்ணங்கள் ஒவ்வொன்றும் மண், தீ, காற்று, நீர், ஆகாயம் ஆகியவற்றின் தன்மையைப் பொறுத்தவை. இந்த பஞ்சபூதச் சேர்க்கையால் சக்கரங்களின் நிறங்கள் மாறுகின்றன. பிராணவாயு இந்த சக்கரங்களைத் தீண்டும்போது இவை ஒவ்வொன்றும் வளைந்தும் நெளிந்தும் சில தேவநாகரி எழுத்துக்களின் உருவங்களில்

அமைகின்றன. அவைகள் ஒவ்வொரு சக்கரத்திற்கும் அமைந்த எழுத்துக்களாகும்.

அதிவேகமாக பெருக்கெடுத்து ஓடும் ஆற்றில் ஆங்காங்கே நீர்ச்சுழிகள் ஏற்படுவதைக் காணலாம். அது போல சுஷும்னாவில் பிராணவாயு பெருகி ஓடும் போது இந்த ஆறு ஆதாரங்களிலும் நுட்பமான பிராணவாயு சுழற்சி ஏற்படுகிறது. அவை சதுரவடிவிலும், முக்கோண வடிவிலும், அறுகோண வடிவிலும், வட்ட வடிவிலும், அரைவட்ட வடிவிலும், லிங்க வடிவிலும் உருவாகின்றன. நெருப்பு எரியும்பொழுது அதன் ஜ்வாலை அடியில் பருமனாகவும், மேலே மெலிந்து குறுகியும் உள்ளதல்லவா? அதுபோல பிராணவாயு மேற்செல்லும்போது அதன் சுழற்சியில் ஒழுங்கற்ற முக்கோணங்களும் பிற வடிவங்களும் உண்டாகின்றன. இந்த வடிவங்களுக்கு சக்கரங்களின் யந்திரங்கள் என்று பெயர்.

மனித உடல் பஞ்சபூதங்களால் ஆனது. உடல் உறுப்புகள் இந்த பஞ்சபூதங்களின் கலவையாலேயே ஆளப்படுகின்றன. ஒரு பகுதியில் மண்ணின் அளவு அதிகம் இருக்கும். இன்னொரு பகுதியில் நீர் அல்லது காற்றின் ஆதிக்கம் அதிகம் இருக்கும். தீ அதிகமாக உள்ள உடற்பகுதிகளும் உண்டு. ஆகாய அம்சத்தால் நிறைந்த பகுதிகளும் இருக்கின்றன. உடலின் ஏதாவது ஒரு பகுதியில் பஞ்சபூதச் சேர்க்கை விகிதம் மாறுபட்டால் அந்தப் பகுதியில் நோய் ஏற்படுகிறது. ஆறு ஆதாரச் சக்கரங்களிலும் பஞ்சபூதங்கள் செயல்படுவதில் ஒரு சிறப்பு உள்ளது. ஒவ்வொரு சக்கரத்திலும் நிலம், நீர், காற்று, தீ, ஆகாயம் இவைகளில் ஏதேனும் ஒரு பூதம் முக்கிய அங்கம் வகிக்கிறது.

பிராணவாயு பிரம்மநாடி வழியே செல்லும்போது சக்கரங்கள் ஒவ்வொன்றின் இடையில் உள்ள துளைகள் வழியே புகுந்து செல்கிறது. அப்போது புல்லாங்குழலில்

உண்டாகும் ஒலியைப்போல் ஒருவகை இசை ஒலி உண்டாகிறது. புல்லாங்குழலில் உண்டாகும் ச, ரி, க, ம, ப, த, நி ஆகிய சுரங்களைப்போல், ஆதாரச் சக்கரங்களில் ஞ, ல்ன, ர்ன ஹ்ன, ஓம் என்ற ஒலிகள் எழுகின்றன. இந்த ஒலிகளே சக்கரங்களிலிருந்து வெளிப்படும் உயிர் ஆதாரங்கள். இவைகளை சக்கரங்களின் விதைகள் என்று குறிப்பிடுவார்கள்.

சக்கரத்திற்கு சக்கரம் சுவாசத்தின் வேகம் மாறுபடுகிறது. சுவாச ஓட்டமும், இரத்த ஓட்டமுமே இதற்கான காரணங்கள். இந்த ஆறு சக்கரங்களிலும் பலவகையான தெய்வீக சக்திகள் உள்ளன. படைத்தல், காத்தல், அழித்தல், வலிமை, கல்வி, செல்வம் முதலான ஒவ்வொரு ஆற்றலுக்கும் ஒவ்வொரு தெய்வம் உள்ளது. வெப்பமான ஆண்தன்மையும் குளிர்ச்சியான பெண்தன்மையும் இல்லையென்றால் உயிர் ஓட்டமும் இல்லை; வேறு எவ்வித இயக்கமும் கூட இருக்காது. ஒவ்வொரு சக்கரத்திலும் இந்த இரண்டு தன்மைகளும் உள்ளன.

ஐந்து பூதங்களும் ஐந்து வகையான புலன் உணர்வுகளுக்கு காரணமானவை. அவைகளில் வாசனை பூமி அம்சம்; சுவை நீர் அம்சம்; காட்சி தீ அம்சம்; தொடு உணர்வு காற்றின் அம்சம்; ஒலி ஆகாய அம்சம். ஆறு சக்கரங்களிலிருந்து வெளிப்படும் நுட்பமான ஆற்றல் உடல் முழுவதும் பரவுகிறது. எனினும் ஒவ்வொரு சக்கரமும் ஒவ்வொரு உணர்ச்சி உறுப்புடனும் சம்பந்தப்பட்டது. ஏதேனும் ஒரு சக்கரத்தில் விழிப்புணர்ச்சி ஏற்பட்டால் அதன் பின் விளைவை அந்த சக்கரம் சம்பந்தப்பட்ட புலன் உறுப்பு செயல்படும் தன்மையைக் கொண்டு அறியலாம்.

தாகினி, ராகினி, ஷாகினி, ஹாகினி போன்ற தெய்வசக்திகளின் பெயர்களைக் கேட்கும்போது

அவைகள் பேயோ, பிசாசோ என்ற எண்ணம் உண்டாகிறது. காரணம் இம்மாதிரி பெயர்களை தவறாகப் புரிந்து கொண்டுள்ளதுதான். வாயிலிருந்து தொப்பூழ் வரை வட்டவடிவமான மணிகளைக் கோர்த்த சங்கிலிபோல் எழுத்துக்களால் ஆன ஒரு சங்கிலித்தொடர் உள்ளது. அந்த எழுத்துத் தொடர், 'அ'வில் தொடங்கி 'ஹ' வில் முடிகிறது. இந்த சங்கிலித் தொடரில் இணைந்துள்ள எழுத்துக்களுக்கு ஒவ்வொன்றுக்கும் 'மாத்ரிகா' என்று பெயர். ஒவ்வொரு சக்கரத்தின் தெய்வமும் ஒரு மாத்ரிகாவுடன் இணைக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு மாத்ரிகாவும் வெவ்வேறு என்பதை உணர்த்தும் வண்ணம் கினி என்ற சொல்லின்முன் தா, ரா, லா, கா, ஷா போன்ற எழுத்துக்களை இணைத்து ஒவ்வொரு சக்கரத்தின் தேவதையின் பெயரும் உருவாக்கப்பட்டுள்ளது. அவ்வாறு வந்தவைகளே தாகினி, லாகினி, காகினி போன்ற தேவதைகளின் பெயர்கள்.

## மூலாதாரச் சக்கரம்

அமைந்துள்ள இடம்: குதத்திற்கு அருகில்; உலகம்: பூலோகம்; இதழ்களில் உள்ள எழுத்துக்கள்: வங், ஷ்யங், ஷங், சங்; பஞ்சபூதத் தத்துவம்: மண்; மூல அட்சரம்: லங்; வாகனம்: யானை; சுவை: வாசனை; தேவதை: தாகினி; யந்திரம்: நாற்கர வடிவம்; புலன் உறுப்பு : மூக்கு, செயல் உறுப்பு : குதம்; இந்த மூலாதார தியானத்தின் பலன்கள்: சொல்லாற்றல், மனிதருக்குள் தனிச்சிறப்பு, கலிவியில் ஆர்வம், உடல்நலம், மகிழ்ச்சி, எழுத்தாற்றல், கவிதை புனையும் திறன் ஆகியவை தோன்றி வளரும்.

## சுவாதிஷ்டானச் சக்கரம்

அமைந்துள்ள இடம்: தொப்பூழுக்குக் கீழே (ஆண், பெண் குறிகளுக்கு அருகில்); இதழ்கள்: ஆறு; நிறம்:

சிவப்பு (செந்தூர நிறம்); உலகம்: புவர்லோகம்; இதழ்களில் உள்ள எழுத்துக்கள்: வங், பங், யங், ரங், லங். பஞ்சபூதத் தத்துவம்: நீர்; மூலாதார அட்சரம்: வங்; அட்சரத்தின் வாகனம்: முதலை; சுவை: ரசம் (நாவின்சுவை); தெய்வம்: விஷ்ணு; தெய்வசக்தி: தாகினி; யந்திர வடிவம்: மூன்றாம் பிறை; புலன் உறுப்பு: நாக்கு; செயல் உறுப்பு: விந்துத்தானம் (கரு உற்பத்தித் தானம்); இந்த மைய தியானத்தின் விளைவு: வீண் ஆடம்பரம், பிடிவாதம் வீண் கௌரவம் போன்றவை விலகல்; அர்த்தமற்ற கற்பனை, பற்று முதலியவை நீங்குதல்; படைப்பாற்றல் (புதிதாக பொருள்களை உற்பத்தி செய்யும் திறன்)

## மணிபூரகச் சக்கரம்

அமைந்துள்ள இடம்: தொப்பூழ்; இதழ்கள்: பத்து; நிறம்: நீலம்; உலகம்: சுவர்க்கம்; இதழ்களில் உள்ள எழுத்துக்கள் டங், ட்டங், ணங், தங், த்தங், தங், நங், ட்ங், பம்; மூலாதார அட்சரம்: ரங்; வாகனம்: செம்மறியாடு; சுவை: காட்சி (தோற்றம்); தெய்வம்: ருத்ரன்; தேவதை: ஷாகினி; யந்திர வடிவம்: முக்கோணம்; புலன் உறுப்பு: கண்; செயல் உறுப்புகள்: பாதங்கள்; இந்த மைய தியானத்தின் பலன்கள்: அழிக்கும் சக்தி, காக்கும் ஆற்றல், சொன்னதை செய்து முடிக்கும் ஆற்றல்.

## அனாஹதச் சக்கரம்

அமைந்துள்ள இடம் : இதயம்; இதழ்கள்: பன்னிரண்டு; நிறம்: செம்பழுப்பு; உலகம்: மஹாஹம் இதழ்களில் உள்ள எழுத்துக்கள்: கங், க்கங், கங், கங், யங், சங், ச்சங், ஜங், ஜ்ஜங், ஞ்யங், டங், ட்டங்; பஞ்சபூதத் தத்துவம்: காற்று; தெய்வசக்தி: காகினி; யந்திர வடிவம்: அறுகோணம்; புலன் உறுப்பு; தோல்; செயல் உறுப்புகள்:

கைகள் இந்த மையத் தியானத்தின் பலன்கள்: தெய்வீக சக்தி, அறிவு, விழிப்புணர்ச்சி, புலக்கட்டுப்பாடு, கூடு விட்டுக் கூடு பாயும் ஆற்றல் ஆகியவை வந்து சேரும்.

## விஷுத்தாக்யச் சக்கரம் (விசுத்திச் சக்கரம்)

அமைந்துள்ள இடம்: கழுத்து; இதழ்கள்: பதினாறு; நிறம்: புகைநிறம்; உலகம்: ஜனகலோகம்; இதழ்களில் உள்ள எழுத்துக்கள்; அ முதல் அஹ வரை உள்ள பதினாறு எழுத்துக்கள்; பஞ்சபூதத் தத்துவம்: ஆகாயம்; மூலாதட்ர அட்சரம்: ஹங் வாகனம் யானை; சுவை; ஓசை (ஒலி); தெய்வம்: சதாசிவர் (ஐந்து முகங்களுடன் கூடியவர்); தெய்வசக்தி: ஷாகினி; யந்திர வடிவம்: வட்டம்; புலன் உறுப்பு; காது; செயல் உறுப்புக்கள்; கால்கள்; இந்த மைய தியானத்தின் பலன்கள்; மன அமைதி முக்காலமும் உணரும் ஆற்றல், நீண்ட ஆயுள் அறிவொளி (தெளிந்த ஞானம்) கொடைப் பண்பு.

## ஆக்ஞைச் சக்கரம்

அமைந்துள்ள இடம்: புருவமையம்; இதழ்கள்: இரண்டு; நிறம்:வெண்மை; இதழ்களில் உள்ள எழுத்துக்கள்: ஹங், ட்சங் மூலாதார அட்சரம்; ஓம்; பஞ்சபூதத் தத்துவம்: மாஹம், வாகனம்:ஒலி, தெய்வம்: ஜோதிலிங்கம், தேவதை:ஹாகினி, யந்திரம்: லிங்க வடிவம், உலகம்:தாபகம். இந்த மையத் தியானத்தின் விளைவு: எல்லா நோக்கங்களும் நிறைவேறும்.

மேற்கண்ட ஆறு ஆதாரங்களுடன் சஹஸ்ரதள கமலமான சூன்யசக்கரத்தையும் இணைத்து ஏழு ஆதாரங்கள் என்றும் கூறலாம். சூன்யசக்கரம் அமைந்துள்ள இடம் மூளைப்பகுதி; இதழ்கள் ஆயிரம், இதழ்களில் உள்ள எழுத்துக்கள் அங் முதல் க்ஷங் வரையுள்ள எல்லா எழுத்துக்களும் உலகம் சத்யலோகம்

மூலாதார அட்சரம்:விசர்க்கம், வாகனம்:சூன்யம், தெய்வம்:பரப்ரம்மம், தேவதை:மகாசக்தி, யந்திர வடிவம்: முழுநிலா வடிவம்,(உருவமற்ற ஒளி) இந்த மையத் தியானத்தின் விளைவுகள் ஆழ்ந்த பக்தி, மரணமில்லாப் பெருவாழ்வு, சமாதிநிலை, இவற்றோடு சகல சித்திகளும் கைகூடிவரும்.

குண்டலினி என்பது சக்தியின் பிறப்பிடம்; அது ஆன்ம ஒளி; மனித உடலை ஒட்டி உள்ளது; அது எண்ணற்ற அற்புத ஆற்றல்களை தன்னுள் கொண்டுள்ளது. அதன் ஒளி மற்ற ஆறு சக்கரங்களிலும் பிரதிபலிக்கிறது. எவ்வாறு நவ கிரகங்களும் சூரியனிடமிருந்து வெப்பம், ஒளி, ஈர்ப்பாற்றல் முதலான பல்வேறு ஆற்றல்களைப் பெறுவதுடன் சூரிய சக்திக்குக் கட்டுபட்டே சுற்றி வருகின்றனவோ அதுபோல் எல்லா சக்கரங்களும் குண்டலினியிடமிருந்துதான் சக்தியைப் பெறுகின்றன; குண்டலினி சக்தியின் ஆற்றலாலேயே இயங்குகின்றன. ஒரு பணப் பெட்டகத்தில் பல சிறு அறைகள் உள்ளன. ஒரு தேன்கூட்டில் எண்ணற்ற சிறு அறைகளில் தேன் நிறைந்துள்ளது. இவற்றைப் போலவே குண்டலினி ஒளி ஏழு சக்கரங்களிலும் பரவி நிறைந்துள்ளது. இந்த சக்கரங்கள் விழிப்புணர்ச்சி பெற்ற மாத்திரத்தில் இவற்றின் அபூர்வ சக்திளும் விழிப்புணர்ச்சி பெறுகின்றன.

## ஆதாரச் சக்கரங்களின் வாயில்களைத் திறத்தல்

ஆதாரச் சக்கரங்களைத் துளைத்துக் கொண்டு சென்று குண்டலினியை அடைந்து, அதை எழுப்பிவிட்டு ஆன்மீக வளர்ச்சிக்குப் பயன்படுத்துதல் ஒரு பெரிய அறிவியல் நுட்பம். அது ஒரு அணுகுண்டைத் தயாரித்து வெடிக்கச் செய்வதைப் போன்றது. ஒரு புத்தகத்தைப் படித்துவிட்டு குண்டலினி சக்தியை எழுப்ப முயற்சி செய்யக்கூடாது. சித்திபெற்ற ஒரு குருவிடம் தீட்சை

பெற்றே குண்டலினி யோகப்பயிற்சி செய்யவேண்டும்.

தியானத்தின் மூலமே சக்கரங்களின் வாயில்களைத் திறக்க முடியும். "மனிதனின் மூளை ஒரு சக்தியின் சேமிப்புக்கிடங்கு" என்பதும் "மனம் அந்த சக்தியின் மின்னோட்ட இயக்கம்" என்பதும் யாவரும் அறிந்த உண்மை. மன இயக்கம் ஒரே நிலையில் அமைவதில்லை. அது எப்பொழுதும் ஒன்றைவிட்டு ஒன்றுக்குத் தாவிக்கொண்டு அமைதியில்லாத நிலையிலேயே இருந்துவரும் இயல்புடையது. அதனால் உடலில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஆற்றலை சேமித்து வைக்க முடியாது. அதனால் நம்மால் எதையும் சாதிக்க முடியாமல் போய்விடுகிறது. இத்தகைய ஒருமைப்பாடு இல்லாமையால் வாழ்க்கை முழுவதும் எதற்கும் பயனற்றதாகக் கழிந்து விடுகிறது. சூரியனுடைய வெப்பக்கதிர்கள் உருப் பெருக்கிக் கண்ணாடி மூலம் ஒரு புள்ளியில் குவியும் போது அந்தப் புள்ளியில் தீ உண்டாவதை நாம் யாவரும் அறிவோம். அதேபோல மன ஒருமைப்பாட்டின் மூலம் மனித ஆற்றலை ஒரு புள்ளியில் குவியச் செய்வதன் மூலம் ஒரு சாதகன் ஆறு ஆதாரச் சக்கர வாயில்களையும் திறக்கமுடியும். எல்லா பகுதிகளிலும் சிதறி ஓடும் ஆற்றலை ஒரு இடத்தில் குவியச் செய்யும் அறிவியல் நுட்பமே தியானம். அவ்வாறு குவியச் செய்துவிட்டால் அமானுஷ்ய ஆற்றல்கள் ஊற்றெடுத்துப் பெருகும்.

குண்டலினி ஆற்றலை விழிப்படையச் செய்யும் தியானமுறையை தகுதி வாய்ந்த குருவிடம் தீட்சை பெற்றுத் தொடங்கிப் பயிலவேண்டும். இல்லையென்றால் நன்மை வருவதற்கு பதிலாக தீய விளைவுகள் ஏற்படவும்கூடும். எனினும் கீழ்க்கண்ட முறையில் பயின்றால் தீய விளைவுகள் இருக்காது. நிச்சயம் நன்மை கிடைக்கும்.

சாதகன் விடியற்காலை குளித்துவிட்டு அமைதியான

மனநிலையில் பத்மாசனத்தில் உட்காரவேண்டும். பிறகு பிரம்மசந்த்யா செய்ய வேண்டும். அதாவது பவித்ரீகரணம், ஆசமனீயம், ஷிகா வந்தனம், ப்ராணாயாமம், அக்மார்ஷணம், நியாசம் முதலியவற்றை முறையாக செய்து முடிக்க வேண்டும். பிறகு 108 முறை காயத்ரி மந்திரஜபம் செய்யவேண்டும். பிறகு வேதமாதா காயத்ரியை மனக்கண்ணால் திரிகுடியில் கண்டு தியானிக்க வேண்டும். திரிகுடி என்பது இரண்டு காதுகளையும் இணைக்கும் நேர்கோட்டிற்கு புருவ மையத்திலிருந்து ஒரு செங்குத்துக்கோடு வரைந்தால் அந்த இரண்டு கோடுகளும் சந்திக்கும் புள்ளியாகும். இந்த மையம் தமிழக சித்த இலக்கியங்களில் மனோன்மணி பீடம் என்று குறிப்பிடப்படுகிறது. சிறிது நேரம் அந்த ஒளியிலேயே மனதை நிறுத்தவேண்டும். அப்பொழுது மனம் ஒளிபெறுகிறது. பிறகு அங்கிருந்து மனதை சகஸ்ராரத்திற்கு கொண்டு செல்லவேண்டும். ஏனெனில் மனோன்மணி பீடமும் சகஸ்ராரமும் பிரம்ம நாடியால் இணைக்கப்பட்டுள்ளன. சகஸ்ராரத்தில் அங்கிருந்து நேரே ஆக்ஞைக்கு மனதைத் திருப்பி அங்கு அந்த ஒளியைக் காணவேண்டும். மனம் ஆக்ஞை சக்கரத்தில் நிலைபெறும்போது அந்த சக்கரத்தின் அனுபவங்கள் யாவும் புலப்படும். ஆரம்பத்தில் ஆக்ஞை சக்கரத்தின் இதழ்கள், எழுத்துக்கள், யந்திரம், நிறம், வாகனம், தெய்வ சக்தி முதலான யாவும் அரைகுறையாகத் தெரியும். படிப்படியாக தெளிவு ஏற்பட்டு கடைசியில் அந்த சக்கரத்தின் அம்சங்கள் யாவும் மிகத் தெளிவாகத் தெரியும்.

இவ்வாறு ஒவ்வொரு சக்கரத்திலும் ஒரு மாதகாலம் தியானம் செய்யவேண்டும். இந்த தியானம் முற்றிலும் அமைதியான முறையில் சலனமற்று, மன ஒருமைப்பாட்டுடன் அமையவேண்டும். அப்படி அமைந்தால் ஒரே மாதத்தில் அந்த சக்கரத்தின் அம்சங்கள் யாவும் புலப்படும். அதோடு ஒரு வகையான அதிர்வு

உணர்வு, நமைச்சல் போன்ற ஒரு உணர்வு எழுச்சி பெற்றது போன்ற ஒரு இன்ப உணர்ச்சி ஆகியவைகளும் அந்த மையத்தில் தோன்றும். இம்முறையில் தியானத்தை ஆக்ஞையில் தொடங்கி வரிசையாக விஷுத்தாக்யம், அனாஹதம், மணிபூரகம், சுவாதிஷ்டானம் வழியாக மூலாதாரம் வரை செல்லவேண்டும். ஒரு சக்கரவாயில் திறந்தபிறகு தான் அடுத்த சக்கரத்திற்குச் செல்ல வேண்டும். ஒரு சக்கரத்தின் அம்சங்கள் எல்லாம் சாதகனுக்குப் புலனாவதுதான் அந்த சக்கரவாயில் திறந்ததற்கு அடையாளம். இது வெற்றி தரவில்லை என்றால் ஒரு தகுதிவாய்ந்த குருவை அணுகி அவரிடம் தீட்சை பெற்று அவர்கூறும் முறையில் தியானம் செய்யவேண்டும்.

குண்டலினியை விழிப்படைச் செய்ய அதை துளைத்தெடுக்க வேண்டும்; பலமாக இடித்துத் தட்டி எழுப்ப வேண்டும். இதை ஆன்மீக மொழியில் "குண்டலினியை சித்திரவதை செய்தல்" என்று கூறுவர். குண்டலினி விழிப்படையும் போது நாகம் சீறுவதுபோல் உஸ் என்ற ஒலியுடன் சீறிக்கொண்டு வெளிப்படும். தோன்றி வெளிப்பட்டவுடன் முன் ஜன்மங்களின் வினைப் பதிவுகளையெல்லாம் தாக்கி அழிக்கும். வினைப் பதிவுகள் அழிந்தவுடன் சாதகனை மாயை, அறியாமை ஆகிய சிறைகளிலிருந்து விடுவித்து உண்மை ஞானம் பெறச் செய்யும். இந்த குண்டலினி விழித்தெழுவதைத் தான் புராணங்கள் மறை பொருளாக துர்க்கை மகிஷாசுரனை வதைத்த நிகழ்ச்சியாக விளக்கியுள்ளன (மனித மன மாயையே மகிஷாசுரன்). மகிஷாசுரன் தேவியின் கைகளால் மரணமுற்று முக்திப்பேறு பெறுவது ஒன்றையே விருப்பமாகக் கொண்டவன். தன் ஆசை நிறைவேற வேண்டும் என்பதற்காக அமைதியாக இருந்த சண்டி என்னும் குண்டலினியைத் தாக்குகிறான். கோபம் கொண்ட துர்க்கை மகிஷனை வதம் செய்கிறாள். மகிஷன் தீய வினைப்பதிவுகளே. சண்டி தன் பத்துகரங்களாலும் அந்த

ஊழ்வினைப் பதிவுகளை அழித்துவிட்டு மகிஷாசுரனை தன் அருள் ஒளிக்குள் ஐக்கியப்படுத்திக் கொண்டாள். மகிஷனாகிய மனம் மகாசக்தியின் (குண்டலினியின்) ஒரு பகுதியாக மாறிவிட்டது. மகிஷன் தன் வாழ்க்கையின் குறிக்கோளை அடைந்து விட்டான். இவ்வளவு தத்துவங்களையும் தன்னுள் கொண்ட குண்டலினி யோகம் 'சாதனைப் போர்' என்றே அழைக்கப்படுகிறது. பக்தியால் இறைவனை அடையும் கூட்டத்திற்கு இடையில் சாதனை சமர் புரிந்து இறைவனை அடைபவர்களும் உள்ளனர். ஹடயோகிகளும் தாந்த்ரீக சாதகர்களும் சக்தியுடன் போர் புரிந்து சிவத்தை அடைபவர்கள்.

ஒவ்வொரு நாளும் ஆறாதாரத் தவம் செய்யும் போது சாதகன் பிரம்ம நாடியில் மனதை வைத்து ஒவ்வொரு சக்கரத்திலும் தினமும் தவமியற்ற வேண்டும். ஒரு சக்கரத்திற்கு ஐந்து நிமிடம் வீதம் எடுத்துக் கொண்டால் 30 நிமிடங்களில் தவம் முடிந்துவிடும். தவத்தை 30 நிமிடங்களுக்கு மேல் நீடிப்பது நல்லதல்ல. அதிகநேரம் தவம் செய்தால் உள்வெப்பம் அதிகரிக்கும். அதனால் உடல்நலம் பெரிதும் பாதிக்கப்படும். கடைசியாக மனதை மனோன்மணி பீடத்திற்கு (திரிகுடிக்கு) கொண்டுவந்து நிறுத்தி அங்கே தவத்தை முடிக்க வேண்டும்.

ஆறாதாரத் தவம் செய்யும் காலத்தில் சாதகன் 1. பிரம்மச்சரிய விரதம் இருக்கவேண்டும். 2. ஒரு நாளைக்கு ஒருவேளைதான் உணவு கொள்ள வேண்டும். 3. சாத்வீக உணவை மட்டுமே உண்ணவேண்டும். 4. அமைதியான சூழ்நிலையில் தனிமையில் வாழவேண்டும். 5. தினசரி கடன்களை குறிப்பிட்ட காலங்களில் முறையாக செய்ய வேண்டும். இந்த முறைப்படி குண்டலினி யோகம் செய்தால் பிரமரந்திரத்தில் தெய்வீக ஆற்றல் தோன்றுவதை சாதகனால் உணரமுடியும். அதிலிருந்து எல்லா சித்திகளும் கைவரப் பெறும்.



# 22. வெற்றியின் அறிகுறிகள்

காயத்ரி சாதனை புரியும் சாதகனின் உள்ளத்தில் ஒருவகை தெய்வீக உணர்வு தோன்றும். ஆனால் உடலில் குறிப்பிடத்தக்க மாற்றம் எதுவும் இருக்காது. ஆன்மீக உயர்வின் காரணமாக பிராணமயகோசம், விஞ்ஞானமய கோசம், மனோமயகோசம் ஆகிய மூன்று கோசங்களிலும் மாற்றங்கள் உண்டாகும். அந்த மாற்றங்கள் அன்னமய கோசத்திற்குத் துணைபுரியும்.

பாம்பிற்கு புதிய தோல் வளரத் தொடங்கும்போது அதன் அறிகுறிகள் அதன் உடலில் தெரிகிறது. அனேகமாக அந்தப் பாம்பு சோர்ந்து படுத்துவிடுகிறது. புதியதோல் வளர்ந்தவுடன் அதற்கு பழையபடி உற்சாகம் வந்து விடுகிறது. சுறுசுறுப்பாகச் செயல்படச் தொடங்கி விடுகிறது. இதே மாதிரி மாற்றங்கள் காயத்ரி சாதனை முதிர்ச்சி அடையும் தருவாயில் உற்சாகக் குறைவு, வருத்தம், சலிப்பு முதலியவை உண்டாகின்றன. சாதனை முழுநிலையை அடைந்தவுடன் ஒரு புது உற்சாகமும் ஒளிமயமான வாழ்க்கையும் அமைகின்றன.

ஒரு சாதகன் ஆத்மசாதனை புரிய உட்காரும்போது ஆன்மீக உணர்வால் நிறைவுற்று இருப்பது போன்ற ஒரு உணர்வு அவனுக்கு ஏற்படுகிறது. தாந்திரீக சாதனை முறையில் இதற்கு மைதுனம் (அன்புப் பிணைப்பு) என்று பெயர். ஆன்மா பரம்பொருளைத் தழுவிக் கொள்ளும் போது அது ஒரு விவரிக்க முடியாத இன்பநிலையை அடைகிறது. அந்த இன்பநிலைதான் பக்தி என்று அழைக்கப்படுகிறது. ஆன்மாவும் பிரம்மமும் இரண்டறக் கலந்து ஒன்றுபட்டு இருக்கும்நிலை சமாதிநிலை ஆகும். இதுவே ஆன்மா தன்னை மறந்து இன்பமுறும் நிலை.

இதுவே சவிதா-சாவித்ரி இணைப்பு. இந்த இணைப்பு பற்றிய விளக்கங்களை காயத்ரி உபநிஷத்திலும், சாவித்ரி உபநிஷத்திலும் காணலாம். சாவித்ரி (காயத்ரி) வழிபாட்டில் ஆன்மா கருப்பையாகிறது; தெய்வீக ஒளி அப்பையில் கருவாக உற்பத்தியாகி வளர்கிறது. இந்த வழிபாட்டிற்கு சக்திபாதை என்று பெயர். இது உடல் உறவு இல்லமால் கரு உற்பத்தியாகும் தத்துவம். இந்த தத்துவ அடிப்படையில்தான் குந்திதேவி கர்ணனை ஈன்றெடுத்தாள்; அன்னை மேரி ஏசுநாதரைப் பெற்றெடுத்தாள்.

சாதனை என்பது என்ன? பக்தி, பயிற்சி என்னும் இரண்டு ஆற்றல்களையும் இணைத்து சித்தி என்னும் புதிய ஆற்றலைப் படைப்பதுதான் சாதனை. சித்தி என்பது "தெய்வக்கொடை"; அற்புதங்கள் செய்யும் ஆற்றல். இந்த சித்தியை அடைவதற்கு நல்ல எண்ணம், நல்ல உணர்ச்சி, நல்ல பண்புகள், நற்செயல்கள் இவற்றிலிருந்து வழுவாமல் சாதனை புரியவேண்டும். ஆரம்ப காலத்திலிருந்தே பாப காரியங்களில் ஈடுபட்டிருப்ப வனால் சித்திகளை அடைய முடியாது. அதனால் சாதனை புரிந்து எதையாவது அடைய முயற்சி செய்பவர்கள் முதலில் உடல், மனம், சொல் ஆகிய மூன்றையும் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். அதன் பிறகுதான் தான் அடைய விரும்பும் சித்தியைப் பற்றியே நினைக்க வேண்டும்.

ஜீவ பிரம்ம ஐக்கியம் என்னும் சவிதா - சாவித்ரி இணைப்பு ஆன்மீக மொழியில் பர்கா என்று அழைக்கப்படுகிறது. சாதகன் தன்னுள் இந்த பர்கா என்னும் ஆன்மீக ஒளி நுழைய வாய்ப்பளிக்க வேண்டும். பழைய வேண்டாத மன அழுக்குகள் விலக, புதிய தெய்வீக ஒளி அவை இருந்த இடத்தை நிரப்ப வேண்டும். சாதகன்

காயத்ரி சாதனை புரியும் போது இந்த மாற்றம் நிகழ்கிறது. இந்த மாற்றம் நிகழும்போது சாதகனின் செயல்முறைகள் மாறுதல் அடையும். அப்போது உணவில் வெறுப்பு, குமட்டல், மலச்சிக்கல், சோம்பல் போன்ற உணர்வுகள் தோன்றும். இவை யாவும் சாதனை முதிர்ச்சி அடைகிறது என்பதற்கு அறிகுறிகள் ஆகும். இந்த நேரத்தில்தான் சாதகன் மிகுந்த கட்டுப்பாட்டுடனும், நெறிகளிலிருந்து தவறாமலும் இருக்க வேண்டும்.

யாருக்குமே ஒரு முக்கியமான வேலையை செய்ய முயற்சி செய்யும்போது போட்டிகளும், தடைகளும் வருவது இயற்கை. இவற்றை எதிர்த்து நிற்பவர்கள் தான் வெற்றி காண்பார்கள். சோம்பல், பொறுமையின்மை, வெறுப்பு, தீய சூழ்நிலை போன்ற ஏதாவது ஒரு காரணத்தால் ஒரு சாதகன் தவநெறியை விட்டு விலகிச் சென்றால் அவனால் சித்திகளைப் பெற முடியாது. லஞ்சம், திருட்டு, மற்றவர்களின் உரிமையைப் பறித்தல், சுயநலம் போன்ற பண்புகளின் அடிப்படையில் அமைந்த எண்ணங்களும், செயல்களும் கூட ஆன்மீக வெற்றிக்குத் தடைகளாகும். ஆகையால் சாதனை புரிந்து வெற்றிகாண விரும்புபவர்கள் சில தியாகங்களைச் செய்தே தீரவேண்டும்.

சாதகன் அடையும் உயர்ந்த சித்திக்கு விடுதலை, சமாதி, பிரம்மநிலை போன்ற பல பெயர்கள் உள்ளன. துரீயவாஸ்தா என்ற ஒரு பெயரும் உண்டு. அதற்கு ஜீவாத்மா பரமாத்மாவுடன் இரண்டறக் கலந்திருக்கும் நிலை என்று பொருள். இது முதலில் தெளிவில்லாமல் இருக்கும். சாதகன் தவசாதனை வளரவளர இந்த ஜீவபிரம்ம ஐக்கிய நிலை தெளிவாக விளங்கும். சித்தி அடைந்தவுடன் அறிவுத் தெளிவு, ஞான ஒளி, சாந்தம் ஆகியவை தோன்றும்.

சாதனையில் வெற்றி கிடைத்துள்ளது என்பதன் அறிகுறிகளாவன :

1. உடல் லேசாகவும், மனம் உற்சாகமாகவும் இருக்கும்.
2. உடலிலிருந்து ஒரு தனிப்பட்ட நறுமணம் வெளிப்படும்.
3. தோல் மென்மையும், மிருதுத் தன்மையும் பெறும்.
4. தாமச உணவுகளில் வெறுப்பும், நேர்மையில் விருப்பமும் உண்டாகும்.
5. சுயநலம் அழிந்து தன்னலமற்ற தொண்டு மனம் உண்டாகும்.
6. கண்களில் ஒளி உண்டாகும்.
7. எடுக்கும் முடிவுகள் சரியானவைகளாய் அமையும்.
8. அடுத்தவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்று நினைக்கத் தோன்றாது.
9. பின்னர் நடக்கப்போவது முன்னரே தெரியும்.
10. தன் தெய்வீக ஆற்றலைக் கொண்டு பிறருக்கு அவர்கள் அறியாவண்ணம் கூட உதவ முடியும்.

சாதகன் தான் அடைந்த சித்தியைக் கொண்டு நல்லதும் செய்யலாம்; கெட்டதும் செய்யலாம். நல்லவை செய்து வந்தால் அவன் நலம் பல பெற்று உயர்வான். சித்திகளை தீய செயல்களுக்குப் பயன்படுத்தினால் நாளடைவில் சித்திகளையெல்லாம் இழந்து கடுந் துன்பங்களுக்கு ஆளாவான்.



# 23. சித்திகளும் ஆன்மபலமும்

ஒரு எரியும் கரியைச் சுற்றி சாம்பல் படர்ந்தால் அந்தக் கரியின் எரியும் ஆற்றல் குறைகிறது. அந்த சாம்பலை ஊதி நீக்கிவிட்டால் கரி மீண்டும் ஜுவாலை யுடன் எரிகிறது. இந்த உண்மை ஆன்மாவுக்கும் பொருந்தும். இயல்பாக மனிதர்கள் உலக இன்பங்களில் பற்று மிகுந்தவர்கள். அவர்கள் உலகியல் வாழ்க்கை ஆன்ம ஒளியை மறைக்கும் ஒரு திரையாக உள்ளது. அதனால் ஆன்மாவால் தன் உண்மை ஒளியை உணர முடிவதில்லை. ஒரு மனிதன் தன் உள்ளத்தையே ஆராயத் தொடங்கினால் அவன் இதயத்தில் குடிகொண்டிருக்கும் காமம், குரோதம் போன்ற கொடிய உணர்ச்சிகளை வெளியேற்றி விட்டு மனதைத் தூய்மையடையச் செய்கிறான்; அதன் மூலம் தன்னை அறிந்து இன்பமுறும் நிலையை அடைகிறான். தனிமனித ஆன்மா பிரபஞ்ச ஆன்மாவான கடவுளின் ஒரு அங்கமே ஆகும். மனித ஆன்மாவிடம் கடவுளிடம் உள்ள அத்தனை பண்புகளும் உள்ளன. ஆன்மாவை மறைத்துள்ள மாயையாகிய திரை விலகிவிட்டால் ஆன்மா தான் தெய்வத்தின் ஒரு அங்கம் என்பதை உணர்ந்து விடும். காயத்ரி சாதனை புரிபவன் அஷ்டமாசித்திகளையும் அவற்றோடு வேறு பல தெய்வீக ஆற்றல்களையும் பெறுகிறான். சித்திகள் யாவும் எடுத்த எடுப்பிலேயே வந்துவிடுவதில்லை. தவ வளர்ச்சி பெருகப் பெருக, ஒவ்வொன்றாக வருகின்றன. சில சித்திகள் வருமாறு:

1. கண்களில் ஒளி, முகத்தில் தெளிவு, மற்றவர்களை ஈர்க்கும் ஒரு வகை காந்த சக்தி, கம்பீரம், ஒரு தனிப்பட்ட திறமை முதலியவை உண்டாகும்.

2. தன்னுள் தெய்வீக ஒளி வீசிக் கொண்டிருப்

பதையும் தன்னுள் ஒரு புதிய சக்தி எழுச்சி பெற்று தனக்கு ஊக்கமளித்து வருவதையும் சாதகன் உணர்வான்.

3. நல்லவை புரிய ஆர்வமும் தீயவைகளைக் கண்டாலே வெறுப்பும் உண்டாகும். தான் செய்யும் தவறுகளுக்காக மிகவும் வருந்துவான். உயர்வு வரும்போது கர்வமடைவதில்லை; தாழ்வு, சிக்கல், நெருக்கடி முதலியவை வரும்போது கலங்குவதும் இல்லை.

4. தனக்குப் பின்னர் வரப்போகும் நன்மை, தீமை களை, உள்ளுணர்வால் அறிந்து கொள்வான். இந்த உணர்வு ஆரம்ப காலத்தில் யூகமாக அமையும். சாதனை வளரவளர தெளிவாகத் தெரியும்.

5. சாதகன் வாழ்த்தினாலும், சாபம் கொடுத்தாலும் அது நடக்கும்.

6. அவனால் மற்றவர்களின் எண்ணங்களைப் புரிந்து கொள்ளமுடியும். அவனிடம் யாராலும் எதையும் மறைக்க முடியாது. ஒருவருடைய நிறை, குறைகளையும் நடத்தையையும் கூட கண்டுபிடித்துவிட முடியும்.

7. அவனால் பிறர் மனதில் தன் எண்ணத்தைப் பதிய வைக்க முடியும். தன் எண்ண அலைகளைக் கொண்டே வெகுதொலைவில் உள்ளவர்களுக்கும் தான் கூற விரும்பு பவைகளை அறிவித்துவிட முடியும்.

8. அவன் வாழும் சூழ்நிலை அமைதியாகவும், புனிதத் தன்மை நிறைந்ததாகவும் இருக்கும். அவன் அருகில் உள்ளவர்கள் மன அமைதியும், புனிதத் தன்மையும் பெறுவார்கள்.

9. அவனால் சக்திபதம் அளிக்க முடியும். அதாவது தான் பெற்ற தெய்வீக ஆற்றலை மற்றவர்களுக்கு வழங்க முடியும். அவனால் தன் தவப்பயனில் ஒரு பகுதியையோ, தன் வயதையோ கூட வேறு ஒருவருக்கு வழங்கமுடியும்.

10. அவன் தியானம் செய்யும் போது தெய்வீக ஒளி பல வண்ணங்களில் தோன்றுவதைக் காண்பான். தெய்வீக ஒலி தன் காதுகளில் ஒலிக்கக் கேட்பான். தூங்கும்போது கனவிலும் இந்த அனுபவங்களைப் பெறுவான். சில தெய்வீக உருவங்கள் அவனுடன் கூடி விளையாடுவதை உணர்வான். அற்றின் சக்தியால் பல தெய்வீக அனுபவங்களைப் பெறுவான்.

இவை யாவும் அவன் சித்தி அடைந்துவிட்டான் என்பதை அறிவிக்கும் அடையாளங்கள். இவையல்லாது பல மறைமுகமான சித்திகளையும் அவன் அடைவான். அவைகளில் குறிப்பிடத்தக்கவை பண்டைக்கால சாஸ்திரங்களில் குறிப்பிடப்பட்டுள்ள அஷ்டமாசித்திகள். அவை: 1. அணிமா (தன் உடலை அணு அளவுக்கு சிறியதாக மாற்றிக் கொள்ளல்.) 2. மகிமா (தன் உருவத்தை மிகப் பெரியதாக மாற்றிக் கொள்ளுதல்.) 3. கரிமா (தன் உடலை பலபேர் சேர்ந்தும் தூக்கமுடியாத அளவுக்கு கனமாக ஆக்கிக் கொள்ளுதல்) 4. லகிமா (தன் உடலை பஞ்சுபோல் மிகவும் இலேசாக மாற்றிக் கொள்ளுதல்) 5. ப்ராப்தி (சந்திரனை பிடிக்கும் ஆற்றல்) 6. ப்ரகாம்யம் (எத்தகைய ஆசையாலும் கவரமுடியாத எதற்கும் அசையாத மன உறுதி) 7. இசித்வம் (எல்லா இடங்களிலும் பரவி இருக்கும் ஆற்றல்) 8. வசித்வம் (பஞ்சபூதங்களையும் தனக்கு பணிபுரியச் செய்யும் ஆற்றல்) இத்தகைய சித்திகளைப் பெற்றவர்களே உலகில் பல அற்புதங்களைச் செய்யும் மகான்களாகத் திகழ்கிறார்கள்.

சாதகன் தன் காயத்ரி சாதனை வெற்றி பெற்று, சித்திகள் தோன்றி வளரும்காலத்தில் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். உடலில் முதுமை மாறி இளமை தோன்றும். அப்போது உடலில் ஒரு புதிய வலிமையும் உற்சாகமும் தோன்றும். மனதில் ஆசைகளும்

எழுச்சிகளும் அதிமாகும். அந்த மன உணர்ச்சிகளுக்கு இடம் கொடுத்து விட்டால் கட்டுப்பாடும் ஒழுக்கமும் கெட்டுவிடும். பெற்ற இளமை அழிந்து மீண்டும் முதுமை வந்துவிடும். உடல் இளைத்து விடும். பலகாலம் முயன்று செய்த சாதனையும் அதனால் பெற்ற சித்திகளும் பயனற்றுப் போய்விடும். அதனால் சித்தி பெற்ற சாதகன் மன உணர்ச்சிகளுக்கு அடிமையாகி சித்திகளை தவறாகப் பயன்படுத்தி எல்லா நலன்களையும் இழந்துவிடக்கூடாது.

ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையும் அவன் முன்செய்த வினையின் விளைவுகள். இப்போது செய்யும் காரியங்கள், அவன் செய்துவரும் காரியங்களின் விளைவுகள் இவற்றின் தொகுப்புதான். ஒருவன் தொண்டு வாழ்க்கையில் ஈடுபட்டால் அவன் மனம் நல்லதைச் செய்யவே நாடும். எத்தகைய துன்பத்தையும் தாங்கிக் கொள்ளும் பொறுமையையும் சகிப்புத்தன்மையையும் வளர்க்கும். அதனால் மனிதர்களுக்கு அவ்வப்போது வரும் இடர்களைத் தீர்க்க உதவி செய்வது உலகியலில் மிகவும் அவசியம். சித்தி அடைந்தவன் தன் ஆன்மீக பலத்தைக் கொண்டும் மனிதர்களுக்கு உதவலாம். இவ்வாறு உதவி செய்வதில் அதிக கவனம் தேவை. தன் கடமை செய்யாமல் காட்டாறு போல் வாழ்பவனை வளமுடையவனாகவும், செல்வந்தனாகவும் ஆக்கினால் அவன் மிகவும் சோம்பேறியாகவும், பொறுப்பற்றவனாகவும் மாறி அழிவுப்பாதையில் தான் செல்வான், அதனால் ஆன்ம பலத்தை உபயோகித்து பிறருக்கு நற்பண்புகளையும், உண்மையான ஞானத்தையும் வழங்குவதற்கே பயன்படுத்த வேண்டும். தான்பெற்ற சித்திகளை பிறர் அறிய விளம்பரப்படுத்திக் கொள்வது அறியாமை. வருங்கால உலகைப் பற்றி எண்ணிப்பார்க்கும் ஞானிகள் உலகம் போற்றுவதையும், புகழ்வதையும் பற்றி கவலைப்பட மாட்டார்கள்.

இன்றைய உலக வாழ்க்கை முற்றிலும் மாறுபட்டதாக

உள்ளது. மக்கள் உலகியல் இன்பங்களைப் பெறவும் தங்கள் அற்ப ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளவுமே வழிபாடு, தியானம், தவம் முதலியவற்றைச் செய்கிறார்கள். சூதாட்டத்திலும், லாட்டரியிலும் வெற்றி கிடைத்தால் உனக்கு இவ்வளவு காணிக்கை செலுத்துகிறேன் என்று கடவுளிடம் பேரம் பேசுகிறார்கள். அவர்களுடைய ஒரே நோக்கம் எப்படியாவது பணம் சம்பாதிக்க வேண்டும் என்பதுதான். அவர்களுக்கு ஆன்மபலம் கிடைக்காது. ஒருக்கால் கிடைத்தாலும் அந்த ஆன்ம பலத்தைத் தவறாகப் பயன்டுத்தி அழித்து விடுவார்கள். அதனால் பெரும்பாலும் தகுதியற்றவர்களுக்கு ஆன்ம பலம் கூடிவருவதில்லை.

ஆன்மீக சாதனையை தாந்த்ரீக முறைகளில் பயன்படுத்தி சிலர் பகைவர்களை அழிக்க முயற்சி செய்கிறார்கள். இம்மாதிரி தீய காரியங்களுக்கு ஆன்ம சாதனையைப் பயன்படுத்தவேகூடாது. தாந்த்ரீக சாதனை களை பிறரை வசியப்படுத்துவதற்கும், மற்றவர்களை தனக்கு அடிமையாக்குவதற்கும் பயன்படுத்தினால் அது சாதகனின் வாழ்க்கையில் பெரிய சிக்கல்களை ஏற்படுத்திவிடும். ஆன்ம சாதகர்கள் தங்கள் சித்திகளைப் பயன்படுத்தி அற்புதங்களை செய்து காண்பித்து தாங்கள் தெய்வாத்மாக்கள் என்று விளம்பரப்படுத்திக் கொள்கிறார்கள். இம்மாதிரி தவறுகளை காயத்ரி சாதகன் கண்டிப்பாக செய்யக்கூடாது. அவ்வாறு செய்தால் மிகக் குறுகிய காலத்திலேயே அவன் தன் ஆன்மபலம் முழுவதையும் இழந்து பெருந்துன்பத்திற்கு ஆளாவான்.

எனவே காயத்ரி சாதகர் ஒவ்வொருவரும் 1. தங்கள் சித்திகளை வெளிக்காட்டிக் கொள்ளக்கூடாது. ரகசியமாகவே வைத்துப் பாதுகாக்க வேண்டும். 2. தாம் பெற்ற ஆன்ம பலத்தில் இம்மி அளவைக் கூட தவறான காரியங்களுக்குப் பயன்படுத்தக் கூடாது. 3. அவரவர்களுக்கு என்று உள்ள

ஒழுக்க நெறிகளினின்றும் எக்காலத்திலும் வழுவாமல் நடந்து வரவேண்டும். 4. வாழ்க்கையை தன்னலம் கருதாத மக்கள் தொண்டிற்காகவே அர்ப்பணிக்க வேண்டும்.



# 24. வாம்மார்கி தாந்த்ரீக சாதனை

பிரம்ம சக்தி, 1. ஆன்மபல காயத்ரி, 2. உலகியல் காயத்ரி என இருவகை சக்திகளாப் பிரித்து செயல்படுகிறது. இவற்றில் ஆன்மபல காயத்ரி தெய்வத்திற்கு அருகில் ஆன்மாவைக் கொண்டு செல்வது. காயத்ரி சாதகன் இந்த சக்தியின் உதவியால் புனிதத்தன்மை அடைகிறான்; எளிதில் உலகத் துன்பங்களை வெல்கிறான்; அதனால் தன்னிடமுள்ள மிகவும் குறைந்த ஆதாரங்களைக் கொண்டு இன்பமாக வாழ்கிறான்.

உலகியல் காயத்ரி, சாவித்ரி என அழைக்கப் படுகிறது. அது பஞ்சபூதங்களால் ஆன உலகப் படைப்புப் பொருள்களாக உள்ளது. அணு முதல் பேரண்டம் வரை இதனுள் அடங்கும். இந்த சக்தியின் விளைவாக அணுக்க ளிடையே ஈர்ப்பு-விலக்கு தன்மைகளும் இணைப்பு பிரிவுகளும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இந்த நடைமுறையின் விளைவாகவே உலகப் பொருள்கள் யாவும் தோன்றுகின்றன; நிலைத்து நிற்கின்றன; அழிகின்றன. இந்த அணுக்களின் இயக்கம் பற்றிய அறிவே அறிவியல். இந்த அறிவியலின் விளைவாகவே ரயில், தந்தி, தொலைபேசி, மின்சாரம், வானொலி, தொலைக்காட்சி, விமானம் முதலான பல பயனுள்ள சாதனங்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. இந்த அறிவியலுக்கு தொழில்நுட்ப அறிவியல் (இயந்திரவியல்) என்று பெயர்.

இந்த அறிவியலில் வேறு ஒரு பிரிவும் உள்ளது. அதற்கு தத்துவ விஞ்ஞானம் என்று பெயர். அந்த அறிவியல் ஆய்வில் மனித உடலின் உள்ளே உள்ள மின் ஆற்றல் இயக்கப்படுகிறது. இந்த இயக்கத்தின் விளைவாக இயற்கையில் உள்ள நுண் அணுக்களை மனிதன் தான் விரும்பும் உருவங்களாக மாற்றி அமைக்கிறான். இந்த அறிவியல் ஞானத்தைக் கொண்டு அவன் புதியவைகளைப் படைக்கிறான்; மாற்றி அமைக்கிறான்; இருப்பவைகளை வேரோடு அழிக்கவும் செய்கிறான். இத்தனை வேலைகளையும் எந்தவித இயந்திரங்களின் உதவியும் இல்லாமல் செய்கிறான். இந்த அறிவியலுக்கு தந்திர வித்தை என்று பெயர். இதற்கு சாவித்ரி வித்தை, தந்திர சாதனை வாம மார்க்கம் என்ற பெயர்களும் உண்டு.

தந்திரவித்தை ஒரு தனி அறிவியல். அது தற்கால இயந்திர அறிவியலைவிட மிகவும் உயர்ந்த, ஆனால் இயந்திரங்களையே பயன்படுத்தாத அறிவியல், போரில் கூட தற்கால உயர்ந்த ஆயுதங்களைவிட அக்கால அஸ்திரங்கள் மிகவும் உயர்ந்தவை. வருணாஸ்திரம் மழை பொழிய வைத்தது. அக்கினி அஸ்திரம் தீயை உண்டாக்கியது. சம்மோகனாஸ்திரம் மனிதர்களை நினைவிழந்து மயக்கம் அடையச் செய்தது. நாகபாசம் உடலை செயலிழக்கச் செய்தது. ரதங்கள் நீராவியே பெட்ரோலோ இல்லாமல் தரையில் ஓடின; நீரில் மிதந்தன; காற்றில் பறந்தன. தந்திர வித்தையை உபயோகித்து அக்காலத்தில் ஆச்சரியப்படத்தக்க விந்தைகளைப் புரிந்திருக்கிறார்கள். மாரீசன் மானாக மாறினான். ஹனுமான் மிக உயர்ந்த விஸ்வரூபமும், கொசு அளவுக்கு சிறிய உருவமும் எடுத்தான். இதே தந்திர வித்தையைக் கொண்டு ஹனுமான் விண்ணில் பறந்தான்; கடலைக் கடந்தான்; மலையைத் தூக்கினான். இலங்கையில் வாழ்ந்த ராவணன் அமெரிக்காவில் வாழ்ந்த மகிராவணனுடன் வானொலி, தொலைபேசி, தந்தி முதலான எந்த கருவியும் இல்லாமல் பேசினான்.

இவைகளையெல்லாம் தற்கால இயந்திர அறிவியலைக் கொண்டு செய்ய முடியாது. ஆன்மீக பலத்தைக் கொண்டுதான் செய்ய முடியும்.

நாகார்ஜுனர், கோரக்நாதர், மச்சீந்திர நாதர் ஆகிய ஞானிகளின் காலத்திற்குப் பின் இந்த அறிவியல் அனேகமாக அழிந்துவிட்டது. தற்காலத்தில் இந்தக் கலையில் தெளிந்த ஞானம் உள்ளவர்கள் இல்லை என்றே கூறலாம். தற்காலத்தில் தாந்த்ரீக வித்தையில் ஏதோ சிலவற்றைக் கற்றுக்கொண்டு அங்கும் இங்கும் ஒரு சில அற்புதங்களை செய்து காண்பிப்பவர்கள் சிலர் உள்ளனர். அவற்றில் மற்றவனுக்கு பல வகைகளில் தீமை செய்யும் பிரிவு ஒன்று உள்ளது. அது தமிழகத்தில் பில்லி சூனியம் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. மனிதர்களைப் பற்றியுள்ள தீய சக்திகளை விரட்டவும் இந்தக் கலை பயன்படுகிறது. மந்திரத்தை உச்சரித்து பாம்பு விஷத்தையும், தேள் விஷத்தையும் போக்குகிறார்கள். குழந்தைகளை மயக்கித் தூக்கிச் செல்கிறார்கள்.

நம்மைச் சுற்றியுள்ள சூட்சும உலகத்தில் பல சக்திகள் இயங்குகின்றன. தாந்திரீகர்கள் அவைகளைக் கட்டுப்படுத்தி தங்களுடைய அடிமைகளாக ஆக்கிக் கொள்கின்றனர். சில தாந்திரீகர்கள் சுடுகாட்டில் தந்திர சாதனை புரிந்து சுடுகாட்டு சித்திகளை அடைந்துள்ளனர். அவர்களுக்கு வேதாளம், சாயாபுருஷன், பிரம்மராட்சஸன், கர்ண பிசாசினி, திரிபுரசுந்தரி, துர்க்கை போன்ற துஷ்ட தேவதைகள் கட்டுப்பட்டு நடக்கின்றன. இவைகள் சித்த புருஷர்களுக்கு எக்காலத்திலும் மறைமுகத் துணைவர் களாக இருந்து பணிவிடை செய்கின்றன.

இந்த தேவதைகள் யாவும் சூட்சும உலகத்தில் உலாவிக்கொண்டிருக்கின்றன. ஒரு தாந்திரீகன் தன் நோக்கத்திற்கு ஏற்ப ஒரு சூட்சும சக்தியை (தேவதையை) அதற்கான சடங்குகளைச் செய்து உயிர்த்தெழச் செய்கிறான். அந்த தேவதை உயிர்த்து எழுந்தவுடன் அந்த

தாந்திரீகனைத் தாக்கும். அந்த தாந்திரீகன் தன்னுடைய ஆன்மபலத்தைக் கொண்டு அதை அடக்கி தனக்கு அடிமையாக்கிக் கொள்கிறான். இத்தகைய சாதனைகள் மிகவும் அபாயகரமானவை. காரணங்கள்: 1. இதற்கான சடங்குகளை சுடுகாடு போன்ற அச்சம் தரும் தனிமையான இடத்தில் நள்ளிரவில் செய்யவேண்டும். 2. இடையில் மிகவும் அச்சம் தரும் நிகழ்ச்சிகள் பல நடக்கும். சிறிது பயந்து விட்டாலும் அங்கேயே ரத்த வாந்தி எடுத்து இறக்க நேரிடலாம்; நோய்வாய்ப்பட்டு இறக்க நேரிடலாம்; பயித்தியம் பிடித்தும் அலைய நேரிடலாம். 3. ஒரு தேவதையை வென்று அடிமையாக்கி வைத்திருப்பவன் அதன் தேவைகளை நிறைவேற்றிக் கொண்டிருக்க வேண்டும். அது மிகவும் கடினம். அப்படி நிறைவேற்றத் தவறினால் அவன் கட்டுக்குள் இருக்கும் தேவதை யாலேயே எந்த நேரத்திலும் அவனுக்கு ஆபத்து நேரக்கூடும். அதனால் மிகவும் தைரியம் வாய்ந்த ஒரு சிலர்தான் இவ்வகையான தாந்திரீக சாதனையில் இறங்குகிறார்கள். அவர்களிலும் மிகச் சிலரே அவற்றின் பலன்களை முழுமையாக அடைகிறார்கள். அதனால் இந்த சாதனையில் ஈடுபடுவது நல்லதல்ல.

தற்காலத்தில் தந்திர சாஸ்திரத்தை முழுமையாக அறிந்தவர்கள் அற்றுப் போய்விட்டார்கள். அதே நேரத்தில் பல அறிவியல் சாதனங்களும் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. அதனால் தாந்திரீகம் உலக மக்களுக்கு பயனற்றதாக ஆகி விட்டது. இந்த தந்திரக் கலையை அறிந்தவர்கள் இயற்கையில் உள்ள அணுசக்தியை ஆன்மசக்தியின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வரும்வரை செயலற்று சும்மா இருக்கமுடியாது. இயற்கையை தன் கட்டுப்பாட்டில் வைத்திருந்த விக்ரமாதித்தனைப் போன்றோர் இக்காலத்தில் இல்லை என்றாலும் அந்த கலை பற்றிய சில அடிப்படை உண்மைகள் அரைகுறையாக கிடைத்துள்ளன. அவற்றை ஆராய்ந்து உலகத்திற்கு பயன்படக்கூடிய பலவற்றை செய்யமுடியும்.

தற்காலத்தில் தாந்திரீகம் என்ற பெயரில் மக்களை ஏமாற்றி வருபவர்கள் ஏராளம். அவர்களால் இந்தக் கலைக்கு இருந்த பெயரும் புகழும் அழிந்துவிட்டன. மீண்டும் அதன் பெருமையை வெளியே கொண்டு வரவேண்டும். அக்கலையை பொதுமக்களுக்கு பயன் படச் செய்ய வேண்டும். இந்தக் கலையை எல்லோருக்கும் பயன்படும் வகையில் காயத்ரி சாதனை புரிந்தும் செய்யலாம். அதை காயத்ரி பரிவார் இயக்கம் செய்ய முயன்று வருகிறது.



# 25. காயத்ரி தந்திரம்

"न देयं परशिष्येभ्यो ह्यभक्तेभ्यो विशेषता:।
शिष्येभ्यो भक्ति युक्तेभ्यो ह्यन्यथा मृत्युमाप्नुयात्॥

ந தேயம் பரசிஷ்யேப்யோ ஹ்யபக்தேப்யோ விஷேஸ்தா:
சிஷ்யேப்யோ பக்தி யுக்தேப்யோ ஹ்யந்யதா-
ம்ருத்யுமாப்நுயாத். - கீதை

"இந்த மந்திரத்தை வேறு ஒருவரின் சீடருக்கு வெளியிடாதே. குறிப்பாக பக்தி ஈடுபாடு இல்லாதவருக்கு கூறாதே. அவ்வாறு செய்தால் அது மரணத்தை விளைவிக்கும்."

மேலே கூறப்பட்டுள்ளது தந்திர சாஸ்திரம் ஒரு ரகசிய அறிவியல் என்பதை சுட்டிக்காட்டி விளக்குவதே ஆகும். அதனால் தந்திர நுணுக்கங்களை யாருக்கும் தெரியாமல் பாதுகாக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. தந்திர சாதனை, கடலுக்குள் சென்று முத்து எடுப்பதைப்போல் மிகவும் கடினமானது; உயிருக்கும்

ஆபத்தானது.

தந்திர சாதனை இயற்கையை எதிர்த்து போராடி வெல்லும் முயற்சி. இதற்கு அசாதாரண முயற்சி தேவை. அதன் எதிர் விளைவுகளும் அசாதாரணமானவை களாகவே இருக்கும். இந்த சாதனையில் சாதகன் தன்னுடைய ரகசிய சாதனை மூலம் இயற்கையில் மறைந்துள்ள ஆற்றல்களை அடைய முயற்சி செய்கிறான். அதன் எதிர்விளைவாக அவன் இயற்கை சக்தியால் நிச்சயம் தாக்கப்படுவான். அதனால் அவன் உடலில் அடிபட்டு ஆபத்துக்கு ஆளாகும் நிலையும் ஏற்படும். சற்று கவனக் குறைவாக இருந்தால் உயிரையும் இழக்க நேரிடும். அதனால் உயிருக்குத் துணிந்தவர்களாகவும், தைரியமும் விடாமுயற்சியும் உள்ளவர்களாகவும், எத்தகைய பயங்கர சூழ்நிலையையும் ஆபத்தையும் அச்சமின்றி எதிர்த்து நிற்க வல்லவர்களாகவும் உள்ளவர்கள் மட்டுமே தாந்திரீக சாதனை புரிந்து வெற்றி காண்பார்கள். சாதனையில் வெற்றிபெற மேற்கண்ட மனோதிடத்துடன் அதிகமான பொறுமையும், பக்தியும், மனஉறுதியும், ஒரு சிறந்த மாந்திரீக வழிகாட்டியின் உதவியும் தேவை.

தாந்திரீகம் இயற்கையில் சக்தி வாய்ந்த அதிர்வுகளை உண்டாக்கி வெப்பத்தையும், கோபத்தையும் தூண்டிவிடும் கலை. மற்றவர்களுக்குப் புலனாகாத நுட்பமான வெப்ப அலைகளும், புழுதிப் புயலும் தோன்றி, சாதகனின் மனதில் ஒரு வெப்ப சூறாவளியையே உருவாக்கிவிடும். சூக்கும உலகில் நுண்உடலோடு வாழும் அரக்கர்களும் பிரம்ம ராட்சஸர்களும் ஆவிகளும் தங்கள் மிகப் பெரிய கோரமான உருவில் வெளிப்பட்டு அச்சுறுத்துவார்கள். இவற்றைக் கண்டு பயந்துவிட்டால் சாதகன் அங்கேயே உயிர் இழக்கவும் நேரிடும்.

தனி ஒரு மனிதன் தன்னால் தந்திர சாதனை புரிந்து வெற்றிபெற முடியும் என்று முடிவுக்கு வந்து விடக்

கூடாது. தந்திர சாதனையில் வெற்றிகண்ட குருவின் துணையுடன் தான் இந்த முயற்சியில் இறங்கவேண்டும். அந்த குரு சாதகனுக்கு தாந்திரீகத்தில் எந்த முறை ஏற்றது என்பதை அறிந்து அதை அவனுக்கு போதிக்க வேண்டும். இவ்வாறு ஒரு வகை குருகுல முறையில் இக்கலை பரம்பரை பரம்பரையாக பின்பற்றப்பட்டு வருகிறது.

தந்திர சாதனையில் அடைந்த சித்திகளைத் தவறாகப் பயன்படுத்தினால் சமூகத்தில் குழப்பம் ஏற்படும். மக்களுக்கு துன்பம் விளையும். அதனால் தான் இக்கலை எல்லோருக்கும் கற்பிக்கப்படுவதில்லை. தாந்திரீக நூல்களும் சாதனை முறைகளை தெளிவாக விளக்கவில்லை. இதைச் செய்தால், இப்படிச் செய்ய வேண்டும் என்று கூறவில்லை. எடுத்துக் காட்டாக சோங்கர் என்னும் ஒருவகை மரத்தின் கட்டைகளை யக்ஞத்தீயில் இட்டு எரித்தால் ஆண்குழந்தை பிறக்கும் என்று அந்த நூல்கள் கூறுகின்றன. இதைப் படித்துவிட்டு அந்த மரக்குச்சிகளைக் கொண்டு யக்ஞம் வளர்த்தால் ஆண்குழந்தை பிறக்காது. தந்திர சாஸ்திரத்தை குருமுகமாக கற்றுணர்ந்தவரால்தான், அந்த யாகத்தை செய்யமுடியும் அதற்குரிய சடங்குகள் யாவும் ரகசியமாக பாதுகாக்கப்பட்டு வருகின்றன. உபதேச முறையில் சீடராயிருந்து கற்றவர்களுக்கே அவை அறிவிக்கப் படுகின்றன. அந்த யாகத்தைச் செய்யவேண்டிய காலம், செய்முறை, செய்வதற்குத் தேவையான உபகரணங்கள், செய்யும்போது கூற வேண்டிய மந்திரங்கள் ஆகிய யாவும் குருமார்களால் ரகசியமாக வைத்துப் பாதுகாக்கப் படுகின்றன.

காயத்ரியில் யோகமுறையும் உண்டு. தாந்திரீக முறையும் உண்டு. தன்னை உணர்ந்து தெய்வநிலையையும் அடையலாம். செல்வம், மக்கள்பேறு முதலான உலக இன்பங்களையும் அடையலாம். காயத்ரி தந்திரம் என்னும் வாமமார்க்கத்தைக் கொண்டு தீமையும் செய்யலாம்.

அழிவையும் உண்டாக்கலாம். அது மிகவும் ரகசியமான முறை. காயத்ரி தந்திர நூல்களில் செல்வம், மனைவி, அந்தஸ்து முதலியவற்றை அடையும் மார்க்கங்களும், நோய்களைப் போக்கும் முறைகளும், எதிரிகளை அழிக்கும் முறைகளும், வேறு பல சாதனை முறைகளும் ரகசியமாக சில குறியீடுகளாலும், அடையாளச் சொற்களாலும் விளக்கப்பட்டுள்ளன. அவை பற்றிய விரிவான விளக்கங்களை குருவிடம் நேரடியாக உபதேசம் பெற்றும் குருவின் உதவியுடன் கிரியைகளை செய்ய வேண்டிய முறையில் செய்தும் கற்றுக் கொள்ள வேண்டும். இந்தக் கலை தவறாகப் பயன்படுத்தப்படக் கூடாது என்பதற்காக ஞானிகளால் இவ்வளவு பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.



# 26. காயத்ரி சாதனை பற்றிய கருத்துக்கள்

காயத்ரி மந்திரம் ஒரு முழுமையான மந்திரம். சிலர் அதோடு 3 அல்லது 5 "ஓம்" களை பீஜ மந்திரமாக சேர்க்க வேண்டும் என்று கருதுகிறாாகள். அது தேவை இல்லை.

ஒவ்வொரு சமயத்திற்கும் தலைமையான மந்திரம் ஒன்று உண்டு. 'கல்மா' இஸ்லாமியரின் புனித மந்திரம்; 'பாப்டிஸ்மா' கிறிஸ்தவர்களின் முக்கிய மந்திரம்; 'நமன்கார்' ஜைனர்களுக்கும், 'ஓம் மணி பத்மே ஹுயே' திபேத்தியர்களுக்கும் உன்னதமான மந்திரங்கள்; இவைகளைப்போல் இந்துக்களின் சிறப்பான மந்திரம் காயத்ரி மந்திரம்.

பிராமணர்களுக்கும், க்ஷத்திரியர்களுக்கும்,

வைசியர்களுக்கும், மற்ற இனத்தவர்களுக்கும் உரிய காயத்ரி மந்திரங்கள் வேறு வேறு என்று கூறுவது அறியாமை. எல்லோருக்கும் கடவுளும் ஒன்றுதான்; மதமும் ஒன்றுதான்; காயத்ரி மந்திரமும் ஒன்றுதான்.

சிலர் காயத்ரி மந்திரத்தை ரகசியமாக காதில் உபதேசம் செய்யவேண்டும் என்று கூறுகிறார்கள். இது தாந்திரீக மந்திரங்களுக்குத்தான் தேவை. காயத்ரி மந்திரத்தையும், வேதமந்திரங்களையும் எல்லோருக்கும் கேட்கும்படி சத்தமாகவே அவற்றிற்குரிய இசை அமைப்பில் பாடவேண்டும்.

"காயத்ரியில் வரும் சொற்கள் ஆணைக் குறிப்பவை; அப்படியிருக்க அதை காயத்ரி மாதா என்று கூறிவது எப்படிப் பொருந்தும்?" என்று சிலர் கேட்கிறார்கள். தெய்வசக்தி எங்கும் பரவி உள்ளது; உருவம் அற்றது; ஆண்-பெண் வேறுபாட்டைக் கடந்தது. தீ, காற்று, பூமி முதலியவைகள் ஆணாகவும், பெண்ணாகவும் கொள்ளப்படுகின்றன. ஒரு புகழ்வாய்ந்த சமஸ்கிருத ஸ்லோகத்தில் ஒரு அடி "ஏ கடவுளே! தாயும் நீயே; தந்தையும் நீயே" என்று வருகிறது. அந்த அடி "த்வமேவ மாதா ச பிதா த்வமேவா" என்பதாகும். தெய்வீக ஒளியை சவிதா என்னும்போது ஆண்பாலாகவும். "சாவித்ரி" என்னும்போது பெண்பாலாகவும் குறிப்பிடுகிறோம். அதனால் கடவுள் ஆணா பெண்ணா என்ற சர்ச்சையில் இறங்காமல் காயத்ரியும் காயத்ரி மாதாவும் ஒன்றுதான் என்பதை உணரவேண்டும்.

காயத்ரியை ஒரு தலையும் இரண்டு கைகளும் உள்ள ஒரு பெண்ணாகவோ. ஐந்து தலைகளும் பத்து கரங்களும் உள்ள ஒரு பெண் தெய்வமாகவோ கற்பனை செய்ய வேண்டாம். காயத்ரிக்கு தாயின் உருவம் கொடுக்கப் பட்டிருப்பதன் காரணம், உலகில் தாய் ஒருத்திதான்

அன்பில் சிறந்தவள் என்பதுதான். காயத்ரி மாதாவின் ஒரு கையில் கமண்டலமும் மற்றொரு கையில் புத்தகமும் இருப்பது ஞானத்தையும், அறிவையும் குறிக்கின்ற அடையாளச் சின்னங்கள். ஐந்து தலைகள் பஞ்ச கோசங்களையும், பத்துக் கரங்கள் இந்து சமயத்தின் பத்து அங்கங்களையும் குறிக்கின்றன.

காயத்ரி மாதாவின் அன்ன வாகனம் பக்தனின் உள்மனம். தெய்வீக அன்னம் (பரமஹம்சம்) புழு பூச்சிகளை உண்பதில்லை. அதுபோல பக்தனும் புலால் முதலான தாமஸஉணவை உண்ணக்கூடாது. இந்த தெய்வீக அன்னம் தண்ணீர் கலந்துள்ள பாலிலிருந்து பாலை மட்டும் பிரித்து எடுத்துக் கொள்வதைப்போல் சாதகன் நல்லதை மட்டும் எடுத்துக் கொண்டு தீயதை விலக்கிவிட வேண்டும் என்ற உண்மைகளையே சின்னமாக அமைந்த அன்னம் உணர்த்துகிறது.

காயத்ரி மந்திரத்தை பெண்களும் சூத்திரர்களும் சொல்லக்கூடாது என்று சிலர் கருதுகிறார்கள். கடவுள் படைப்பில் யாவரும் சமம். சூரிய ஒளி, சந்திரன், காற்று, நீர் முதலான இயற்கை வளங்கள் யாவும் எல்லோருக்கும் சொந்தம். எந்த ஜாதியினரும், "நான் உயர்ந்த ஜாதியில் பிறந்தவன்; எனக்குத் தான் காற்றும் நீரும் சொந்தம்" என்று கூறமுடியுமா? எப்படி கடவுள் எல்லோருக்கும் சொந்தமோ அதேபோல் கடவுளின் சக்தியான காயத்ரி யாவர்க்கும் சொந்தமானதுதான்.

காயத்ரியின் முழுமையான மந்திரம் விஸ்வாமித்திர முனிவரால் உருவாக்கப்பட்டது. அவருடைய சந்ததியர் களாகிய க்ஷத்திரியர்கள் இந்த மந்திரம் எங்களுக்குத்தான் சொந்தம் என்றால் பிராமணர் முதல் பிற எந்த வருணத்தவரும் இதை சொல்லக்கூடாது. இப்படி ஜாதி உரிமை கொண்டாடுவது சிறுபிள்ளைத்தனமானது.

இந்தியாவில் வாழ்பவர்களுக்குத்தான் காயத்ரி

மந்திரம் ஜபம் செய்ய உரிமை உண்டு என்றால் வெளிநாடுகளுக்குச் சென்று அந்த நாடுகளின் குடிமக்களாக வாழ்பவர்களின் கதி என்ன? காயத்ரி இந்துக்களுக்குத் தான் சொந்தம் என்றால் இதைப்பற்றி அயல்நாடுகளில் ஆராய்ச்சி செய்யும் விஞ்ஞானிகளுக்கு, 'நீங்கள் காயத்ரி பற்றி ஆராய்ச்சி செய்யக்கூடாது' என்று தடை விதிக்க வேண்டும். அறிவியல் வளர்ந்துள்ள இக்காலத்தில் இப்படியெல்லாம் எண்ணுவதும் பேசுவதும் சரியல்ல.

இதைப் போல பூநூல் அணியாதவர்கள் காயத்ரி ஜபம் செய்யக்கூடாது என்று தடை விதிப்பதும் முறையல்ல. பூநூல் காயத்ரியின் பிரதிபிம்பமாகையால் காயத்ரி வழிபாடு செய்பவர்கள் பூநூல் அணிந்து கொள்வது நல்லது. காயத்ரி சிலை வைத்து அதன் முன் உட்கார்ந்து வழிபாடு செய்வது சிறப்புடையது. கோவில்களுக்கு சென்று வழிபடும்போதும் காயத்ரி மந்திரம் ஜபிக்கலாம். எந்த தெய்வத்தையும் காயத்ரி மந்திர ஜபம் செய்து வழிபடலாம்.

காயத்ரி குருமந்திரம் என்று கூறப்படுகிறது. ஒரு தகுதிவாய்ந்த குருவிடம் மந்த்ரோபதேசம் பெற்றுதான் மந்திரங்களை ஜபிக்கத் தொடங்க வேண்டும். காயத்ரி மந்திரத்தை உபதேசம் பெற குரு கிடைக்காவிட்டால் காயத்ரி மாதாவின் படத்தை வைத்து வழிபட்டு, காயத்ரி மாதாவையே குருவாகக் கொண்டு ஜெபிக்கத் தொடங்கலாம். ஒரு ரிஷியின் படத்தையோ அல்லது ஒரு தேவாத்மாவின் படத்தையோ வைத்து வழிபட்டு அந்த ரிஷியையோ அல்லது தேவாத்மாவையோ கூட குருவாகத் கொள்ளலாம்.

தாந்திரீக சாதனைக்கு உரிய தேவதைகள் பெரும்பாலும் ராட்சஸத்தன்மை கொண்டவை. ஒருவர்

சாதனை புரியும் போது அதற்குரிய சடங்குகளில் ஏதாவது குறை ஏற்பட்டுவிட்டால் அதற்கு உரிய தேவதை கோபம் கொண்டு சாதகனை துன்புறுத்தும். ஆனால் காயத்ரி பாசம் மிகுந்த அன்னை; இரக்க குணமே உருவாக அமைந்தவள்; எதையும் மன்னிக்கும் சுபாவம் உள்ளவள். மந்திர ஜபத்திலும், சடங்குகளிலும் எத்தகைய குறை இருந்தாலும், அதைப் பொருட்படுத்தாமல் நன்மை செய்யும் காமதேனுவாக விளங்குபவள்.

வழிபடும் முறை தவறாகவோ குறையுடையதாகவோ இருந்தாலும் நோக்கங்கள் நேர்மையானவைகளாக இருந்து, வழிபாடும் இதய சுத்தத்தோடு அமைந்தால் அந்த வழிபாடு நிச்சயமாக நற்பலனை அளிக்கும். வால்மீகி ராம நாமத்தை தவறாக 'மரா' 'மரா' என்று உச்சரித்தபோதும் அவருக்கு தெய்வநிலை கிடைத்தது. அதற்குக் காரணம் அவரது தூயமனமும் பக்தி உணர்வும் தான். காயத்ரி மந்திர ஜபத்தில் சில சொற்களை விட்டுவிட்டவர்களும், மந்திரத்தையே உச்சரிக்கத் தெரியாமல் தவறாக உச்சரித்தவர்களும் எந்தவித பாதிப்புக்கும் ஆளாக வில்லை. அப்படி யாருக்காவது பயம் இருந்தால் ஆன்மீகத்தில் உயர்ந்த நிலையை அடைந்த ஒருவர் துணையுடன் ஜபம் செய்யுங்கள்.

நோய்வாய்ப்பட்டிருக்கும் போதும், பயணகாலங்களிலும், குளிக்காத போதும், குழந்தை பிறந்த சூதககாலத்திலும், வீட்டில் மரணம் முதலான துக்க சம்பவங்கள் நிகழ்ந்துள்ள காலத்திலும் சாலையில் நடந்து கொண்டிருக்கும் போதும், படுக்கையில் படுத்திருக்கும்போதும் மனதிற்குள்ளேயே ஜபம் செய்யலாம்.

சிலர் காயத்ரி மந்திரத்தில் 23 எழுத்துக்களையே உச்சரிக்கிறார்கள். 24 எழுத்துக்களும் தொனிக்கும்படி அதற்குரிய இசையுடன் உச்சரிப்பது சிறந்தது. 23 எழுத்துக்களை மட்டும் கொண்டு மந்திரத்தைக்

கூறினாலும் குறையில்லை. 21 எழுத்து முதல் 24 எழுத்துவரை உள்ள பல கிளை மந்திரங்கள் காயத்ரிக்கு உள்ளன. நிசாரத் காயத்ரி, ஆர்க் வீ காயத்ரி, விராட காயத்ரி என்பவை அவற்றில் சில. 23 எழுத்துக்களுடன் கூடிய காயத்ரி நிசாரத் காயத்ரி. 'வரேணியம்' என்ற பதத்தில் 'ணி' ஒரு உயிர்மெய் எழுத்தாக வருகிறது. அதையும் சேர்த்து காயத்ரியின் மொத்த எழுத்துக்கள் 24. அதே பதத்தை 'வரேண்யம்' என்று உச்சரிக்கும் போது 'ணி' என்ற எழுத்தில் உள்ள 'இ' என்னும் உயிரெழுத்து இடம்பெறவில்லை. அதனால் 'வரேண்யம்' என்று உச்சரிக்கும்போது மந்திரத்தின் மொத்த எழுத்துக்கள் 23 தான். இவ்வாறு 23 எழுத்துக்களுடன் உச்சரிப்பதும் நிறையுடையதுதான்; எந்தவித குறையும் உடையதல்ல.

ஒரு சாதகன் பலரை ஆன்மீக குருமார்களாகக் கொள்ளலாமா என்ற சந்தேகம் பலருக்கு உள்ளது. பலரை குருமார்களாகக் கொள்வதில் தவறு எதுவும் இல்லை. ஸ்ரீராமன் வஸிஷ்டரையும், விஸ்வாமித்திரரையும் குருவாகக் கொண்டிருந்தான். தத்தாத்ரேயரின் குருமார்கள் 24 பேர். கிருஷ்ணனுக்கு துர்வாசருடன் பிரகஸ்பதியும் குருவாக இருந்தார். பள்ளிகளில் ஒரே மாணவன் பல ஆசிரியர்களிடம் படிக்கிறான். ஒரு கிராமத்தில் வாழும் ஒரு குடும்பத் தலைவருக்கு கிராம புரோகிதர், தீர்த்த புரோகிதர், குடும்ப புரோகிதர், தீட்சை புரோகிதர் என்று பல குருமார்கள் உள்ளனர். அவர்கள் யாவரும் ஒருவருக்கு ஒருவர் துணையாக உள்ளவர்களே.

சாதாரணமாக காயத்ரி ஜபம் செய்யும்போது தொண்டை, உதடுகள், நாக்கு ஆகியவை இயங்க வேண்டும். ஆனால் மந்திர ஒலி பக்கத்தில் உட்கார்ந்திருப்பவர் காதில் கூட விழாத அளவுக்கு மிகவும் மெதுவாக ஜபம் செய்யவேண்டும்.. ஜபமாலையை

உபயோகித்து மந்திர ஜபம் செய்தால் எத்தனை உரு ஜபித்துள்ளோம் என்பது தெளிவாகத் தெரியும். ஜபமாலை இல்லாதவர்கள் சுமார் அரைமணி நேரம் எத்தனை முறை ஜபம் செய்தோம் என்று ஒருமுறை பார்த்து நிர்ணயித்துக் கொண்டு ஜபம் செய்த கால அளவைக் கொண்டு ஏறத்தாழ இத்தனை ஜபம் செய்திருக்கிறோம் என்று அறிந்து கொள்ளலாம். ஜப சாதனைக்கு துளசிமாலை, சந்தனமர மாலை, ருத்ராட்ச மாலை ஆகியவை மிகவும் ஏற்றவை. மந்திரங்களை வாயால் சொல்லும்போது சில நுட்பமான உயிர்மையங்களிலும் அந்த ஒலியின் அதிர்வுகள் ஏற்படுகின்றன என்பது ஆன்மீக அறிவியல் கண்டுள்ள உண்மை. அந்த அதிர்வுகளின் விளைவாக பண்புகள், செயல்கள், சுபாவம் ஆகியவை சீர்படுகின்றன என்றும் கண்டறிந்துள்ளார்கள்.

பொதுவாக "1. காயத்ரி மந்திரம் ஒரு புனிதமான மந்திரம். 2. காயத்ரி வழிபாடு செய்பவர்கள் அகமும் புறமும் தூய்மையாக இருக்கவேண்டும். 3. பூநூல் அணிந்து கொள்ளவேண்டும். 4. மது அருந்தக்கூடாது. 5. மாமிசம் உண்ணக்கூடாது" என்று கூறப்படுகிறது. இப்படியெல்லாம் இருப்பது நல்லதுதான். இவைகளைக் கடைபிடிக்க முடியாதவர்கள் காயத்ரி மந்திரமே சொல்லக் கூடாதா? அவர்களுடைய குறைகள் தீர்வதற்கு வழிதான் என்ன? குறை உடையவர்கள் காயத்ரி மந்திரம் சொல்லக் கூடாது என்பது நோய் உள்ளவன் மருந்து சாப்பிடக் கூடாது என்பதைப் போன்றது. அதனால் எவ்வளவு கொடிய பழக்க வழக்கங்கள் உள்ளவர்களும் காயத்ரி மந்திரம் சொல்லலாம். காயத்ரி மந்திரத்தை சொல்லச் சொல்ல அவர்கள் குறைகள் தாமாகவே குறைந்துவந்து முடிவில் சாதகர்களை விட்டு விலகிவிடுகின்றன. காயத்ரி என்பது ஆகாய கங்கை. பூமியில் கங்கையில் மூழ்கிய மனிதர்களும்

விலங்குகளும் பாபம் நீங்கி புனிதத்தன்மை அடைவதைப் போல் காயத்ரி மந்திரம் சொல்பவர்களும் பாபங்களிலிருந்து விடுபட்டு புனிதத் தன்மை அடைகின்றனர்.

பூநூல் காயத்ரியின் ஒரு உருவம். அதனால் பூநூல் அணிந்துகொண்டு காயத்ரி மந்திரம் செல்வது சிறப்புடையது. ஆனால் பூநூல் தரித்துதான் காயத்ரி ஜபம் செய்யவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. பூநூல் அணியாமல் ஜபம் செய்தாலும் பலன் கிடைக்கும். அதே போல ஒரு கோவிலுக்குச் சென்று தெய்வத்தின் முன் உட்கார்ந்து ஜபம் செய்வது நல்லது. கோவிலே இல்லாத ஊரில் என்ன செய்வது? வீட்டிலோ அல்லது திறந்த வெளியிலோ ஒரு தூய்மையான இடத்தில் உட்கார்ந்து ஜபம் செய்தால் போதுமானது.

ஒருவருக்காக மற்றொருவரை ஜபம் செய்யச் சொல்வது அவ்வளவாகப் பலன் அளிக்காது. ஒவ்வொருவரும் தமக்கென்று உள்ள சில வேலைகளைத் தாங்கள் தான் செய்ய வேண்டும். ஒருவர் பசி அடங்க மற்றொருவர் சாப்பிட்டால் போதுமா? ஒருவர் கற்கவேண்டிய கல்வியை ஒரு வேலைக்காரரை அமர்த்தி கற்கச் சொல்வது சரியாக வருமா? நோய் உள்ளவர்தான் மருந்து சாப்பிடவேண்டும். அதுபோல் ஒரு மனிதன் தானே முயன்றுதான் கடவுள் அருளையும் பெற வேண்டும்.

காயத்ரி, ஞானத்தின் தெய்வம். மந்திரத்தின் பொருள் உணர்ந்து காயத்ரி வழிபாடு செய்பவர் வருங்காலத்தை உணரும் ஞானத்தை அடைவார். இந்த மந்திரம் ஒன்றே ஒரு சாதகரை நேரான பாதைக்குத் திருப்பி அவருக்கு துன்ப நிவாரணம் அளிக்கும். அந்த சாதகர் எத்தகைய துன்பத்தையும் தாங்கிக் கொள்வதற்குத் தேவையான சகிப்புத் தன்மையையும் பொறுமையையும்

அடையப் பெறுவார். இந்த உலகில் அவர் வாழ்க்கை ஒரு வெற்றிகரமான வாழ்க்கையாக மாறி அமையும். இவற்றிற்கெல்லாம் மேலாக மறுபிறப்பு நீங்கி மோட்ச பதம் கிடைக்கும். ஆனால் காயத்ரி மந்திரத்தை பொருள் உணராது ஒரு சடங்காகக் கருதி ஜபம் செய்தால் இவ்வளவு பயன்களும் கிடைக்கும் என்று கூறமுடியாது. அதனால் ஜபம் செய்யும்போது பொருள் உணர்ந்து பயபக்தியுடனும் மனத்தூய்மையுடனும் ஜபம் செய்ய வேண்டும்.

ஆரம்பகாலத்தில் காயத்ரி சாதனையை யாருக்கும் தெரியாமல் தனியாக செய்யவேண்டும். பிறர் அறியச் செய்தால் அவர்கள் இது சரியான முறையல்ல என்று கூறுவார்கள். வேறு பல தியான முறைகளைக் கூறி மனதைக் குழப்புவார்கள். அதனால் ஆரம்பிக்குபோதே மாயையில் உள்ள சாதகன் எதிலும் நம்பிக்கையில்லாதவனாகி எந்த சாதனையுமே செய்யாமல் விட்டுவிடுவான். அதனால் சாதனையில் ஒரு தெளிபான உறுதியான நிலைக்கு வரும் வரையில் யாருக்கும் தெரியாமல் மறைமுகமாக சாதனை புரிவதுதான் நல்லது. சாதனையின் ஒளி கிடைத்தபிறகு மனம் சலனமடையாது. அப்போது எல்லோருக்கும் தெரியும்படி செய்யலாம். தான் பெற்ற அனுபவங்களை மற்றவர்களுக்கும் கூறலாம்.

சிலர் கடவுளுக்கு உருவம் இல்லை என்று கருதுகிறார்கள். அவர்கள் "வழிபாட்டிற்கு ஒரு தெய்வத்தின் உருவச்சிலையோ படமோ தேவைதானா?" என்று கேட்கிறார்கள். அவர்கள் முக்கியமாக ஒரு விஷயத்தை தெரிந்து கொள்ளவேண்டும். வழிபாட்டின் முக்கியமான பகுதி தியானமும் தெய்வ சிந்தனையும்தான். தியானத்திற்கு ஒரு பெயரும் ஒரு உருவமும் இன்றியமையாதவை. தங்கள் உணர்வுகளை

பண்படுத்துவதற்காக மக்கள் தங்கள் உள்ளங்களில் சில அடையாளங்களை பதியவைத்துக் கொள்கிறார்கள். அவைகள் அவர்களுடைய இதயங்களுடன் இணைந்து விடுகின்றன. ஒவ்வொரு குடிமகனும் தேசியக் கொடியை வணங்குகிறான். ஒவ்வொரு முஸ்ஸீமும் காபா உள்ள திசையை நோக்கி வழிபடுகிறார். ஆர்ய சமாஜத்தைச் சேர்ந்தவர்கள் 'ஓம்' என்ற சொல்லை தெய்வமாகக் கருதுகிறார்கள். அக்னி ஹோத்ரம் செய்கிறார்கள். இவற்றிற்கெல்லாம் காரணம் என்ன? ஒரு அடையாளத்தைக் குறியாக வைத்து அந்தக் குறியில் மனதை ஒருமுகப்படுத்துவதைத் தவிர வேறு என்ன காரணம் இருக்கமுடியும்? உருவ வழிபாடுதான் எளியமுறை வழிபாடு.

பிராமணர் முதலான பூநூல் அணிந்தவர்கள்தான் காயத்ரி வழிபாடு செய்யலாம், ஏனையோர் செய்யக் கூடாது என்று கூறுகிறார்கள். இது தவறு. ஜாதி மரபு அடிப்படையில் அமைந்ததல்ல. தொழிலை அடிப்படையாகக் கொண்டு அமைந்தது. இதுதான் பழங்கால மரபு. பிராமணன் என்ற சொல்லுக்கு பிரம்மத்தைக் கண்டவன். நேர்மையாக வாழ்பவன் என்பது பொருள். யார் நேர்மையாக வாழ்ந்தாலும் அவன் பிராமணன்தான். நேர்மையான வாழ்க்கைக்கு ஜாதிகளும் சமயங்களும் எதற்கு? நேர்மையும், கடமை உணர்ச்சியும் உள்ளவன் இதயத்தில் மாசுகள் இருக்காது. அவன் ஆன்ம சாதனை புரிந்தால் அதிகமான நன்மைகளை அடைகிறான். தீய எண்ணங்கள் உள்ளவன் செய்தால் அவனிடமிருந்து தீய பண்புகள் விலகும். இதன் பொருள், 'இனி அவன் பாவங்கள் செய்யமாட்டான் என்பதே தவிர, 'இதற்குமுன் செய்த பாவங்களின் பலனை அனுபவிக்க மாட்டான்' என்பதல்ல.

ஒரே நாளில் தவிர்க்க முடியாத காரணத்தால் ஜபசாதனை செய்யமுடியாமல் போய்விட்டால் அடுத்தநாள் இரண்டு மடங்கு ஜபம் செய்து அந்தக் குறையை நீக்கிவிட வேண்டும். அனுஷ்டானம் செய்துகொண்டிருக்கும் ஒரு பெண்ணிற்கு இடையில் மாதவிலக்கு வந்துவிட்டால் நான்கு நாளைக்கு அனுஷ்டானத்தை நிறுத்தி வைக்க வேண்டும். அதற்கு ஈடாக அனுஷ்டான காலத்தை நான்கு நாள் அதிகப்படுத்திக் கொள்ளவேண்டும்.

படிக்காதவர்களால் சரியாக காயத்ரி மந்திரம் சொல்ல முடியாது. அவர்கள் "ஓம் பூர் புவ ஸ்வஹ" என்னும் பஞ்சாட்சரி காயத்ரி மந்திரம் சொன்னால் போதும். இதையும் சொல்ல முடியாதவர்கள் "ஹரி ஓம் தத் சத்" என்று ஜபம் செய்தால் போதும். இது பஞ்சாட்சரி காயத்ரி மந்திரம் சொன்னதற்கு சமம் ஆகும்.

காயத்ரியை உருவம் வைத்தும் வழிபடலாம். உருவம் இல்லாமலும் வழிபடலாம். உருவ வழிபாடு செய்ய விரும்புபவர்கள் காயத்ரி தேவி சிலையை பிரதிஷ்டை செய்து அவளை அன்னையாகக் கருதி வழிபடலாம். மற்றவர்கள் காயத்ரி சக்தியை ஒளியாக பாவித்து வழிபடலாம். ஒளி வடிவை பொன் நிறத்தில் சூரியன் உதிப்பது போல் மனக்கண்ணில் கண்டு வழிபடலாம். அல்லது எரியும் தீபத்தை வழிபடலாம்.

காயத்ரி ஜபம் செய்யும்போது அதன் பொருளையும் சிந்திக்கலாமா? சிந்திக்கக்கூடாது. காரணங்கள்: 1. ஜபம் தொடர்ச்சியாகவும் இயல்பாகவும் வராது. 2. ஒவ்வொரு சொல்லின் பொருளுக்கும் ஒரு பிம்பம் உண்டு. ஒவ்வொரு பிம்பத்தையும் மனக்கண் முன் கொண்டு வந்தால்தான் பொருளை சிந்திப்பது முழுமையாகும். அதற்கு நேரம் அதிகம் ஆகும் 3. ஜபத்திற்கு இடையில் தடங்கல் ஏற்படக்

கூடாது. பொருளை சிந்திக்கத் தொடங்கினால் அந்த சிந்தனையே தடங்கலாக அமைந்துவிடும். 4. காயத்ரி மந்திரத்தை தட்டுத்தடங்கல் இன்றி, இடைவிடாது தொடர்ச்சியாக ஜபிப்பது மிகவும் முக்கியம்.

காயத்ரி மந்திர ஜபத்துடன், வேறு மந்திர ஜபங்களையும் செய்யலாமா? வேறு மந்திர ஜபங்களை காயத்ரியுடன் சேர்த்து செய்வது நல்லதல்ல. அதனால் கடவுள் நம்பிக்கை சிதறும். கடவுள் நம்பிக்கை ஒரே இடத்தில் மையம் கொண்டிருப்பது தான் சிறப்புடையது. ஒரு மனைவி எவ்வாறு கணவனையே தெய்வமாகக் கருதுகிறாளோ அதுபோல ஒரு சாதகன் ஒரு தெய்வத்தை வழிபடவேண்டும்.அவன் மனதில் தடுமாற்றம் ஏற்படக் கூடாது. எனினும் மற்ற தெய்வங்களை வழிபடக் கூடாது என்ற கட்டுப்பாடு எதுவும் இல்லை.

காயத்ரி 1. உயிர் வாழ்க்கைத் தத்துவம், 2. ஆன்மீக அறிவியல், 3. வேத புராண நூல்கள் ஆகியவற்றின் காரண மூலமாகவும், சாரமாகவும் இருப்பதால் அந்த மகாசக்தியை வேதமாதா என்று அழைக்கிறோம். அதை வழிபடுவதால் நேர்மைப் பண்புகளும், தெய்வீகத் தன்மையும் வளர்வதால் அந்த சக்தியை தேவமாதா என்றும் அழைக்கிறோம். 4. காயத்ரி தேவி மக்களிடையே உள்ள வேறுபாடுகளைக் களைந்து எல்லோரும் சமம்; உலகில் உள்ளவர்கள் அனைவரும் சகோதரர்கள்; ஒரே குடும்பத்தினர் என்ற பரந்த மனப்பான்மைக்கு அடிப்படையான "வசுதைவ குடும்பகம்" "ஆத்மவத் சர்வபூதேஷு" என்ற உள்ளுணர்வை உண்டாக்குகிறாள். அதனால் அவள் விஸ்வமாதா என்றும் அழைக்கப் படுகிறாள். 5. காயத்ரி மந்திரத்தில் வரும் "நஹ்" என்ற சொல் கூட்டுறவு, ஒருமைப்பாட்டுப் பண்புகளையே உணர்த்துகிறது. அந்த உணர்வைப் பெறுவதே

உண்மையான ஞானம். இதனால் ஒவ்வொரு தனிமனிதனின் நலத்திற்காகவும், பாடுபடும் நிலை உருவாகும். அதன் விளைவாக தனி மனிதனும் பயன் பெறுவான்; சமூகமும் பயன் பெறும்.

## காயத்ரி யக்ஞம்

காயத்ரி உண்மையான ஞானம். யக்ஞம் ஞானிகளின் செயல். இந்த ஞானமும் அதன் விளைவான செயலும் ஒன்று சேரும்போது எல்லா பிரச்சினைகளுக்கும் தீர்வு கிடைத்து விடுகிறது. காயத்ரி யக்ஞத்தை செளகரியப்படும் போதெல்லாம் செய்யலாம். யக்ஞத்தில் அவிபாகமாக நெய்யும் சர்க்கரையும் தீயில் இட்டாலே போதுமானது. ஒரு அணையா விளக்கு (அகண்ட தீபம்) ஏற்றிவைத்து மானஸீகமாக அக்னிஹோத்ரம் செய்தால்கூட போதுமானது. இவற்றிற்கு வாய்ப்பில்லாதவர்கள் சாந்திகுஞ்ச் யாக சாலையில் தினமும் நடைபெறும் யக்ஞத்தில் பங்குகொள்ளலாம். இங்கு ஒன்பது யாக குண்டங்கள் உள்ளன. அவைகளில் தினமும் இரண்டு மணிநேரம் யக்ஞம் நடக்கிறது. (இதுபற்றி தெரிந்து கொள்ள விரும்புபவர்கள், சாந்திகுஞ்சிற்கு நேரடியாக கடிதம் எழுதித் தொடர்பு கொள்ளவும்).

உலகியல் சூழ்நிலைகள், சூக்கும உலக சூழ்நிலைகள் ஆகிய இரண்டையும் தூய்மை செய்ய மிகப் பெரிய அளவில் யாகங்கள் செய்யப்படுகின்றன. இந்த யாகங்களில் பங்கு பெறுவோர் உள்ளுணர்வுகள் தூய்மை அடைகின்றன. அதனால் வாழ்க்கை உற்சாகமும் நம்பிக்கையும், மகிழ்ச்சியும் நிறைந்ததாக மாறுகிறது. இதில் பங்கு பெறுபவர்கள் ஒவ்வொருவரும் தெய்வ தட்சிணையாக ஒரு தீய பழக்கத்தை விட்டுவிட வேண்டும்; புதிதாக ஒரு நல்ல பழக்கத்தை உண்டாக்கிக் கொள்ளவேண்டும். இதன் மூலம் இதயத் தூய்மையும்

ஒழுக்கமும் வளர யக்ஞம் வகை செய்கிறது.

தியாகம் செய்தல், தானம் செய்தல், வழிபாடு செய்தல் ஆகிய மூன்றும் இணைந்ததுதான் யாகம். இதன் பொருளாவது: ஒருவர் தான் சம்பாதிக்கும் செல்வத்தையெல்லாம் தனக்கும், தன் குடும்பத்துக்கும் மட்டுமே செலவு செய்யக்கூடாது. தன் சம்பாத்தியத்தில் ஒரு பகுதியை மற்றவர்கள் நலனுக்காகவும் செலவிட வேண்டும். மக்கள் ஒருவருக்கு ஒருவர் உதவியாக இருந்து தெய்வீக மனப்பான்மையை வளர்த்துவருவதும் அவசியம்.



# 27. காயத்ரியும் யக்ஞமும்

காயத்ரியும் யக்ஞமும் ஒன்றோடு ஒன்று இணைந்தவை; பிரிக்க முடியாதவை. காயத்ரி இந்தியப் பண்பாட்டின் தாய்; யக்ஞம் இந்திய சமயத்தின் தந்தை; இவை இரண்டும் ஒன்றை ஒன்று சார்ந்தவை. யக்ஞம் செய்யாத காயத்ரி அனுஷ்டானம் முழுமை பெறாது. பழங்காலத்தில் மொத்த ஜபத்தில் பத்தில் ஒரு பங்கு அக்னிஹோத்ரத்துடன் செய்யப்பட்டன. தற்காலத்தில் காயத்ரி அனுஷ்டானம் செய்யும்போது நூறில் ஒரு பங்கு ஜபம் யாகம் வளர்ந்து அதில் ஆகுதி கொடுத்து (அவிபாகமாக அளித்து) செய்யப்படுகிறது.

பழங்கால வேதநூல்களில் ஜனகருக்கும் யாக்ஞ வால்க்யருக்கும் இடையில் நடைபெறும் ஒரு உரையாடல் இடம் பெற்றுள்ளது. அதில் ஜனகர் யக்ஞம் செய்வதில்

உண்டாகும் கஷ்டங்களைக் கூறுகிறார். யாக்ஞவால்க்யர் ஒவ்வொரு குறையையும் ஈடுசெய்யும் மார்க்கங்களைக் கூறுகிறார். அதில் சாறுகள் கிடைக்கவில்லையென்றால் அவற்றிற்கு பதிலாக உணவு தானியங்களை அவிபாகமாக இடலாம்; உணவு தானியங்கள் கிடைக்கவில்லை என்றால், மூலிகை முதலான இலைகளை யக்ஞத் தீயில் இடலாம்; அதுவும் இல்லையென்றால் பக்தியுணர்வுவை (பாவனையாக) நெருப்பில் அவிபாகமாக இட்டால் போதுமானது என்று யாக்ஞவால்க்யர் கூறுகிறார். இதிலிருந்து அனுஷ்டானத்திற்கு மட்டுமல்ல, தினசரி வழிபாட்டிற்கும் கூட யாகம் வளர்த்து காயத்ரி ஜபம் செய்வது இன்றியமையாதது என்று தெரிகிறது.

குடும்பத் தலைவிக்கு வேலை அதிகம் இருக்கும். அவர்கள் சமையல் முடிந்தவுடன் ஐந்து கவளம் சோற்றையோ அல்லது முதலில் சுட்ட ரொட்டியில் ஐந்து துண்டுகளையோ காயத்ரி மந்திரம் ஜபித்து எரியும் அடுப்பில் போட்டுவிட்டால் அதுவே யாகம் வளர்த்ததற்கு ஒப்பாகும். சர்க்கரையையும், நெய்யையும் கலந்து மந்திரம் சொல்லி எரியும் அடுப்பில் போடுவது அக்கினி ஹோத்ரம் செய்வதற்கு சமம். இவைகள் இரண்டும் முடியவில்லையென்றால் விளக்கை ஏற்றி வைத்து, அந்த விளக்கின் தீப ஒளிக்கு ஊதுபத்தி புகையை காண்பித்தாலும் போதும். ஹோலி பண்டிகை என்பது ஆண்டிற்கு ஒருமுறை நடத்தப்படும் கூட்டு யக்ஞமே ஆகும். தெய்வங்களுக்கு அர்ப்பணம் செய்யும் ஆகுதிகளை ஒரு விளக்கு அல்லது ஒரு மெழுகுவர்த்தி அல்லது ஒரு ஊதுபத்தியின் நெருப்பில் சிறிதளவு போட்டாலும், அது யக்ஞகுண்டத்தில் வளர்க்கும் புனிதத் தீயில் இடப்படும் ஆகுதிகளுக்கு சமமானவை ஆகும். இதில் மனத்தூய்மையும் ஆழ்ந்த பக்தி ஈடுபாட்டுடன் காயத்ரி ஜபம் செய்வதும்தான் முக்கியமானவை.

பழங்காலப் புனித நூல்களில் காணப்படும் கடவுளின் பெயர்களில் யக்ய புருஷன் என்பதும் ஒன்று. ஷட்பாத உபநிடதத்தில் யக்ஞமே விஷ்ணு என்று கூறப்பட்டுள்ளது. ரிக் வேதத்தில் யக்ஞமே புரோஹிதர் என்று கூறப்பட்டுள்ளது. சமய விழாக்களில் யக்ஞம் முக்கிய அங்கம் வகிக்கிறது. ஒரு மனிதன் குழந்தையாகப் பிறப்பது முதல் அவன் மரணம் அடையும் வரையில் அவன் வாழ்க்கையில் 16 விழாக்கள் நடைபெறுகின்றன. இந்த விழாக்களில் ஒன்று கூட யக்ஞம் இன்றி நடத்தப் படுவதில்லை. குறிப்பாக பூநூல் அணிவிக்கும் விழா காயத்ரியும் யக்ஞமும் இணைந்த விழா. திருமண விழாவில் மணமகனும், மணமகளும் ஏழுமுறை யக்ஞத் தீயை சுற்றி வரவேண்டும். இந்து மத ஆசாரப்படி ஒருவருடைய இறந்த உடலை எரிக்கும் போது கபால கிரியை செய்யப்படுகிறது. இந்த கிரியையில் பிணம் எரியும். நெருப்பில் நெய்விட்டு பூர்ணாகுதி செய்வது ஒரு முக்கிய சடங்காக உள்ளது. இந்த யக்ஞம் புனிதமானது என்பதில் ஐயம் இல்லை. அறிவியல் அடிப்படையில் பார்த்தாலும் யக்ஞம் தனிமனிதன் மகிழ்ச்சிக்கும் சமூக நலனுக்கும் பெருந்துணை புரிவதாக உள்ளது.

யக்ஞம் பரந்த நோக்கம் உடையது. உலகம் முழுவதும் நலம் பெறவேண்டும் என்பதற்காக செய்யப்படுவது. யக்ஞம் என்ற சமஸ்கிருத சொல்லுக்கு மூன்று பொருள்கள் உள்ளன. 1. தெய்வீகம், 2. சங்கம், 3. தர்மம். தெய்வீகம் என்பது தூய்மையடைந்த புனித நிலை, சங்கம் என்பது ஒற்றுமையையும் கூடி வாழும் மனப்பான்மையையும் தன்னகத்தே கொண்டது. தர்மம் என்பது தாராள மனப்பான்மை, நேர்மை, சமூகத்திற்கு தொண்டு செய்யும் மனம், உலகம் முழுவதையும் ஒரே குடும்பமாகக் கருதுதல் ஆகியவற்றை உள்ளடக்கியது.

இவை மூன்றும் தவயோக வளர்ச்சிக்கும், சமூக முன்னேற்றத்திற்கும் துணை புரிகின்றன.

"ஜீவன் - யக்ஞம்" என்பது என்ன? "தன்னலத் தியாகமே ஒரு மனிதனை உயர்த்த வல்லது" என்பதுதான். கீதை "பிறருக்கு கொடுக்காமல் தானே உண்பவன் ஒரு திருடன்; அவன் பாபம் செய்கிறான். யக்ஞத்தில் அர்ப்பணித்தது போக மீதியுள்ளதையே (யக்ஞ சேஷத்தையே) ஒரு மனிதன் சாப்பிட வேண்டும் என்று கூறுகிறது.

**यज्ञशिष्टा शिनः सन्तो मुच्यन्ते सर्व किल्विषैः।**
**भुञ्जन्ते तत्वयं पापाये पचन्त्यात्मकारणात्॥** गीता 3.31

யக்ஞஜசிஷ்டா சிந: ஸந்தோ முச்யந்தே ஸர்வ கில்விஷை:!
புஜந்தே தத்வயம் பாபாயே பசந்த்யாத்மகாரணாத் !! -கீதா

தெய்வங்கள் யாவும் யக்ஞத்தின் மூலமே தெய்வ நிலையை அடைந்துள்ளன. சமூகமும், தனிமனிதனும் எல்லா நிலைகளிலும் அமைதியும், மகிழ்ச்சியும், வளர்ச்சியும் ஒருங்கே அமையப் பெற யக்ஞமே சிறந்த வழி. தனிமனிதனையும் அவன் வாழும் சமூகத்தையும் புனிதமாக்கவும், ஒவ்வொரு தனிமனிதனையும் "தியாகம், இரக்கம், உதவும் உள்ளம்" ஆகியவைகளைக் கொண்ட மனமே தெய்வீக மனம் என்பதை உணரச் செய்யும் யக்ஞத்தை விட சிறந்த மார்க்கம் வேறு எதுவுமே இல்லை. "யக்ஞத் தீ பேசவில்லையென்றாலும் அது ஆன்மீக குருவாக (புரோகிதராக) செயல்பட்டு மக்களை ஊக்குவித்து அவர்கள் எல்லா வகையிலும், அமைதியும், மகிழ்ச்சியும், வளர்ச்சியும் அடைய உதவுகின்றது" என்று ரிக்வேதம் கூறுகின்றது. யக்ஞத்தின் அடிப்படைத் தத்துவத்தை தெளிவாகப் புரிந்துக்கொண்டு அதை அன்றாட வாழ்க்கையில் நடைமுறைக்கு கொண்டு வந்துவிட்டால் மனிதனே தெய்வமாகிவிடுகிறான்;

சொர்க்கமே பூலோகத்திற்கு வந்துவிடும். இப்போதுள்ள யுகம் மாறி ஒளிமிகுந்த புது யுகம் மலர இந்த அறிவுத் தெளிவு இன்றியமையாததாகும்.

தெய்வங்கள் யாவும் யாகம் செய்தே தெய்வ நிலையை அடைந்தார்கள் என்று கூறப்படுகிறது. யக்ஞத்தின் மூலமே மனிதன் தன்னுள் பிரம்மத்தை காண முடியும். அந்த பிரம்ம நிலையை அடையாத வரையில் மனிதன் விலங்கு நிலையை விட எந்த வகையிலும் உயர்ந்தவனல்ல. ஒரு பிராமணன் செய்ய வேண்டிய முக்கிய செயலே யக்ஞம் செய்வதுதான் என்றும் கூறப்படுகிறது. 'யக்ஞத்தின்' நோக்கம் பொதுநலம் வளரவேண்டும்; உலக அமைதி ஏற்படவேண்டும்; எல்லோரும் இன்புற்று இருக்கவேண்டும் என்பவைகள் தான். உடலின் எல்லா உறுப்புகளும் ஒருங்கிணைந்து செயல்பட்டால்தான் மனித வாழ்க்கை அமைதியாகச் செல்லும். ஒவ்வொரு உறுப்பும் "நான்தான் பெரியவன்; என் இஷ்டப்படிதான் மற்ற உடல் உறுப்புகள் செயல்படவேண்டும்" என்று தன்னிச்சைப்படி செயல் படத்தொடங்கி விட்டால் எல்லாமே தலைகீழாக மாறிவிடும். விலங்குகள், தாவரங்கள் வெளியிடும் பிராண வாயுவை சுவாசித்து வாழ்கின்றன. தாவரங்கள், விலங்கினங்கள் சுவாசித்து வெளியிடும் கார்பன் டை ஆக்ஸைடை உணவாகக் கொண்டு வாழ்கின்றன. பிரபஞ்சம் முழுவதும் உள்ள எல்லா பொருள்களும், உயிரினங்களும் ஒன்றையொன்று சார்ந்துதான் வாழ்கின்றன. இந்த "சார்ந்து வாழும் தத்துவமே' யக்ஞத்தின் அடிப்படை தத்துவமாகும். சரியான அணுகுமுறையில் நேர்மையாக செயல்பட்டால் எவ்வளவு பெரிய பிரச்சனைக்கும் தீர்வு கண்டு விட முடியும். நேர்மையற்ற முறையில் மனம் போன போக்கில் முறையின்றி செயல்பட்டால் பிரச்சனைக்கு தீர்வு கிடையாது. அதற்கு

பதிலாக வேண்டாத துன்பங்களும், தொல்லைகளும் நெருக்கடிகளும் தான் வந்து சேரும். "பிரஜாபதி(கடவுள்) மனிதனையும் யக்ஞத்தையும் ஒரே சமயத்தில் படைத்தார்; மனிதன், வாழ்க்கையை யக்ஞத்தோடு இணைந்ததாகக் கொண்டு இன்பமும், அமைதியும் பெற்று வாழ்வதற்கு வழிவகுத்தார்" என்று கீதாசிரியன் கூறுகிறார். உலக நன்மையை வளர்க்கும் இந்த உயர்ந்த கொள்கைக்கு யக்ஞ தத்துவம் என்று பெயர். மக்கள் மனதிற்கு அறிவு புகட்டும் அடையாளமான சமயச் சடங்குதான் அக்னிஹோத்திரம்.

யாகத்தின் மற்றொரு அங்கம் அறிவியல் அங்கம். யாகம் சூழ்நிலையில் பரவியுள்ள தீயவாடையை அகற்றி சுற்றுச் சூழலையே தூய்மைப்படுத்தும் முக்கிய பணியையும் செய்கிறது. இன்றைய நிலையில், எங்கும் பரவியுள்ள காற்றில் கலப்படம் நிறைந்திருப்பது உலகத்தில் மிகவும் பயங்கரமான பிரச்சனையாக உள்ளது. யக்ஞத்தில் உண்டாக்கப்படும் ஆற்றல் மிகவும் சிறப்பாக வேலை செய்கிறது. சுவாசிக்கும் காற்றையே தூய்மைப் படுத்துகிறது. காற்றில் கலந்துள்ள நோய்க் கிருமிகளை அழித்து வியாதிகளே வராமல் பாதுகாக்கிறது. பழங்காலத்தில் உடல் நோய்களும், மனநலக் குறைபாடுகளும் யக்ஞத்தின் மூலம் தீர்க்கப்பட்டதோடு வராமல் தடுக்கப்பட்டும் இருக்கின்றன. யக்ஞோபதி எனப்படும் யக்ஞ மருத்துவ முறையால் எவ்வாறு நோய்கள் சிறந்த முறையில் அகற்றப்படுகின்றன என்பதற்கு போதுமான அறிவியல் ஆதாரங்கள் கண்டுபிடிக்கப்படவில்லை. அதுதான் இப்போது உள்ள குறை. யக்ஞத்தில் வளர்க்கப்படும் புனிதத் தீயில் மருத்துவ மூலிகைகள் எல்லாம் எரிக்கப்படுகின்றன. அந்த மூலிகை எரியும் நெருப்பிலிருந்து வெளிப்படும் புகையும் ஆவியும் மிகவும் மென்மையானவை; சக்தியுள்ளவை; விரும்பிய பலனை தரவல்லவை. சலனபுத்தி, விசித்திரபுத்தி,

தீயபழக்கங்கள், குற்றப் பண்புகள் இது போன்ற மனக் கோளாறுகளால் தற்காலத்தில் பெரும்பாலான மனிதர்கள் அவதிப்படுகிறார்கள். இவைகளை எல்லாம் போக்கு வதற்கு மிகவும் சக்தி வாய்ந்த மருத்துவ முறை யக்ஞோபதி மருத்துவ முறை

பொதுவாகக் கூறினால் பர்ஜன்யப் பொழிவே யாகம் செய்வதன் விளைவு என்று கூறலாம். மேலோட்டமாக பார்த்தால் பர்ஜன்யம் என்ற சொல்லுக்கு 'மேகங்கள்' என்பதே பொருளாகும். ஆனால் அதன் நுட்பப் பொருள் பிராணன் அல்லது உயிராற்றல். பழங்காலத்தில் பஞ்சம் ஏற்பட்டால் குறிப்பிட்ட முறையில் அக்னிஹோத்திரம் செய்தார்கள்; மழை பொழிந்தது; பயிர் விளைந்தது; பஞ்சம் விலகியது. யக்ஞத்தில் உண்டாகி வெளிப்படும் மிகவும் நுட்பமான பிராண சக்தியே பர்ஜன்யம். அது காற்று, மேகங்கள் மூலமாகப் பரவி மக்களுக்கு நன்மை செய்கிறது. இந்த பர்ஜன்யப் பொழிவின் விளைவால் தாவரங்கள் முதலான உயிரினங்கள் யாவும் புத்துயிர் பெறுகின்றன. அதோடு புத்துணர்ச்சியும் பெறுகின்றன; உயிரற்றவைகளும் உயிராற்றலை வளர்க்கும் சக்தியைப் பெறுகின்றன. இவ்வாறு யாகம் பிரபஞ்சத்தின் அத்தனை அங்கங்களின் முழுமையான வளர்ச்சிக்கும் துணைபுரியும் அரிய சாதனமாக உள்ளது. காற்று மண்டலத் தூய்மை யையும், சுற்றுப்புறத் தூய்மையும் யாகத்தினால் கிடைக்கும் மிகப்பெரிய பயன்களாகும். யாகம் ஒவ்வொரு தனிமனிதனின் முழுமையான வளர்ச்சியை (எண்ணம், பண்பு, உடல்நலம் முதலான அத்தனை உயர்வளிக்கும் வளர்ச்சிகளையும்) ஊக்குவிக்கிறது; ஏன்? எல்லா தனி மனிதர்களும் எல்லாம் பெற்று இன்புற்று வாழும் ஒரு பரந்த சமூக சூழலையே உருவாக்கிவிடுகிறது.

ஒரு தனிப்பட்ட மனிதனாயினும் சரி; ஒரு

சமூகமாயினும் சரி; ஒரு நாடே ஆனாலும் சரி; வளர்ச்சியும் செழிப்பும் அடையவேண்டுமானால் அதற்கு அறிவும் அறிவியல் வளர்ச்சியும் இன்றியமையாதவை. அறிவு என்பது கல்வியறிவு மட்டுமல்ல. தெய்வீக ஞானம், பின்னர் வருவதை முன்னரே யூகித்து அறியும் திறன், முன் கவனம், நல்லெண்ணம், தாராள மனப்பான்மை, நீதிநெறியில் நிற்றல் ஆகியவற்றையும் உள்ளடக்கியதுதான் அறிவு. அறிவியல் வளர்ச்சியோ வலிமை, திறமை, உலகில் உள்ள பல்வேறு ஆற்றல்கள் (மின் ஆற்றல், இயந்திர ஆற்றல் போன்றவை), ஆதாரங்கள், வளம் பெருகியிருத்தல் உடனுக்குடன் வெற்றியைப் பெறுவதற்கான செயலாற்றல் ஆகியவற்றை உள்ளடக்கியது. பழங்கால இந்தியா அறிவில் மட்டுமல்ல; அறிவியல் வளர்ச்சியிலும் வளம் மிக்கதாக இருந்தது.

தற்கால அறிவு 1. கண்ணால் கண்டவை, 2. அனுபவத்தில் அறிந்தவை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டது. தற்கால விஞ்ஞானமோ இயந்திர நுணுக்கம் ஒன்றை மட்டுமே அடிப்படையாகக் கொண்டுள்ளது. இவற்றால் கிடைக்கும் நன்மைகள் மிகவும் குறைவு. அந்த குறைவான நன்மைகளையும் மிகவும் பாடுபட்டுப் பெறவேண்டியுள்ளது. அப்படிக் கஷ்டப்பட்டு, பெற்ற நன்மைகள் நிலைத்து நிற்கக் கூடியவைகளா என்றால் அதுவும் இல்லை. கற்றறிந்த பேராசிரியர்களும், ஆராய்ச்சியாளர்களும் தேடிக் குவித்து வைத்துள்ள அறிவு உலகியலுக்குத் தேவையான அறிவை மிகவும் வளர்த்துள்ளன என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இந்த அறிவு ஆன்மீக உயர்வுக்கு சிறிது கூட பயன்படக் கூடியதாக இல்லை. பரந்த மனப்பான்மை, தன்னலத் தியாக உணர்வு, பொதுநலம் பேணும்

அன்புள்ளம் முதலான ஆன்ம பலத்தை வளர்க்கும் அம்சங்கள் எதுவுமே இந்த அறிவால் வளரவில்லை. இந்த அறிவு உண்மையில் மனிதர்களை சுயநலம் மிகுந்தவர்களாகவும், அர்த்தமற்ற ஆடம்பர வாழ்க்கை வாழ்பவர்களாகவும், வீண் கௌரவம் பாராட்டுபவர்களாகவுமே மாற்றியுள்ளது. அறிவியல் ஆராய்ச்சிகள் அதிசயிக்கத்தக்க சாதனைகளைப் புரிந்துள்ளன. எனினும் அவை மனித சமூகத்துக்கு மிகவும் கேடு செய்பவைகளாகவும் உள்ளன என்பதை மறுக்க முடியாது. ரசாயன உரங்களின் உபயோகத்தால் உணவு உற்பத்தி குறிப்பிடத் தகுந்த வகையில் பெருகியுள்ளது. ஆனால் இந்த பயிர்கள் உடல் நலத்தைப் பாதிக்கக் கூடிய நச்சுத்தன்மையையும் கொண்டவைகளாய் உள்ளன. இயந்திர வளர்ச்சியினால் பொருள்களின் உற்பத்தி பன்மடங்கு பெருகியுள்ளது. அதனால் கற்பனைக்கும் எட்டாத அளவுக்கு 1. பொருள் சேதம் ஏற்பட்டுள்ளது. 2. காற்று மண்டலமே நஞ்சு கலந்த காற்றால் நிறைந்துள்ளது. 3. இந்த நச்சுக்காற்றை சுவாசிப்பதால் மக்கள் நோய் முதலான பாதிப்புகளுக்கு ஆளாகிறார்கள். 4. இன்னும் ஒரு நூற்றாண்டுக்குள் பூமியில் புதைந்துள்ள நிலக்கரி, பெட்ரோல் முதலான எரிபொருள் ஆதாரங்கள் தீர்ந்துவிடும் என்ற அச்சம் விஞ்ஞானிகளுக்கு எழுந்துள்ளது. 5. எரிபொருள்கள் கிடைக்காமையால் பெரிய பெரிய தொழிற்சாலைகள் எல்லாம் செயலற்று அழிந்துவிடும் என்று பயமும் தோன்றியுள்ளது. இப்போது மிகவும் முயன்று அணுசக்தியைக் கொண்டு மின் ஆற்றல் உற்பத்தி செய்கிறார்கள். இதுவும் காற்று மண்டலத்தின் தூய்மையைக் கெடுக்கக் கூடியதாகவே உள்ளது.

பழங்காலத்தில் அறிவு, அறிவியல் ஆகியவற்றின் அடிப்படைகள் முற்றிலும் மாறுபட்டவைகளாய்

இருந்தன. அவைகள் இப்போது உள்ளதைப் போல உலகியல் வாழ்க்கையை மட்டுமே அடிப்படையாகக் கொண்டவை அல்ல. அக்கால அறிவும், அறிவியலும் ஆன்மீக அடிப்படையில் வளர்ந்தவை. "நமது கண்களால் பார்க்கும் எல்லாப் பொருள்களும் நாம் கண், காது, தோல் முதலான ஐம்பொறிகளாலும் உற்றறிய முடியாத சூட்சும நிலையிலும் உள்ளன; சூட்சும நிலையில் அவை மிகவும் அதிகமாகவே உள்ளன" என்ற உண்மையை தற்கால அறிவியல் ஒப்புக் கொண்டுள்ளது. நம் எண்ணங்களும், முடிவுகளும் கூட ஜடப் பொருள்களைப் போன்றவைகளே. அவற்றின் மூலம் காந்த சக்தியைச் செலுத்தி, கண்ணுக்குப் புலனாகாத விண்ணுலகில் இயங்கிக் கொண்டிருக்கும் சில குறிப்பிட்ட ஜடப் பொருள்களின் அணுக்களை கவர்ந்து இழுக்க முடியும். இந்த அறிவியல் உண்மையை அக்கால ரிஷிகள் தெளிவாக அறிந்திருக்கிறார்கள். அனுபவத்தில் நன்றாக உணர்ந்திருக்கிறார்கள். இதை அவர்கள் தெளிவாக "பிரபஞ்சத்தில் உள்ள எல்லா ஜடப் பொருட்களையும் உருவாக்கியுள்ள அணுக்கள் யாவும் மனிதனின் உடலிலும் உள்ளன; மனதிலும் உள்ளன" என்று கூறியுள்ளனர். இதை தமிழக சித்தர்கள் மிகவும் சுருக்கமாக "அண்டத்தில் உள்ளது பிண்டத்தில்" என்ற மூன்றே சொற்களில் கூறியுள்ளார்கள். இந்த உண்மையை அடிப்பைடயாகக் கொண்டு அக்கால ரிஷிகள் அறிவியல் ஆராய்ச்சிகள் நடத்தினார்கள். அந்த ஆராய்ச்சிகள் மூலம் பலவேறு ஆன்மீக சாதனைகளைக் கண்டுபிடித்தார்கள். அந்த சாதனைகள் மனிதவுடலிலும், மனதிலும் மறைந்து உறங்கிக் கொண்டிருக்கும் பல்வேறு வகையான ஆற்றல்களை விழிப்படையச் செய்யும் மார்க்கங்களாகும்.

மிகப் பழங்காலத்தில் இந்த ஆராய்ச்சிகள் 'காயத்ரி', 'யக்ஞம்' ஆகியவற்றின் அடிப்படையிலேயே நடத்தப்பட்டன. அக்கால ஆன்மீக ஞானம் காயத்ரியை

தாயாகவும், யக்ஞத்தை தந்தையாகவும் கொண்டிருந்தது. முறையான காயத்ரி வழிபாடு உடலிலும், மனதிலும் உறங்கிக் கொண்டிருக்கும் தெய்வீக ஆற்றல்களை விழிப்படையச் செய்கிறது. அதோடு ஆன்மீக ஒழுக்க நெறியை வளர்க்கிறது; நுண்ணறிவை வளர்க்கிறது; பின்னர் வருபவைகளை முன்னரே யூகித்து உணரும் சக்தியை அளிக்கிறது. அதனால் அன்றாட வாழ்வில் வரும் சிக்கல்களையும், பிரச்சினைகளையும் எளிதாக தீர்த்துக் கொள்ள முடிகிறது. இதைப் போல் யக்ஞ அறிவியலும் மிகவும் முக்கியமானது. யாகம் வளர்த்து, சமித்துகள், அவிபொருள்கள், சாறுகள் முதலியவற்றை புனிதத் தீயில் இட்டு வேதமந்திரங்களை ஓதும்போது ரேடியோ அதிர்வலை இயக்கம் உண்டாகிறது. இந்த இயக்கத்தில் உருவாகி வெளிப்படும் சக்தி வாய்ந்த அதிர்வலைகளை உலகத்தின் எந்த பகுதிக்கும் அனுப்பலாம்; எந்த ஒரு தனிப்பட்ட மனிதனையும் பற்றச் செய்து அவனுக்கு ஒரு குறிப்பிட்ட நன்மையை உண்டாகச் செய்யலாம்; அல்லது ஒரு குறிப்பிட்ட நோக்கம் நிறைவேறச் செய்யலாம்.

அவற்றின் உதவியால் ஒரு குறிப்பிட்ட பகுதியில் மழைப் பொழிவை உண்டாக்கி பயிர் விளைச்சலைப் பெருக்கி அப்பகுதியின் பஞ்சத்தை போக்கலாம்; வாயு மண்டலத்தில் உயிராற்றலை அதிகப்படுத்தலாம். ஒரு குறிப்பிட்ட பகுதியின் கருத்துக்கள், எண்ணங்கள், உணர்ச்சிகள், சந்தர்ப்ப சூழ்நிலைகள் ஆகிய யாவற்றையும் திருத்தி அமைக்கவும் யக்ஞங்களைப் பயன்படுத்தலாம்.

ரிஷிகள், யாகத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்ததற்கு காரணங்கள் இரண்டு. 1. உலக வாழ்க்கைக்குத் தேவையான எல்லா வளங்களையும் அளிப்பதோடு, வாழ்க்கையில் இன்பமும் வளர்ச்சியும் பெறவும் யாகம் உதவுகிறது. 2. ஆன்மாவை உயர்நிலக்குக்

கொண்டு சென்று மனதையும், உடலையும் தூய்மைப் படுத்துகிறது; ஒரு சுற்றுப்புறத்தில் உள்ள எல்லா மனங்களும் தூய்மை அடையும் போது அங்கு ஒரு அமைதியான, சூழ்நிலை உருவாகிறது. குடும்ப வாழ்க்கையில் பக்தி, ஒழுக்கம், ஆன்மிக நெறி, தூய்மை வளர ஒவ்வொரு வீட்டிலும் பலி வைஸ்ய யாகம் செய்வது வழக்கம். மக்கள் மனதை மறைத்திருக்கும் அறியாமை இருளை அகற்றி ஆன்மீக ஒளியையும், அறிவொளியையும், மனச்சாட்சியையும், ஒழுக்கத்தையும் பிரகாசிக்கச் செய்வதற்காக வாஜபேய யாகம் செய்யப்பட்டது. உள் நாட்டுப்பிரச்சினைகளையும், சர்வதேச பிரச்சினை களையும் தீர்த்து நாடுகளிடையேயும் மக்களிடையேயும் ஒற்றுமையையும், ராஜ விசுவாசத்தையும் வளர்ப்பதற்காக ராஜசூய யாகமும், அஸ்வமேத யாகமும் செய்யப்பட்டன. எல்லாவித யக்ஞங்களுக்கும் பொதுவான ஒரு அடையாளச் சின்னமாக காயத்ரி யக்ஞம் செய்தார்கள்.

வேதங்களில் முதன்மையான ரிக்வேதம். அதன் முதல் மந்திரம் "அக்னி மிடே புரோஹிதம்" என்பது. இதில் தீ கடவுளின் முதல் பெயராக விவரிக்கப்படுகிறது. மனித வாழ்க்கையில் அடையவேண்டிய பேறுகள் அனைத்தையும் அக்னியின் மூலமாகவே பெறுகிறோம். அதனால் தீ புரோகிதர் என்று அழைக்கப்படுகிறது. அதாவது எல்லா வகையான ஞானங்களையும் அளிக்கும் ஆசிரியராகக் கருதப்படுகிறது. கடவுள் எங்கும் நிறைந்துள்ளவர். அதனால் அவருக்கு என்று ஓர் உருவம் இல்லை. தெய்வீக உணர்வுகளாக உணர்வதன் மூலமே அவரை அனுபவிக்க முடியும். அதாவது சத், சித், ஆனந்தம் ஆகிய மூன்று உணர்வு எல்லைகளிலேயே கடவுளை உணர முடியும். கடவுளை உணர்வதற்கு தீயை விட சிறந்த இயற்கைச் சின்னம் எதுவும் இல்லை. அதனால்தான் ரிக் வேதத்தின் முதல் மந்திரத்தில் கடவுள் புனிதத் தீயாக

தெய்வீகத் தீயாக விவரிக்கப்படுகிறார். கடவுள் நம்முள் மறைந்திருக்கும் தெய்வீக ஒளியாக இருப்பதால் அவர் "பிரம்மதேஜஸ்" என்று அழைக்கப்படுகிறார். வரலாற்று ஆய்வாளர்கள் இந்தியாவில் இருந்து வந்த மிகவும் பழமையான வழிபாடு "நெருப்பு வழிபாடுதான்" என்று கருதுகிறார்கள். ஈரானில் வாழ்ந்து வந்த பண்டைக்கால ஆரியர்களான பார்ஸி மக்களின் வழிபாடும் "நெருப்பு வழிபாடு" தான். தீக்கடவுளின் கோவில்களே அவர்கள் வழிபாட்டு மையங்களாக இருந்தன. வட இந்தியாவில் உள்ள சிறப்பு வாய்ந்த எரிமலைப் பகுதியில் இன்றும் நெருப்பு வழிபாடு உள்ளது. அக்கால ரிஷிகளின் ஆஸ்ரமங்களில் எப்பொழுதும் புனிதத்தீயின் புகை மூட்டம் இருந்து கொண்டே இருக்கும். அதற்கு "துனி" என்று பெயர். வேத கர்ம காண்டங்களில் பஞ்சாக்னி யக்ஞம் வளர்க்கப்பட்டது. அதாவது ஐந்து வகையான தீ மூட்டி ஹோமம் செய்யப்பட்டது. உண்மையில் அக்னிஹோத்ரம் என்பது நெருப்பு வடிவில் இறைவனைக் கண்டு வழிபடுவதுதான்.

யாகத்தில் வளர்க்கப்படும் புனிதத் தீயை நாம் ஏன் புரோகிதராக மதிக்கிறோம்? அது நமக்கு ஐந்து உயர்ந்த கருத்துக்களை உணர்த்துகிறது; நம்முள் அக்கருத்துக்களை ஊக்குவிக்கிறது.

1. வெப்பத்தையும், ஒளியையும் வெளிவிடுவது நெருப்பின் இயல்பு. இது எதை உணர்த்துகிறது? நாம் நெருப்பைப் போன்ற ஒளிமிக்க சுறுசுறுப்பான வாழ்க்கை வாழவேண்டும்; அறிவொளி மிக்க வாழ்க்கை வாழ வேண்டும் என்பதையே உணர்த்துகிறது.

2. நெருப்பின் ஜ்வாலை எப்போதும் மேல்நோக்கி செல்கிறது. அதை எவ்வளவு சக்தி கொண்டு அழுத்தினாலும் அதன் நாக்குகளாக உள்ள தீநாக்குகள் கீழ்

நோக்கி செல்வதில்லை. அதுபோல நம்முடைய அறிவும், நோக்கமும் உயர்ந்தே செல்லவேணடும்; தாழ்ந்து கீழ்நிலைக்கு செல்லக்கூடாது என்பதை இது உணர்த்துகிறது.

3. நெருப்புப் பற்றிய எந்த பொருளும் நெருப்பாகவே மாறிவிடுகிறது. இது எதைக் காட்டுகிறது? நாம் ஒவ்வொருவரும் உயர்ந்த பண்பை பெற்றிருக்க வேண்டும்; அப்படியிருந்தால் நம்முடன் தொடர்பு கொண்டவர்களும் உயர்ந்த பண்புள்ளவர்களாக மாறுவார்கள்.

4. நெருப்பு எதையும் தனக்கென்று சேர்த்து வைத்துக் கொள்வதில்லை. நெருப்பில் இடப்பட்ட எந்த பொருளும் ஆவியாகி மறைந்து விடுகிறது. அந்தப் பொருளின் ஆவி புகைமயமாக காற்று மண்டலம் முழுவதும் பரவி எங்கும் பரவியுள்ள பிரபஞ்ச மயமாகவே ஆகிவிடுகிறது. இதன் மூலம் தீ விளக்கும் கருத்து என்ன? நாம் சம்பாதிக்கும் பொருளை சுயநல நோக்கத்தில் சேர்த்து வைக்கக் கூடாது. நாம் பெற்றுள்ள செல்வங்களையும் ஆதாரங்களையும், பண்புகளையும் மக்களின் நன்மைக்காகவே பயன்படுத்த வேண்டும். நாம் தாராள மனம் படைத்தவர் களாய் இருக்க வேண்டும். இது எவ்வளவு உயர்ந்த போதனை?

5. தீ அணைந்தவுடன் கடைசியாக தங்குவது சாம்பல் தான். மனித வாழ்க்கையின் முடிவு என்ன தெரியுமா? எல்லா மனிதர்களும் முடிவில் ஒரு பிடி சாம்பலாகத்தான் மாறுகிறார்கள். யாக சாம்பலை நெற்றியில் இட்டுக் கொள்வதில் ஒரு தத்துவமே அடங்கியுள்ளது. "மரணம் தவிர்க்க முடியாதது; அதை மனதில் கொண்டு வாழ்க்கையின் ஒவ்வொரு வினாடியையும் மிகவும் பயனுள்ள சிறந்த முறையில் கழிக்கவேண்டும்" என்பதே

அந்த உன்னதமான தத்துவம்.

இந்த ஐந்து தத்துவ போதனைகளையும் தீ மனித இனத்திற்கு போதிக்கிறது. இந்த போதனைகளுக்கு பஞ்சாக்னி வித்தை என்று பெயர். இந்த வித்தையைவிட மேலான ஒரு ஞானம் இல்லை. அதனால் தான் நெருப்பு எல்லா குருமார்களுக்கும் மேலான ஆசானாக புரோகிதராக கொள்ளப்படுகிறது. இந்த ஐந்து அறிவுரைகளையும் உணர்ந்து யாகம் செய்வதன் மூலம், ஒருவன் நெருப்பு வழிபாடு செய்து வருவானானால், அவன் எவருக்கும் கிடைக்காத மனநிறைவையும், அமைதியையும் அடைவான் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை.

தியாகம், தன்னடக்கம், கொடைப்பண்பு, தாராள மனப்பான்மை, இரக்கம் போன்ற உயர்ந்த பண்புகள் ஒவ்வொருவரிடமும் தோன்றி மனிதர்களின் நடைமுறை வாழ்க்கையில் இயல்பாக அமைந்துவிட வேண்டும். என்பது தான் யாகம் செய்வதன் நோக்கம். யாகம் அலையும் மனம், அறிவு, ஆணவம் முதலான எல்லா வற்றையும் கடவுளுக்கே அர்ப்பணம் செய்து விடச் செய்கிறது. எந்த ஒரு சாதகன் கடவுளிடம் முற்றிலும் சரணாகதி அடைந்து விடுகிறானோ அந்த சாதகனைப் புனிதநூல்கள் “யக்ஞ புருஷன்” என்றே குறிப்பிடுகின்றன. புனிதத்தீயில் இடப்படும் சமித்துகள் எல்லாம் எவ்வாறு யக்ஞத்தின் புனிதத்தீயாகவே மாறுகின்றனவோ அதைப்போல் பரப்ரம்மத்திடம் முற்றிலும் சரணாகதி அடைந்தவன் அந்த ப்ரம்ம நிலையையே அடைந்து விடுகிறான். உண்மையில் கடவுளுடைய அறிவுரைகளைப் பின்பற்றி அவர் இடும் கட்டளைகளை முழுமனதுடன் நிறைவேற்று வதுதான் யாகம்; அந்த யாக வாழ்க்கை ஆன்மாவையே புனித ஆன்மாவாக உயர்ந்த பண்புகளால் ஆனதாக மாற்றுகிறது. பக்தி ஈடுபாடு, ஆர்வத்துடன் ஆன்மீக உண்மைகளைக் கற்றறிதல், பற்றற்ற நிலையில் வாழ்ந்து

வருதல் இவைகளே ஆன்மாவை தெய்வீக ஒளிமிக்கதாக மாற்றும். இந்த மூன்று நெறிகளையும் கொண்டதாக அமையும் வாழ்க்கை வாழ்பவன் ஒவ்வொரு மனிதரிடமும் கடவுளைக் காண்கிறான். ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு பொருளிலும் கடவுளைக் காண்கிறான். அதாவது எக்காலத்திலும் எவ்விடத்திலும் கடவுள் தன் அருகில் இருந்துகொண்டு தன் செயல்களை கவனித்துக்கொண்டிருப்பதை உணர்கிறான். அதனால் தீய காரியங்களையும், பாவச் செயல்களையும் செய்ய அஞ்சுகிறான். அவன் வாழ்க்கை தீமை கலக்காத தூய வாழ்வாக புனித வாழ்வாக அமைகிறது.

யாகத்தில் பல நிலைகள் இருப்பதாக கீதை கூறுகிறது. தேவ யாகம், ஆத்ம யாகம், ப்ரம்ம யாகம், தவ யாகம், யோக யாகம், ஸ்வத்யாய யாகம், ஞான யாகம் என்பவை அவற்றில் சில. சுருங்கக் கூறினால் 'தன்னை உணர்வதற்கோ' அல்லது 'கடவுளை உணர்வதற்கோ' செய்யும் காரியும் எதுவானாலும் சரி; அதுவே யக்ஞமாகும். அக்னிஹோத்திரம் எனப்படும் புனிதத் தீ வளர்த்தல் யாகத்தின் முதல்நிலை; ஆரம்ப சடங்கு அல்லது புறச்செயல் என்று கூறலாம். ஆன்மீக யக்ஞம் என்னும் தெய்வநிலையை அடைதல் யக்ஞத்தின் முடிவான உயர்ந்த நிலை. ஒரு ஆன்ம சாதகன் முதலில் ஒரு தெய்வத்தின் சிலையை வழிபடத் தொடங்குகிறான். கொஞ்ச காலத்திற்குப் பிறகு அவன் எங்கும் நிறைந்துள்ள உருவமற்ற பரப்பிரம்மத்தை தியானம் செய்யத் தொடங்குகிறான். கடைசியில் அவன் யாகமயம் ஆகிறான். அதாவது கடவுளுடன் ஒன்று கலந்துவிடுகிறான்.

காயத்ரி சாதனை மனிதனின் உள்ளுணர்வுகளை தூய்மை செய்து வளர்க்கிறது. அந்த உள்ளுணர்வின் தூண்டுதலால் அவன் எல்லாம் வல்ல பரம்பொருளின் பாத கமலங்களில் சரணாகதி அடைந்து விடுகிறான். அதன்

மூலம் அவன் யாகமயன் ஆகின்றான். அதாவது கடவுளுடன் ஒன்று கலந்தவன் ஆகிவிடுகிறான். சுருங்கக் கூறினால், யாகம் ஒருவனிடம் உதவி செய்யும் மனப்பான்மை, கூட்டுறவுப் பண்பு, நேர்மை, மற்றவர்கள் நலனில் ஆர்வம், ஐம்புலனடக்கம், தியாக உணர்ச்சி, பரந்த மனப்பான்மை, ஆன்மீக உணர்ச்சி, ஆழ்ந்த பக்தி ஆகிய எல்லா பண்புகளையும் வளர்ந்து அவனை ஒரு தெய்வீக மனிதனாக உயர்த்துகிறது.



# 28. பிரம்மப் பிரசாதம்

ஆன்மீக வழிபாடுகளில் பக்தர்களுக்கு கடைசியில் பிரசாதம் வழங்குதல் ஒரு முக்கிய பகுதியாகக் கருதப் பட்டு வருகிறது. சத்யநாராயண கதாகாலட்சேபம் முடிந்தவுடன் பஞ்சாமிர்தம், பாஞ்சீரி ஆகிய பிரசாதங்கள் வழங்கப்படுகின்றன. யாகத்தில் பங்கு கொள்பவர் களுக்கு கடைசியில் ஏதாவது ஒரு இனிப்புப் பண்டம் வழங்கப் படுகிறது. கோவில்களில் தெய்வத்தின் அருள் சரணாமிர்தமாக (துளசி தீர்த்தமாக) பக்தர்களுக்கு வழங்கப்படுகிறது. பொதுவாக சுபநிகழ்ச்சிகளில் பங்கு பெறுபவர்கள் யாவரும் குறிப்பிட்ட சுபகாரியத்தின் பலனைப் பெற்று இன்புற வேண்டும் என்பதற்காக பிரசாதங்கள் வழங்கப்படுகின்றன. மேலும் பிரசாதம் ஒருவகை மகிழ்ச்சியையும் திருப்தியையும் அளிக்கிறது. இந்த மகிழ்ச்சியின் வாயிலாக தெய்வீக அம்சத்தில் ஒரு ஈடுபாடும், ஆழமான நம்பிக்கையும் உண்டாகின்றன. ஒரு பக்தனுக்கு பிரசாதம் மூலம் உண்டாகும் தெய்வப்பற்று கடைசியில் தெய்வபக்தியாக மாறி, அவன் தெய்வத்தின்

அருளை முழுமையாகப் பெறுவதற்கு உதவி செய்கிறது. அதனால்தான் தெய்வீக ஞானத்தை வழங்குபவர்கள் ஹரிகதை முதலான காலட்சேபங்கள் செய்பவர்கள் முடிவில் பிரசாதம் வழங்குவதை காலங்காலமாக, ஹரிகதையின் ஒரு முக்கிய அங்கமாகக் கருதி, செயல் படுத்தி வருகிறார்கள். அதனால் ஆன்மீகம் பரம்பரை பரம்பரையாக விரிவடைந்து வருகிறது.

காயத்ரி சாதனையே ஒரு யக்ஞம்தான்; உடலால் புரியும் செயல்கள் கர்மகாண்டங்கள்; யாகத் தீயில் இடப்படும் ஹவிஸ்கள் (அவி உணவுகள்) எல்லாம் வல்ல பரம்பொருளை இதயத்தில் நிலைபெறச் செய்தல் சூக்கும யாகம்; வெளிச்சடங்குகள் இல்லாத யாகம்; அது தீ வளர்த்து செய்யும் யக்ஞத்தை விட மேலான யாகம். இந்த சூட்சும யாகத்திலும் பிரசாதங்கள் வழங்கப்படுதல் ஒரு முக்கிய அங்கமாக உள்ளது. ஆனால் சாதாரணமாக பாதுஷா, லட்டு, ஹல்வா போன்ற பிரசாதங்கள் இதில் வழங்கப்படுவதில்லை. இதில் தெய்வீக ஆசியான பேரின்பமே பிரசாதமாக வழங்கப்படுகிறது. பிரசாதத்தை அளிப்பவள் காயத்ரியாகிய ப்ரம்மி சக்தி. அவள் அளிக்கும் பிரசாதம் பிரம்மி பிரசாதம். இந்த பிரம்ம தானமாகிய தெய்வீக வாழ்க்கையே காயத்ரி சாதனை எனும் யக்ஞத்தின் மூலம் சாதகன் பெறும் பிரசாதம். இதுவே மிகவும் பொருத்தமான, சாதகனின் தகுதிக்கு ஏற்ற பிரசாதம். ஒரு மனிதனை ஆன்மீகப் பாதையில் திருப்பிவிட்டு, அவன் நேர்மையான வாழ்க்கை வாழ ஒரு தூண்டு கோலாய் இருப்பதைவிட மேலான பிரசாதம் வேறு எதுதான் இருக்கமுடியும்?

உலகியல் இன்பத்திற்கும், ஆன்மீக இன்பத்திற்கும் அடிப்படையான காரணம் மனித மனத்தின் அடித்தளத்தில் உள்ள மனச்சான்றில் மறைந்துள்ளது. செல்வம் என்பது நாம் வாழும் இந்த பூமியில் இல்லை. இந்த பூமியின் மீது

கற்களையும், உலோகங்களையும் பிற உயிரற்ற ஜடப் பொருள்களையும் தவிர வேறு எதுவும் இல்லை. உண்மையான செல்வம் மனதின் ஆழத்தில் மறைந்து கிடக்கிறது. ஒரு மனிதன் அந்த செல்வத்தை மேலோட்டமாகப் பார்த்து விட்டால் கூட போதுமானது. அதன் பயனால் அவன் சச்சிதானந்தம் என்னும் அழியாத இன்பத்தை அடைந்து விடுகிறான். அந்த உண்மையான செல்வம் வைத்து பூட்டப் பட்டுள்ள பெட்டகத்தின் சாவி ஆன்ம சாதனையில்தான் உள்ளது. ஆன்ம சாதனையை பல வகைகளில் புரியலாம். அவற்றில் சிறந்த முறை காயத்ரி சாதனை. அதன் மூலம் கிடைக்கும் சித்திகளுக்கு அளவும் இல்லை; முடிவும் இல்லை. இந்த சாதனை ஒரு மனிதனை ஒழுக்கத்தில் சிறந்தவனாக மாற்றி அமைக்கிறது. அவனைப் பார்த்து மற்றவர்களும் ஒழுக்கசீலர்களாக மாற உதவுகிறது. இவ்வாறு ஒழுக்கசீலர்களால் ஆன ஒரு சமுதாயமே மலர்கிறது. அந்த சமுதாயத்தில் அமைதியும் இன்பமும் மலர்கிறது. அது விரிவடைய, விரிவடைய அமைதியும் இன்பமும் நிலையாக உள்ள ஒரு சுவர்க்க மாகவே இந்த உலகம் மாறுவதற்கான சூழ்நிலை உருவாகி விடுகிறது.

ஒவ்வொரு காயத்ரி சாதகனும், "பகவதி காயத்ரியை திருப்திபடுத்துவதற்காக மகா பிரசாதத்தை பிரம்ம பிரசாதத்தை எல்லோருக்கும் வழங்குவேன்" என்று உறுதி எடுத்துக் கொள்ளவேண்டும். காயத்ரி சாதனையின் ரகசியத்தையும், சிறப்பையும் மற்றவர்களை மனதில் பதியும்படி விளக்கிக் கூறவேண்டும். இதனால் கிடைக்கும் ஆன்மீக முன்னேற்றத்தை புரிந்து கொள்ள முடியாதவர்களுக்கு இதன் மூலம் கிடைக்கும் உலகியல் பேறுகளையெல்லாம் விளக்கிக் கூறி அவர்களின் மனதை ஆன்மீகப் பாதையில் திருப்பிவிட வேண்டும். அவர்கள் ஆரம்பத்தில் உலக இன்பங்கள் எல்லாம் கிடைக்க வேண்டும்

என்பதற்காக வேத மாதா காயத்ரியிடம் அடைக்கலம் புகுவார்கள். காலப்போக்கில் காயத்ரி சாதனையால் கிடைக்கும் நன்மைகள் பெருகிக் கொண்டே வருவதைக் கண்டு, இந்த சாதனையை எக்காலத்திலும் தவறாமல் செய்து வரவேண்டும் என்ற உறுதியான முடிவுக்கு வந்துவிடுவார்கள்.

துளசி தீர்த்தம், லட்டு முதலான சாதாரண பிரசாதங்களை விட இந்த பிரம்ம பிரசாதம் மிகவும் முக்கியம் வாய்ந்தது; சிறப்பு வாய்ந்தது. நாம் யாவரும் காயத்ரி சாதனை புரிந்து வேதமாதாவிடமிருந்து இந்த பிரம்ம பிரசாதத்தைப் பெற்று அதை பொருள் வடிவிலும், உழைப்பு, தொண்டு முதலியவற்றின் வாயிலாகவும் எல்லோருக்கும் வழங்கி வேதமாதாவின் அருளைப் பெறுவோமாக.



# 29. புது யுகத்தின் புதிய ஆதாரம்

காயத்ரியே ஆதிசக்தி; ஏனெனில் திருமாலின் உந்திக்கமலத்தில் தோன்றிய பிரம்மாவுக்கு இந்த மகா மந்திரமே ஆதாரமாக அளிக்கப்பட்டது. காயத்ரி வழிபாடும், காயத்ரி தவமும் செய்துதான், பிரம்மா எல்லா உயிருள்ள பொருள்களையும், உயிரற்ற பொருள்களையும் படைத்தார்.

இப்போது இந்த மகாசக்தியே புதுயுத்தின் ஆக்கசக்தி யாக மலர்ந்துள்ளது. ஏனெனில், நாம் வாழும் உலகின் காற்று மண்டலம் முழுவதிலும், மனிதர்களுக்கு என்று அமைந்துள்ள மற்ற எல்லா சூழ்நிலைகளிலும்

விஷத்தன்மை ஊடுருவிச் சென்று எல்லாவற்றிலும் கலந்துள்ளது; இந்த விஷத்தன்மை முற்றிலுமாக அகற்றப் படவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. இதற்கு உள்ள ஒரே மார்க்கம் காயத்ரி ஜபம் தான். ஜபத்தை ஒருவர் செய்தால் மட்டும் போதாது. அதை கூட்டு தவ ஒழுக்கமாக எல்லோரும் சேர்ந்து செய்யவேண்டும். இந்த புதிய யுகம் பிரக்யாவதாரமாக பிரக்ய இயக்கமாக மலர்ந்துள்ளது. வரப்போகும் புதிய யுகம் பிரக்ய யுகம். அதுவே யுகங்களில் மிகவும் புனிதமான சத்ய யுகம்.

இந்த புதிய யுகத்தில் என்னென்ன நிகழப் போகின்றன? எந்தெந்தக் கருத்துக்கள் பின்பற்றப்படப் போகின்றன? இவைகள் யாவும் காயத்ரி கீதை, காயத்ரி ஸ்மிருதி, காயத்ரி மஞ்சரி ஆகிய புனித நூல்களில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. இவை மூன்றும் இந்தி மொழியில் எழுதி வெளியிடப்பட்டுள்ளன "காயத்ரி மகா விக்ஞான்" என்ற நூலின் இரண்டாம் பாகத்தில் இணைக்கப்பட்டுள்ளன. அவைகளில் கூறப்பட்டுள்ள உண்மைகளின் சாரம் வருமாறு:

1. உலக மக்கள் யாவரும் ஒரே குடும்பமாக வாழ்வார்கள். 2. அப்பொழுது உலகம் முழுவதும் ஒரே நாடாக இருக்கும். 3. எல்லா மக்களும் ஒரே சமயத்தை பின்பற்றுவார்கள். 4. எல்லோரும் ஒரே மொழியைப் பேசுவார்கள். 5. உலகம் எங்கும் ஒரே பண்பாடு நின்று நிலவும். 6. அங்கே ஏழை பணக்காரர்கள் இருக்க மாட்டார்கள். 7. பூமாதேவியே எல்லோருக்கும் தாயாக இருப்பாள். 8. பூமியில் வாழும் மக்கள் யாவரும் ஒன்று பட்டு பூமாதேவி அளிக்கும் விளைபொருள்களைப் பகிர்ந்து கொள்வார்கள். 9. பொருளாதார ஏற்றத் தாழ்வுகளும், சமூக ஏற்றத் தாழ்வுகளும் முற்றிலும் அழிந்துவிடும். அவைகள் இருந்த இடம்கூட தெரியாத

அளவுக்கு மறைந்துவிடும். 10. ஒவ்வொருவரும் தங்கள் சக்திக்கு ஏற்ற அளவில் வஞ்சகமின்றி உழைப்பார்கள். அவர்களுக்குத் தேவையான அனைத்தும் பஞ்சமின்றி கிடைக்கும். 11. ஒவ்வொரு தனிமனிதனும் தன் உழைப்பில் கிடைத்த பொருளைக் கொண்டே வாழ்வான். 12. எந்த ஒரு மனிதனும் தவறான வழியில் கிடைக்கும் பணத்தைக் கொண்டு பிழைப்பு நடத்தமாட்டான். 13. எந்த ஒரு மனிதனுக்கும் பரம்பரை சொத்தில் உரிமை கொண்டாடும் சந்தர்ப்பம் இருக்காது. 14. எவரும் கேளிக்கைக் களியாட்டங்களில் வாழ்நாளை வீணாக்க மாட்டார்கள்.

15. எந்த ஒரு நாடும் தன் சுயநலத்திற்காக அண்டை நாடுகளை அடிமை நாடுகளாக்க முடியாத நிலை உருவாகி இருக்கும். 16. உலகம் முழுவதற்கும் பொதுவாக ஒரே நீதி முறை இருக்கும். (நாட்டுக்கு ஒரு நீதி என்ற நிலை இருக்காது) 17. உலகம் முழுமைக்கும் ஒரே ஒரு மத்திய அரசுதான் இருக்கும்; ராணுவப் படையும் ஒன்றுதான் இருக்கும். 18. பஞ்சாயத்துகளே ஊர் மக்களின் வழக்குகளை விசாரித்து தீர்ப்பளிக்கும். 19. ஒழுக்கக் கேடுகளை கட்டுப்படுத்துவது அரசாங்கத்தின் கடமையாக இருக்கும். 20. கொடூரச் செயல்கள், மூடநம்பிக்கை, விரும்பத்தகாத செயல்கள். பரம்பரையாக வரும் தீய பழக்கவழக்கங்கள் போன்றவை வேரோடு களையப் படும். 21. யாரும் தன் தனிப்பட்ட கஷ்டம் தீர்வதற்காக நீதிமன்றங்களில் வழக்கு தொடர வேண்டிய அவசியம் இருக்காது. 22. ஆண்களை விட பெண்களுக்கு சமூகத்தில் அதிக மதிப்பு இருக்கும். 23. குழந்தைகள் பிறத்தல், உலக மக்கள் தொகை அளவு ஆகியவை கட்டுப்பாட்டிற்குள் இருக்கும். 24. கல்வி, மக்கள் நலம் பேணுதல் முதலியவை மாநில அரசுகளில் பொறுப்பில் இருக்கும். 25. வயது முதிர்ந்தவர்கள்கூட தங்கள் சக்திக்கு இயன்ற அளவு

வேலை செய்வார்கள். 26. ஒவ்வொருவரும் எளிய வாழ்க்கை வாழ்வார்கள்; அவர்கள் எண்ணங்கள் யாவும் உயர்ந்தவைகளாக இருக்கும். 27. எல்லா மனிதர்களும் அவர்களுக்கு உரிய அடிப்படை உரிமைகளை பூரணமாக அடைந்து மகிழ்வார்கள். 28. குற்றவாளிகளுக்கு கடும் தண்டனைகள் விதிக்கப்படும்; குற்றம் புரிய யாருக்கும் தைரியம் வராது. 29. அலுவலகங்களில் குறிப்பிட்ட கால அளவுக்கே வேலை செய்ய வேண்டியிருக்கும். அதிகநேரம் வேலை செய்ய அவசியமும் இருக்காது; அனுமதியும் கிடைக்காது. 30. மக்கள் தங்கள் வாழ்க்கைத் தேவைகளுக்குப் போதுமான அளவுதான் பொருள் தேடுவார்கள். அதிகம் சம்பாதிக்க விரும்ப மாட்டார்கள். 31. அலுவல் நேரம் போக மீதி நேரங்களில் பொதுநலத் தொண்டு செய்வார்கள்; தங்கள் மனம், ஆன்மா முதலியவற்றைத் தூய்மையாக வைத்துக் கொள்ள பக்தி, யோகம், தவம் முதலிய நெறிகளில் ஈடுபடுவார்கள். 32. வயது முதிர்ந்து ஒய்வுபெற்ற பிறகும் ஏதாவது அன்பர் பணி செய்து கொண்டிருப்பார்கள்; வாழ்நாளை சோம்பிக் கழிக்க மாட்டார்கள். 33. ஒவ்வொரு மனிதனாலும் அவன் குடும்பமும், அவன் வாழும் சமூகமும் நன்மை அடையும். 34. அறிவியல் அறிவு உலகியல் சுகங்களைப் பெருக்கிக் கொள்வதை விட ஆன்மீக வளர்ச்சிக்கே அதிகமாகப் பயன்படும். 35. உலகியல் அறிவியலை விட ஆன்மீக அறிவியல் அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கும்.

இந்த புதுயுகத்தின் தோற்றம் சாஸ்திர ரீதியாக விளக்கப்படும்; அல்லது சத்திய யுகம் பிறக்கப்போவது தெய்வ வாக்காகவே அறிவிக்கப்படும்.



## நமது யுகநிர்மாணத்தின் தூய உறுதியான முடிவு

1. நாம் கடவுளை எல்லா இடத்திலும் நிறைந்திருப்பவராகவும், நியாய மூர்த்தியாகவும் ஒப்புக் கொண்டு அவரது ஆட்சியை நம் வாழ்க்கையில் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

2. சரீரத்தை கடவுள் இருக்கும் கோயிலாக எண்ணி சுய கட்டுப்பாடு, ஒழுக்கம்-இவற்றுடன் உடல் நலத்தை பேணி காக்க வேண்டும்.

3. மனதை தீய எண்ணங்கள் மற்றும் தீய பழக்கங்களிலிருந்து காப்பாற்றிக் கொள்ள சுய முயற்சி மற்றும் நல்ல நட்பை நாட வேண்டும்.

4. உணர்வுகளின் கட்டுப்பாடு, பணக் கட்டுப்பாடு, காலக் கட்டுப்பாடு மற்றும் எண்ணங்களையும் கட்டுப்பாட்டில் வைக்கப் பழக வேண்டும்.

5. எல்லோரும் தம்மை சமுதாயத்தின் ஒரு அங்கமாயும், எல்லோரின் நன்மையே தங்களுடைய நன்மையாகவும் நினைக்க வேண்டும்.

6. நம் பண்பாடுகளை பின்பற்றுவோம். ஒதுக்க வேண்டியவற்றை ஒதுக்கிடுவோம். குடிமக்களின் கடமையை செய்து, சமுதாயநலனில் அக்கரை வடிப்போம்.

7. அறிவு, நேர்மை, பொறுப்பு, வீரம் - இவை வாழ்க்கையின் பிரிக்க முடியாத அம்சங்களாக நினைப்போம்.

8. நம்மைச் சுற்றி நாலா பக்கமும் இனிமை, சுத்தம், எளிமை மற்றும் பெருந்தன்மை ஆகியவற்றைப் பரப்புவோமாக !

9. அநீதியால் கிடைக்கும் வெற்றியைவிட, நீதியைக் கடைப் பிடிப்பதால் வரும் தோல்வியையே மனதார ஏற்போம்.

10. மனிதனை அவனுடைய வெற்றிகளும், யோக்கியதையும் மற்றும் அந்தஸ்தையும் வைத்து

அல்லாமல் அவனுடைய நல்லெண்ணங்கள் மற்றும் நல்ல காரியங்களை வைத்து மதிப்பிடுவோமாக !

11. நமக்கு பிடிக்காதவற்றை பிறர் மீதும் திணிக்க மாட்டோம்.

12. ஆணும், பெண்ணும் புனிதமான நோக்கத்துடன் பழக வேண்டும்.

13. உலகத்தில் நல்ல இயல்புகளின் புண்ணிய பிரசாரத்திற்காக நம்முடைய காலம், திறமை, அறிவு, பணம் - ஆகியவற்றில் ஏதாவது ஒரு பகுதி இயன்ற அளவு செலவழிக்க வேண்டும்.

14. நமது பாரம்பரியமாக வரும் விவேகத்தை மகத்துவம் வாய்ந்ததாக கருத வேண்டும்.

15. நல்லோர்களை சேர்த்து அநீதியை எதிர்த்து புதிய படைப்பின் நிர்மாண் காரியத்தில் பூரண ஆர்வத்தை காட்ட வேண்டும்.

16. தேசீய ஒற்றுமையை வளர்ப்போம், ஜாதி, இன, மதம், மொழி, சம்பிரதாயங்களின் வேற்றுமைகளை கொண்டாட மாட்டோம்.

17. மனிதன் தன்னுடைய அதிர்ஷ்டத்தை அவன்தான் அமைத்துக் கொள்கிறான். இந்த நம்பிக்கை வைத்துக் கொண்டு மனிதன் உன்னதமானவனாக இருக்க வேண்டும் மற்றும் பிறரையும் உன்னதமானவர்களாகச் செய்வோம். இதனால் யுகமும் கட்டாயம் மாறும்.

18. நாம் மாறுவோம் உலகம் மாறும்
நாம் திருந்துவோம் உலகம் திருந்தும்
- இந்த கருத்தின் மேல் எங்களுக்குப் பூரண நம்பிக்கை உண்டு.



## எமது இதர படைப்புகள்

1. தைரியம் இழக்காதீர்கள்
2. மனத்தின் சமநிலை
3. இளைஞர் சக்தி மேல் நம்பிக்கை
4. தன் வலியறிதல்
5. ஆன்மீக வழியில் வாழ்க்கை
6. அன்னை சக்தியின் அமுத மொழிகள்
7. புகையிலை ஒரு கொடிய பழக்கம்
8. நான் என்றால் என்ன ?
9. சத்திய உலகின் மறுமலர்ச்சி

தலைமையகம் : **காயத்ரி தீர்த்தம்,**

**சாந்தி குஞ்ச்**

**ஹரித்வார், உத்தராஞ்சல்_249411**

**Ph : 01334 - 260602, 261328, Fax : 260866, Web : www.awgp.org**

ஈ மெயில் : **shantikunj@awgp.org, southindiazone@awgp.org**

அச்சிடுபவர்: காயத்ரி தபோபூமி,

மதுரா(உ.பி.)

**Pin : 281003, Ph : 0565- 2530128, 2530399, Fax : 2530200**

*கிடைக்குமிடம் :* யுக சக்தி காயத்ரி கேந்திரா

சென்னை. ஃபோன் : **(044)26454109**

**E-mail : yugsaktikendra@rediffmail.com**

**year - 2006** விலை– ரூ. **28.00**

**Printed by : Yug Nirman Yojana Press, Mathura**

# யுக உருவாக்கத்தின் நல்லுறுதிமொழி

1. எங்கும் நிறைந்துள்ள இறைவனின் நீதியில், உன்னத நம்பிக்கை வைத்துள்ள நாங்கள், வாழ்வில் அவர் காட்டும் ஒழுங்குகளைப் பின்பற்றஉறுதி எடுக்கின்றோம்.
2. இறைவன் கோயில் கொண்டுள்ள இடம் இவ்வுடடல் என்பதால், நல்ல உடல்நலம் காக்க, சுயகட்டுப்பாடும், ஒழுங்கும், வாழ்வில் கடைபிடிக்க உறுதி கொள்வோம்.
3. தீய எண்ணங்கள், தீய செயல்கள் இவற்றிலிருந்து எங்கள் மனத்தைக் காத்து, தொடர்ந்து தகுந்த இலக்கிய நூல்களைப் படிப்பதால் எங்கள் ஒழுக்க நிலைகளை மேம்படுத்துகிறோம். அத்துடன், சான்றோருடன் தொடர்பு கொள்ள வழி காண்போம்.
4. சமுதாயத்தின் பிரிக்க இயலாத ஓர் அங்கமாக எங்களைக் கருதுவதுடன் எல்லோருடைய நலங்களில், எங்கள் நலத்தைத் தேடுவோம்.
5. ஒழுக்க நெறி விதிகளுக்கு, நாங்கள் கட்டுப் படுவதுடன் தடை செய்யப்பட்ட தீய செயல்களிலிருந்து விலகி இருப்போம். குடி மக்களின் கடமைகளைப் பின்பற்றுவதுடன், சமுதாய நலனில் நம்பிக்கை வைப்போம்.
6. அறிவுக் கூர்மை, நேர்மை, பொறுப்புணர்ச்சி, தீரம் என்றஇவை யாவும், எங்கள் வாழ்வில் முக்கிய இடம் உடையன என்று நினைப்போம்.
7. பரஸ்பர நல்லெண்ணம், தூய்மை, பணிவு, மரியாதை ஆகியவற்றைவளர்ப்பதுடன், இத்தகைய நல்ல சூழ்நிலை தொடர, எல்லா விதத்திலும் முயற்சி மேற்கொள்வோம்.
8. தவறான வழிகளில் வெற்றி தேடாது, அறநெறியில் ஒழுகும் போது, தோல்விகள் வரினும், வரவேற்போம்.
9. ஒரு மனிதனின் தகுதியை, அவன் அடையும் வெற்றி, திறமை, சுகங்களின் வகைகள், இவற்றைக் கொண்டு மதிப்பிடாது, அவனுடைய எண்ணங்களின் உயர்வு, செயல்களின் சிறப்பைக் கொண்டே மதிப்போம்.
10. நாங்கள் எப்படிப் பிறரால் நடத்தப்படக் கூடாது என்று கருதுவோமோ, அதைக் கருத்தில் வைத்துப் பிறரிடம் நாங்கள் நடந்து கொள்வோம்.
11. மகளிரும், ஆடவரும் தெய்வீக உறவுகளைக் காத்திடுவதில் கவனம் கொள்வர்.
12. இவ்வுலகில் நல்ல இலட்சியங்கள் நிறைவேற, நாங்கள் தவறாமல் எங்கள் நேரம், செல்வாக்கு, ஞானம், முயற்சி வளம் ஆகியவற்றைத் தருவோம்.
13. நம் நாடுகளைக் காப்பதில் வலிமையுடன் இருப்போம்.
14. நியாயம் வேண்டுவோரை ஒன்றுபடுத்துவோம். வளர்ச்சிக்கு ஏற்றசெயல்முறைகளை வெற்றி பெறச் செய்வோம்.
15. தேசிய ஒற்றுமை, சமத்துவம், மக்களிடையே ஏற்பட உண்மையுடன் உழைப்போம். சாதி, பால் வேற்றுமை மொழி, மாநிலம், இனம் காரணமான வேறுபாடுகளைத் தவிர்ப்போம்.
16. மனிதன் தன் விதியைத் தானே நிலைநாட்டும் தலைவன் என்று நம்புவதுடன் தானும் பிறரும் வளர்ச்சி பெறஉழைப்பதால், உலகம் முன்னேறிடப் பணி செய்வோம்.
17. தனி மனிதன் மாறினால் சமுதாயம் மாறும் என்று நம்புவோம். தனி மனிதன் திருந்துவதால் உலகமே திருந்தும்.
18. மனித குலம் வெற்றி பெற, தூய எண்ணங்கள், தூய்மையான செயல்கள் என்பவையே அடிப்படை, என்று அறிந்து செயல்புரிவோம்.

TM 07